## எத்தனை 'நவ'ங்கள்!



## மற்ற நவராத்திரி ஸ்பெஷல்...




# மங்கையர் மலர்

அக்டோபர் '97 மலர் : 17 இதழ் : 9

# கல்கி

5.10.97

இதழில்....

- கிருஷ்ணா நீர் சென்னைக்கு வருகிறதா?
  – ஸ்பெஷல் ரிப்போர்ட்
- மூட்டுவலி வருவதேன்?
  – டாக்டர்கள் பேட்டி
- சென்னையில் ஒரு கிராம வாழ்க்கை!




## கதைகள்



## நீங்கள் ஆவலுடன் படிக்கும்...



## கொஞ்சம் வித்தியாசமாக....

# பெண் பப்பாளியா, காஷ்மீர் ரோஜாவா?

## ...சில வார்த்தைகள்

மஞ்சுளா ரமேஷ்



பெண் இன்றைக்கு எத்தனை முன்னேறி இருக்கிறாளோ, அத்தனைக்கத்தனை பெண் என்ற உடல்ரீதியான காரணத்திற்காகவே சீரழிவதும் அதிகமாக இருக்கிறது.

தினம் தினம் வருகின்ற செய்திகளில் பெரும்பாலானவை சில சாமியார்களும், சில போலீஸ்காரர்களும் பெண்ணை மானபங்கப்படுத்திய செய்திகள்தான். இதைப் பற்றி மற்றவர்களோ, பாதிக்கப்பட்டவர்களோ கொடுக்கின்ற விலாவாரியான பேட்டி.....

என்ன திரைப்படம் என்று நினைவில்லை, அந்தப் படத்தில் கதாநாயகி சொல்வாள்; "அந்தப் பெண்ணை அவன் ஒருமுறைதான் கற்பழித்தான். ஆனால் செய்திகளில் இதை விலாவாரியாகச் சொல்லிச் சொல்லியே லட்சக்கணக்கானவர்கள் மானசிகமாக அவளை கண்டுகளித்தார்கள்" என்று.

அப்படித்தான் இன்று ஆகிவிட்டது. சாமியார் எப்படியெல்லாம் தன்னை உபயோகித்துக் கொண்டார் எனச் சிறுவர்களின் பேட்டி ஒரு பக்கம். போலீஸ் நிலையத்திற்குப் போன பெண்ணை எந்த வகையில் மானபங்கப் படுத்த முயன்றார்கள் என அபலையின் கண்ணீரும் கம்பலையுமான பேட்டி ஒரு பக்கம். படத்திலே அவள் முழு உடையில் இருந்தாலும் படிக்கும்போது திரைப்படம் போல அல்லவா நிகழ்ச்சிகள் ஓடும்?



இந்த 'அபலை'களின் கண்ணீருக்கு அடுத்த பக்கம் திருப்பினாலோ, அடுத்த சானலைத் திருப்பினாலோ தொடை வரை மினி ஸ்கர்ட்டுடன் 'புதுயுகப் பெண்'களின் படங்கள். மனசு ஏன் கெட்டுப் போகாது? யாரை நோக, என்ன சொல்ல என்றுதான் தெரியவில்லை.

சமுதாயத்திலேயோ இன்றைய இளம்பெண்களின் எழுச்சி அற்புதமாக இருக்கிறது. படிப்பா, வாகனம் ஓட்டுவதா, வேலை செய்வதா எல்லாவற்றிலும் அவர்களின் முன்னேற்றத்தைப் பார்க்கும்போது கண்கள் ஆனந்தப் பரவசத்தால் பனிக்கிறது. அவர்களின் அறிவுக்கூர்மையும், பக்குவமான பேச்சும், 'அடேடே, என் செல்லப் பெண்களா' எனப் பாராட்டத் தோன்றுகிறது.

ஆனால் பெண்களை கொச்சையாக வெளிப்படுத்தி 'உடலாகவே' அவர்களை 'வெளிச்சம் போடுபவர்களை என்ன செய்வது? 'ஐயா நாங்கள் இன்னும் பெண் எனும் உடல் அல்ல. உங்களைப் போன்ற சிந்திக்கும், சாதிக்கும் உயர்ந்த ஆத்மா' என எந்தக் கோயிலில் இவர்களை இழுத்து வைத்து சத்தியம் பண்ண?

ஒருவர் சொல்லிக் கொண்டிருந்தார், 'ஆண்கள் என்ன போராட்டம் பண்ணா

லும் சர்தான் போ என்று சொல்லி விடுவார்கள். அதுவே தண்ணீர் வரவில்லையென்று பெண்கள் குடத்தை வைத்துக் கொண்டு சாலைமறியல் பண்ணட்டும். உடனே கலெக்டரும் தாசில்தாரும் ஓடி வருவார்கள்' என்று.

அதே போன்ற உத்தியை இந்தச் சீரழிந்து போகும் போக்கிற்குச் செய்தால் என்ன? ஜனநாயக மாதர் சங்கம் இரண்டு மிகப் பெரிய வெற்றிகளை சமீபத்தில் அடைந்திருக்கிறது. பிரேமானந்தாவின் வழக்கும், பத்மினியின் வழக்கும் இவர்களுடைய முயற்சியில் வெளிச்சத்துக்கு வந்தவைதான். தொடர்ந்த அவர்களுடைய அயராத போராட்டத்தினால்தான் பிரேமானந்தாவிற்குத் தகுந்த மிகப் பெரிய தண்டனையும், பத்மினியைச் சேதப்படுத்தியவர்களுக்குத் தண்டனையும் கிடைத்தது.

இதே போல ஆங்காங்கே பெண்கள் நிவாரணக் குழு இருக்குமானால் எவ்வளவோ நன்றாக இருக்கும். சில முறையற்ற காவல்காரர்களிடம் மாட்டுவது படிக்காத பாமரப் பெண்களே. படித்த பெண்கள் சில சாமியார்களிடம் மாட்டுகிறார்கள். எனவே ஒவ்வொரு பகுதியிலும் இத்தகைய சக்திவாய்ந்த குழுக்கள் இருக்குமானால் சந்தேகத்திற்கிடமாக ஏதேனும் தங்கள் பகுதியில் இருந்தால் உடனே அவற்றை வெளிச்சத்திற்குக் கொண்டு வரலாமே! நடு இரவானாலும் தங்களுக்கு அங்கு சென்றால் பாதுகாப்பு கிடைக்கும் எனும் ரீதியில் பலம்வாய்ந்த அமைப்பு இருக்குமானால் இத்தகைய குற்றங்களில் பலவற்றை ஆரம்ப நிலையிலேயே களைந்து விடலாம்.

தமிழக முதல்வர் அரசு சார்பாகவே கூட இப்படிப்பட்ட பெண்கள் குழுக்களை அமைக்கவோ, அல்லது அப்படிச் செயல்பட விரும்பும் மாதர் சங்கங்களை ஊக்குவிக்கவோ செய்யலாம். சமீபத்தில் காவல் துறையைப் பற்றி அவரே மனம் வருந்திப் பேசியிருக்கிறார். அதற்கப்புறமும் இரண்டொரு சம்பவங்கள் அவ்வாறு நடந்திருப்பதாகச் செய்தித்தாள்களில் வந்திருக்கின்றன.

இந்த நிலையில் 'பெண்களின் பாதுகாப்புக் குழு' ஒன்றைப் பற்றி அவர் சிந்தித்துச் செயல்படுத்துவாரேயானால் எவ்வளவோ நன்றாக இருக்கும்.

கம்ப்யூட்டரைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் பெண்ணைப் பார்த்து 'நீ டப்பாளிப் பழம்', 'காஷ்மீர் ரோஜா கன்னம்' எனப் பேசுவதை எப்போது நிறுத்தப் போகிறார்களாம்?

குழந்தைகள் காபி கேட்டால்
மொறு மொறு ப்ரூ குக்கீஸ் தந்திடுங்கள்!




மொறு மொறு ப்ரூ குக்கீஸ் தயாரிக்கத் தேவை:
அறையின் சீதோஷ்ண நிலையில்

| | | |
|---|---|---|
| உப்பிடாத வெண்ணெய் | - | 3/4 கோப்பை |
| பொடிசெய்த சர்க்கரை | - | 1 1/2 கோப்பை |
| முட்டை | - | 1 |
| முட்டைக் கரு | - | 1 |
| ப்ரூ ரிச் பேஸ்ட் | - | 2 1/2 டீஸ்பூன் |
| துருவிய சாக்லேட் | - | 1 டேபிள்ஸ்பூன் |
| உப்பு | - | 1/4 டீஸ்பூன் |
| மைதா | - | 2 1/2 கோப்பை |

ஓவனை 180° / 350°F உஷ்ணத்தில் முன்பே சூடாக்கவும். எலக்ட்ரிக் பீட்டர் அல்லது மிக்ஸி கொண்டு வெண்ணெயுடன் சர்க்கரை, முட்டை, முட்டைக்கரு, ப்ரூ, சாக்லேட், மைதா என்ற வரிசையில் ஒவ்வொன்றாகச் சேர்த்து அடிக்கவும். பிறகு கலவை கெட்டியாகும் வரை கலக்கவும். வெளியில் எடுத்து உருண்டையாகப் பிசையவும். கிரீஸ் ப்ரூஃப் பேப்பரில் சுற்றி, 45 நிமிடம் குளிர வைக்கவும்.

பின், மாவு தூவி, இந்த கலவையை 4 மி.மீ கனத்துக்கு பரப்பவும். உங்களுக்குப் பிடித்த போல சதுர அல்லது முக்கோண வடிவத்தில் பிஸ்கெட் கட்டர் அல்லது கத்தி கொண்டு செய்து 8 நிமிடம் அல்லது லேசான நிறம் வரும் வரை பேக் செய்யவும். குளிரவைத்து, கிரீம் கலந்த காபி / சாக்லேட், முந்திரி பருப்பு கொண்டு அலங்கரிக்கலாம் அப்படியே பரிமாறினாலும் அற்புதச் சுவையுடன் இருக்கும்.

இனி வீட்டில் ஜாலி ஜாலி மொறு மொறு ப்ரூ நேரம்தானே! உங்கள் குழந்தைகளுக்குப் படு குஷியாக இருக்கும்!




பில்டர் காபியைப் போன்றே சுவையானது

# KP
## Premium Coconut Oil

வளமான கேசத்திற்கு
சுத்தமான தேங்காய் எண்ணெய்!




இப்போது
குறைந்த விலையில்
100, 200, 500
மற்றும் 1 லிட்டர்
பவுச் பேக்குகளில்







**K.P. Oil Mills**
N-2, Sudarsan Gardens, 102, Velachery Road,
Guindy, Chennai - 600 032. Ph: 2354668

# நூறு பேர் பரிசு பெறுகிறார்கள்!



ங்கையர் மலர் & பி. கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸ் இணைந்து நடத்திய 'புடவைப் பரிசுப் போட்டி'யில் (புடவையின் விசேஷம் பற்றி பக். 17ல் செய்தியுள்ளது) பரிசு பெற்றவர்களைக் குலுக்கல் முறையில் தேர்ந்து எடுக்க முடிவு செய்தோம். 17.9.'97 அன்று மங்கையர் மலருக்கும், மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸுக்கும் வந்திருந்த ஆயிரக்கணக்கான கடிதங்களையும் ஒன்றாகச் சேர்த்துக் குவித்தோம்.



அன்றைக்கு மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸிற்கு வந்திருந்த வாடிக்கையாளர்களுக்கு வாசகர்களைத் தேர்ந்தெடுக்கும் வாய்ப்பு கிடைத்தது. தாமோதரமேனன் சத்தியா தம்பதிகள் முதலில் தேர்ந்தெடுக்க, பிறகு கார்த்தீஸ்வரி, பரமேஸ்வரி, பிரேமாவதி, லலிதா சங்கரன், கண்ணா, அசோக் கன்னா, சிறுவன் நித்தின் பாலாஜி, காயத்ரி ஆகியோர் தேர்ந்தெடுத்தார்கள். பிறகு அங்கு பணிபுரியும் அன்பர்களான பழனியப்பன், சுப்பிரமணி, கிருஷ்ணன், ஆறுமுகம், ஜெயராமன் ஆகியோரும் கைகொடுத்தார்கள். உரிமையாளர் நாகஜோதியின் தாயார் பாக்கியத்தம்மாளும் கலந்து கொண்டார். அனைத்தையும் வாங்கி சரிபார்த்த திருமதி நாகஜோதி நூறு பேர்களின் கடிதங்களையும் நம்மிடம் தந்தார்.

பரிசு பெற்றவர்கள் அனைவருக்கும் தனிப்பட்ட முறையில் கடிதங்கள் அனுப்பப்பட்டுள்ளன. சென்னையில் உள்ளவர்கள் மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸிற்குச் சென்று வாங்கிக் கொள்ளலாம் என்றும், மற்றவர்களுக்குத் தபால் மூலம் அனுப்பப்படும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.



பரிசு பெற்றவர்கள் :

1. ஜி. வி. லோகநாதன், சென்னை – 18.
2. ஆர். சுபா, கல்லிடைகுறிச்சி.
3. அம்பிகா விஸ்வநாதன், கோயம்புத்தூர் – 22.
4. எஸ். என். லக்ஷ்மி, சீர்காழி - 110.
5. சொர்ணாம்பாள், சென்னை – 28.
6. வி. ஆர். அனிதா, சென்னை – 64.
7. ஜி. லலிதா, திண்டுக்கல் – 3.
8. உமா வெங்கடேஸ்வரன், சென்னை – 91.
9. பி. கருப்பம்மாள், ஈரோடு.
10. மங்களம் கோபாலன், சென்னை – 63.
11. ராகவி, ராணிப்பேட்டை – 402.
12. ராதா வள்ளிநாயகம், சென்னை 40.
13. எஸ். உமா, திருச்சி – 14.
14. ஆர். நாமகிரி, கோயம்புத்தூர் – 4.
15. எம். விஜயலட்சுமி, சென்னை – 44.
16. சி. எம். வசந்தகுமாரி, சென்னை – 2.
17. எஸ். தாட்சாயிணி, சென்னை – 69.
18. கமலாக்ஷி ராமசுப்பிரமணியன், கோயம்புத்தூர் – 25.

# ஒற்றுமையே வாழ்வின் சாராம்சம்



**குடும்பப் பிணைப்பு**

குடும்ப அங்கத்தினர் அனைவரது பாதுகாப்பையும் கருத்தில் கொண்டு ஒவ்வொருவரும் மற்றவர்களின் மேன்மைக்காக உழைக்கும், நம்பிக்கைதரும் ஒரு அரிய உணர்வு.

நட்புணர்வு. ஒன்றுபடச் செய்யும் ஒரு உணர்வு. வாழ்வை அர்த்தமுடையதாக்கி ஒளிரச் செய்வது அது. நாளையத் தேவைகளான திருமணம், கல்வி இன்னும் பிற சுப காரியங்களுக்காகவும் திட்டமிட்டு சேமித்து எதிர்காலத்தை வாழ்வதற்குகந்த, பாதுகாப்புமிக்க இடமாக்குவதும் அதுவே. முக்கியமாக, சேமிப்பதற்கும், தேவை ஏற்பட்டால், உங்களது பணத்திலிருந்தே பெருமையுடனும் உரிமையுடனும் கடன் பெற்றுக் கொள்வதற்கும் ஏதுவாக அரியதொரு வசதியைத் தருகிறது. வாழ்க்கையை நம்பிக்கையுடன் எதிர்கொள்ளும் வாய்ப்பை நல்குகிறது.




ராம் காஷ்யப். உங்களது தேவைகளை புரிந்து கொள்கிறது. அத்துடன் அவற்றை நிறைவேற்றும் வழி முறைகளைத் தனது பல்வேறு சீட்டுத் திட்டங்கள் மூலம் அளிக்கிறது. இத்திட்டங்கள் வாடிக்கையாளர்கள் மற்றும் நிறுவனத்திடையே நெருக்கத்தை ஏற்படுத்தி வாடிக்கையாளரின் தேவைகளைப் புரிந்து கொள்ளவும் தக்க சமயத்தில் அவற்றை நிறைவேற்றி வைக்கவும் வகை செய்கிறது. நிலையில்லாததோர் உலகினிலே பாதுகாப்பான ஒரு நங்கூரம் ராம் காஷ்யப் சிட்ஸ். எதிர்காலத்திற்காக முதலில் திட்டமிடுவது, பின் உடனேயே சேமிப்பில் இறங்குவது என்ற கருத்தினை உருவாக்கியவர்கள்.

**Ram Kaashyap Chits**

Member Ram Kaashyap Group

சீட்டு திருவிழா
1997 அக்டோபர்
1 முதல் 31 வரை

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தீர்வு**

**ராம் காஷ்யப் சிட்ஸ் பிரைவேட் லிமிடெட் நிர்வாக அலுவலகம் :**
14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017. போன் : 4341513, 433004

**கிளைகள் : சென்னை :** ஆழ்வார்பேட்டை போன் : 4970205, மேற்கு மாம்பலம் போன் : 4896638, அண்ணா நகர் கிழக்கு போன் : 610979, அடையாறு போன் 418081, தி.நகர் போன் : 4323437, நங்கநல்லூர் எண்.2, மூன்றாவது மெயின் ரோடு, சென்னை 600 061, **கோயம்புத்தூர்** போன் : 235865, **ஈரோடு** போன் : 79822, **சேலம்** போன் : 418171, **கும்பகோணம்** போன் : 30246, **தஞ்சாவூர்** போன் : 25871, **திருச்சி** போன் : 704752, **மயிலாடுதுறை** 46 எண்.2 ரோடு, (காந்தி ரோடு) மயிலாடுதுறை 609 001, **திருவாரூர்** போன் : 20895, **மதுரை** போன் : 747727, **திண்டுக்கல்** போன் : 34218, **திருநெல்வேலி** போன் : 333808, **காரைக்குடி** எண்.1. T.T. நகர் முதல் தெரு, S.K.N. பில்டிங்ஸ் (கீழ்தளம்) காரைக்குடி 630 001

**நம்பிக்கை பொருளாதார சுதந்திரத்திற்கு அமைத்திடும் பாதை**

19. ஜானகி நடராஜன், நெய்வேலி – 1.
20. ஜி. லலிதா, ஈரோடு – 1.
21. விஜயலட்சுமி கிருஷ்ணன், வாரணாசி - 5.
22. ஆர். ஜெயபாரதி, தேனி – 16.
23. கிருஷ்ணவேணி, சென்னை – 10.
24. செல்லம் நடராஜன், சென்னை – 87.
25. ஜி. பூர்ணிமா, சென்னை – 88.
26. லலிதா சுப்ரமணியன், திருச்சி – 21.
27. எஸ். புவனா, சென்னை – 33.
28. கீதா சுப்ரமணியம், திருவனந்தபுரம்.
29. ஆர். டி. மஹிமாவதி, சென்னை – 5.
30. சாரதாம்மா, சென்னை – 93.
31. கே. பிரபா, கோயம்புத்தூர் – 29.
32. விஜயா ஸ்ரீனிவாசன், திருச்சி - 13.
33. பி. சோமசுந்தரி, சென்னை – 33.
34. கே. மோகனா, புதுதில்லி – 19.
35. ஏ. தேவானை, சென்னை – 53.
36. சி. பரிமளம், கோயம்புத்தூர் – 16.
37. உமா முரளி, சென்னை – 24.
38. சுருதி, சென்னை – 4.
39. வி. கண்ணகி, பொறையூர்.
40. வி. ஸ்ரீதேவி, சென்னை – 73.
41. என். சாவித்திரி அம்மாள், ஒசூர் – 109.
42. எம். கே. பிரேமா, சென்னை – 62.
43. என். ராஜலட்சுமி, சிதம்பரம் - 1.
44. பி. பத்மா, திண்டுக்கல்.
45. எஸ். கல்யாணி, சென்னை – 58.
46. சரோஜா நாராயணன், பெங்களூர் – 86.
47. பி. சுப்ரமணியம், சிதம்பரம் – 1.
48. கீதா, சென்னை – 78.
49. ஆர். விசாலாக்ஷி, சேலம் – 9.
50. சரஸ்வதி ஸ்ரீனிவாசன், சென்னை – 15.
51. என். வரதராஜன், சென்னை – 92.
52. எம். பரமேஸ்வரி, திண்டுக்கல்.
53. எஸ். சாவித்திரி, சென்னை – 113.
54. எஸ். புஷ்பவல்லி, திருநெல்வேலி – 11.
55. ஆர். ரமணி பாய், வேலூர் – 1.
56. கீதா சேஷாத்ரி, சென்னை – 17.
57. கே. அனிதா, திருவள்ளூர் மாவட்டம்.
58. பி. பத்மா, சென்னை – 20.
59. பாமா விஸ்வநாதன், சென்னை – 53.
60. ஜே. சுகுணா, திருப்பூர் – 4.
61. கே. சுசீலா, பெங்களூர் – 17.
62. கே. தேவிகா, சென்னை – 78.
63. ஜே. லலிதா, சென்னை – 80.
64. சி. யசோதா, சென்னை – 73.
65. உஷா ராஜூ, சென்னை – 41.
66. ரெங்கநாயகி ராஜன், தாணே –601.
67. கௌரி பாஸ்கரன், மும்பை - 64.
68. டி. விஜயலட்சுமி, சென்னை – 40.
69. வள்ளியின் செல்வி, அகமதாபாத்.
70. ஜி. ஷகீலா, சென்னை – 58.
71. பி. ஜெயகுரு, ஆலங்குளம்.
72. பிருந்தா சீதாராமன், சென்னை – 4.
73. கே. பாண்டிகண்ணு, சிவகங்கை.
74. கீதா அனந்தகிருஷ்ணன், பாண்டிச்சேரி.
75. எம். முத்துலட்சுமி, சென்னை – 83.
76. ரம்யா பார்வதி, சென்னை – 34.
77. ஆர். பாலா, சென்னை – 28.
78. இந்திரா எஸ். ராவ், கோயம்புத்தூர்.
79. ஆர். அலமேலு, சென்னை – 70.
80. வி. ஜான்சி ராணி, மதுரை – 10.
81. நாகலட்சுமி ஸ்ரீதரன், அரக்கோணம்.



82. சுந்தரி துரை, ஹைதராபாத்.
83. நாராயணன் மைதிலி, சென்னை – 4.
84. எஸ். கிருஷ்ணவேணி, ஒசூர்.
85. வி. ருக்மணி, சென்னை – 30.
86. ஓ. வி. சுப்ரமணியம், சேலம்.
87. எஸ். கீதா, சென்னை – 28.
88. உமா ஹரிஹரன், மங்களூர் – 1.
89. நவஜோதி, திருச்சி – 20.
90. எஸ். ஜெயலட்சுமி, சென்னை – 61.
91. எஸ். சுதா, திருச்சி – 6.
92. வி. காயத்ரி, சென்னை – 4.
93. ஆர். ஜெயஸ்ரீ, சென்னை – 14.
94. ஆர். ஜெயலட்சுமி, காரைக்குடி.
95. எஸ். பிச்சு அம்மாள், சென்னை – 28.
96. சுதா ரேவதி, சென்னை – 28.
97. கே. எஸ். சரோஜினி, சென்னை – 28.
98. கே. நீலா, சென்னை – 89.
99. டி. எஸ். சாவித்ரி, திருச்சி – 21.
100. சரோஜா, சென்னை - 18.

படங்கள் : ராஜூ நாராயண்

✉ புடவை அணிந்து கம்ப்யூட்டரில் பார்க்கலாம் என்று படித்தவுடன் கண்ணாடியில் பார்க்கலாம் என்று நினைத்து முழுக் கட்டுரையையும் படித்த வுடன் வியப்படைந்தேன். இப்போது கம்ப்யூட்டர் யுகம். கம்ப்யூட்டர் சாஃப்ட்வேர் மூலம் என் னென்ன செய்யலாம் என்பதை படித்து ஆச்சரியம் அடைந்தேன். பெண்களால் வித்தியாசமாகவும் சாதிக்க முடியும் என்பதற்கு உதாரணம் வைஜெயந்தி சிவா.
கடலூர் - 1, ரா. மஞ்சுளா.

✉ மூதாட்டி என்று சொல்ல இயலாமல் இளமை யாகவே சுறுசுறுப்பாகத் தன் கல்விப் பணி ஆற்றி வரும் திருமதி. சந்திரகாந்தி அம்மாவின் நேர் காணல் அருமை. அவர் கல்லூரியில் 77 - 79களில் மாணவியாக இருந்த எனக்கு மிகவும் பெருமையாக உள்ளது. அக் கட்டுரையின் இடையே ஒரு புகைப் படத்தில் இருக்கும் முதல்வர் W. T. வசந்தா அவர் கள் "முதல்வர் விருது" பெறும் பெருமைக்கு ஆளா கிறார். சந்திரகாந்தி அம்மாவின் கல்லூரியில் படிக் கும் மாணவிகள் மட்டுமல்லாமல், பணிபுரியும் ஆசிரியப் பெருமக்கள் முதல்வர் ஆகியோரும் பெருமைக்குரியவர்களே!
ஆட்டையாம்பட்டி,
தேன்மொழிசந்திரசேகரன்.

✉ டாக்டர். மைதிலி சுவாமிநாதன் எழுதிய கட் டுரை இந்தக் காலப் பெண்களுக்கு பல முறையில் பயனுள்ளதாகவும், பல கேள்விகளுக்கு பதில் அளிப்பதாயும், பல் மருத்துவம் கர்ப்பமுற்றிருக்கும் போது செய்யவே கூடாது என்னும் தவறான கருத் தைப் போக்குவதாகவும் அமைந்துள்ளது பாராட் டத்தக்கது.
புவனகிரி, ஸரஸ்வதி நமச்சிவாயம்.

✉ 'படித்துப் பிரமிக்கலாம்' பகுதியில் 'சூரியன் ஒருநாள் மறைந்து போகுமா' கட்டுரையில் 'ஒருநாள் சூரியன் அஸ்தமிக்கத்தான் போகிறது' என்று சொல்லி பிரமிக்க அல்ல; கவ லைப்பட வைத்து விட்டீர்களே!
சென்னை - 14,
கவிஞர். அய்யாறு வாசுதேவன்.

✉ உலகப் பேரழகி எனப் போற்றப்பட்ட 'கிளி'யோபாட்ராவின் கடைசி நாட்களை விவ ரித்த கட்டுரை மறக்க முடியாத மகத்தான படைப்பு.
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

✉ 'ருத்ர பூமியா வாழ்க்கை?' கட்டுரையில் காலையில் நிச்சலனமாக எழுந்திருக்கப் பழகு வோம் என்று கூறப்பட்டிருந்தது. விரும்பினாலும் பலருக்கு இது எளிதில் சாத்தியப்படாது. இவர் களுக்கு உதவவே ரிஷிகள், முன்னோர்கள் 'தியா னம்' என்னும் எளிய ஆனால் சக்திவாய்ந்த துணையை ஏற்படுத்தி தந்திருக்கிறார்கள். உலகப் புகழ்பெற்ற நரம்பியல் நிபுணர் டாக்டர் ராம மூர்த்தியும், "தியானம் மூளையின் சிதறலான ஆல்ஃபா, பீட்டா பிற எண்ணக் கதிர்களை மிக இயல்பாக சீரமைத்து அமைதி, சுமுகம் ஆகிய குணங்களுடன் செயல்திறனையும் வளர்க்கிறது" என அதை ஒரு இயக்கமாகவே வலியுறுத்தி வருகிறார்.
சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

✉ போட்டிக் கட்டுரைகள் மூலம் வாசகிகளின் வித்தியாசமான ஒவ்வொரு அனுபவங்களையும் அறிய முடிகிறது. தொடரட்டும் இப் பகுதி.
மன்னார்குடி, த. சாந்தி.

✉ 'நியூஸ் சாலட்' பகுதி நறுக்குத்தெறித்தாற் போல் நாட்டு நடப்புகளை விளக்குகின்றது. இன் னும் அதிக செய்திகள் தர வேண்டுகிறேன். 'சாலட்' ஒவ்வொரு மாதமும் சுவை கூடிக் கொண்டு போக எனது வாழ்த்துக்கள்.
சென்னை - 44, கே. சுந்தரா.

✉ "குழந்தைகளை பண்படுத்தும் ஸ்போர்ட்ஸ்!" செய்தியால் உடற்பயிற்சியின் உடன்பிறப்பாய் விளங்கும் விளையாட்டின் அருமை பெருமை களை அசத்தலாக அறிய முடிந்தது.
வேப்பேரி, பூப்பொழில் வெற்றிரோஜா.

✉ மனித வாழ்க்கைக்கு மிக அத்தியாவசிய மானதுதான் சூரியன். அந்த சூரியனும் கூட ஒரு நாள் மறைந்து போகும் எனவும் உண்மையிலேயே அஸ்தமனம் ஆகிவிடும் என்பதும் கண்டு பதை பதைத்துப் போனோம். ஆனால் இதற்கு பல்லா யிரக்கணக்கான் ஆண்டு களாகும் என்ற வரியைப் படித்ததும்தான் பிரமிப்பி லிருந்து மீண்டு வர முடிந் தது.
குன்னூர் - 1,
கோமதி அனந்தமணி.




அட்டையில் : படிப்பிலும் பல கலைகளிலும் சிறந்து விளங்கும் குமாரி சம்யுக்தா ராமகிருஷ்ணன். (நவராத்திரிக்கு இவரை அட்டையில் பிரசுரிப்பது பொருத்தமானதே!) வண்ணப்படம் : உதரா

# மங்கையர் மலர்

## நவம்பர் இதழ்

# தீபாவளி சிறப்பிதழ்

பட்டாடையும்
பட்டாசுச் சரங்களும்
பலகாரங்களுமாக

நமது தீபாவளி சிறப்பிதழ் தயாராகிக் கொண்டு இருக்கிறது. சுவைக்கத் தயாராகுங்கள்.

கூடவே போட்டியும் உண்டு!

**மங்கையர் மலர் & யுனிவர்செல் மல்ட்டி பர்பஸ் கிச்சன் மெஷின் இணைந்து வழங்கும் கட்டுரைப் போட்டி**



## தீபாவளி பட்சணம் பண்ணும்போது என்ன ஆச்சு தெரியுமா?

நீளமான தலைப்புதான். ஆனால் சுவையான சம்பவங்கள் எத்தனையோ இருக்குமே! உங்களுடைய அனுபவம், உங்களுக்குத் தெரிந்தவர்கள் அனுபவம் என நிறைய இருக்கும். ம்... எழுத ஆரம்பித்து விடுங்கள்.

முதல் பரிசு :

யுனிவர்செல் மல்ட்டி பர்பஸ் கிச்சன் மிஷின் அவற்றின் இணைப்புக்களுடன்.

\+

யுனிவர்செல் ஹேண்ட் மிக்ஸர்

இரண்டாம் பரிசு :

யுனிவர்சல் மல்ட்டி பர்பஸ் கிச்சன் மிஷின் அவற்றின் இணைப்புக்களுடன்.

மூன்றாவது பரிசு :

யுனிவர்செல் ஹேண்ட் மிக்ஸர்

ஆறுதல் பரிசுகள் :

ஏழு பேருக்கு ரூ. 200/- பெறுமானமுள்ள பரிசு.

- கட்டுரைகள் மங்கையர் மலரில் ஒரு பக்கத்திற்கு மிகாமல் இருக்க வேண்டும்.
- மங்கையர் மலர் அலுவலகத்திற்குக் கட்டுரைகள் வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 15.10.97
- ஆசிரியர் முடிவே இறுதியானது.





# 'நவ' வர்ண சேலை

சென்ற இதழில் மங்கையர் மலரும், பி.கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸும் இணைந்து நடத்தும் ஒரு போட்டியை அறிவித்து, அதில் நூறு சேலைகள் பரிசாக அளிக்கப்படும் என்றும், அந்தச் சேலைகளில் ஒரு விசேஷம், சிறப்பு உண்டு என்றும் 'சஸ்பென்ஸ்' வைத்திருந்தோம்.

ஒரே கேள்விக்குறியல்கள், 'அதென்ன', 'அதென்ன' என்று...? 'முடியாது, ஒரு மாதம் தாங்க முடியாது சொல்லித்தான் ஆக வேண்டும்' என்று 'அன்புப் பிடிவாதங்கள்' நிறைய...

பி.கே. மணியம்மாள் டெக்ஸ்டைல்ஸ் உரிமையாளர் திருமதி நாகஜோதி ஜெயராமனிடம் ஒருநாள் சுவாரஸ்யமாகப் பேசிக் கொண்டிருந்தோம். தீவிரமான ஆன்மீகவாதி - அதிலும் தியானமுறை வழிபாட்டில் ஆழ்ந்த பயிற்சியுடைய அவரிடம் நிறைய பேசி



• நாகஜோதி

கடைசியில் புடைவையில் வந்து நின்றது பேச்சு. கேட்பானேன், அப்புறம் கலர்கலராகப் பேச்சுதான்.

"இந்த வருடம் நவராத்திரி, தீபாவளிக்கு என்ன புதிதாகக் கொடுக்கப் போகிறீர்கள்?" என்றோம்.

"நானும் அதைத்தான் தீவிரமாக யோசித்துக் கொண்டு இருக்கிறேன். வருடா வருடம் தறிகளில் புதிய வண்ணச் சேர்க்கை, புதிய ஜரிகை டிசைன்கள் என அறிமுகப்படுத்துகிறார்கள். அவை யெல்லாமும் நாமும் கொண்டு வரப்போகிறோம். அதே போல எங்களுடைய பரிசுத்திட்டங்கள் ரொம்பப் பிரசித்தம். ஐநூறு ரூபாய்க்கு மேல் துணிகள் வாங்குகிறவர்களுக்குக் கூப்பன்கள் தருவோம். தீபாவளி முடிந்தவுடன் அவற்றைக் குலுக்கிப் போட்டு ஹீரோஹோண்டா பைக், டிவிஎஸ் 50, என நிறைய பரிசுகள் தருவோம். அதெல்லாமும் இந்த வருடமும் உண்டு.

அதற்கப்புறமும் ஏதாவது செய்ய வேண்டும் என்ற ஆர்வம் இருக்கிறது..."

என்றார். முழுநேரமும் இவ்வளவு பெரிய ஜவுளி மாளிகையை நிர்வகித்து வரும் பெண்ணான அவருக்கு நடுத்தர வர்க்கத்துப் பெண்களின் ரசனைகள், ஆர்வங்கள் எல்லாம் அத்துப்படி.

"இன்றைய பெண்கள் எவ்வளவோ சாதனைகளைப் படைக்கிறார்கள். அவர்களுடைய போராட்டங்களும் மிக அதிகமே. ஒரு பக்கம் நம்முடைய கலாசாரப் பின்னணி. மறுபக்கம் உலகம் முழுக்க கைப்பிடியில் அடங்குமளவு விஞ்ஞான முன்னேற்றம். இவை இரண்டையும் சமாளிக்கும் வல்லமைக்காக அவர்களுக்கு ஒரு டெக்ஸ்டைல்ஸின் உரிமையாளர் என்கிற முறையில் நான் உதவி செய்வேனா?"



• சென்ற வருடம் தீபாவளிப் பரிசுகள் குலுக்கல் முறையில் தேர்ந்தெடுத்தபோது...

என்றார். அவருடைய ஆதங்கத்தின் விளைவோ என்னவோதான் ஒரு புதிய யோசனை பளிச்சிட்டது. வாழ்க்கையில் துன்பங்களிலிருந்து தங்களை விடுவித்துக் கொள்ள கற்களின் மூலமாகப் பலன் காணுபவர்கள் உண்டு. நிறைய பேர் நவரத்தின மோதிரம் அணிகிறார்கள், அனைத்துக் கிரகங்களையும் 'ப்ரீதி' செய்ய வேண்டி. ஏன், இதை ஆடைகளிலும் அணியக் கூடாது? 'நவவர்ண சேலை' என்பது சாத்தியமா? அதனால் பயன் உண்டா?

"நிச்சயமாக உண்டு" என அடித்துச் சொல்கிறார் 'வர்ணங்களின் மூலமாக தங்களைப் பலப்படுத்திக் கொள்ள யோசனைகள் கூறுவதில் வல்லவரான திருமதி வி.எஸ். மயூரி.

"ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒவ்வொரு வர்ணம் பிரதானமானது. அந்த வண்ணத்தினை நம் ஆடைகளில் அணிவதன் மூலம் அந்தக் கிரகத்தினை ப்ரீதி செய்ய முடியும். அதிலும் ஒன்பது வர்ணங்களையும் ஒரே சேலையில் இணைத்து அணிவது இன்னும் விசேஷம்தான்.

துணிகளுக்குத் தோஷம் கிடையாது. அதனால் கெடுதலும் கிடையாது. எனவே தவறாக ஏதாவது அணிந்து கொண்டு விட்டோமோ என்று பயப்பட வேண்டிய அவசியமுமில்லை. தவிரவும் அந்த வண்ணங்கள் உடல் முழுக்க இணைந்து இருப்பதால் இன்னும் நல்லதும் கூட. நாம்



• மயூரி

புடைவையை அணிந்து கொள்வது எவ்வளவு விசேஷமோ, அந்த அளவிற்கு மற்றவர்களுக்குத் தானம் கொடுப்பதும் விசேஷம்தான்" என்கிறார் மயூரி.

"வர்ணங்களின் மூலமாக பலனை அதிகரித்துக் கொள்வது என்பது சாத்தியமே. உலகம் முழுக்க பலரும் இதை ஏற்றுக் கொண்டு ஆராய்ச்சி செய்தும் இருக்கிறார்கள்" என்கிறார் 'ஸ்ரீசக்ரா' மூலமாக பலருக்கும் வழி காட்டி வரும் திரு. முத்துக்கிருஷ்ணன்.

இதனால் எல்லாம் ஊக்கம் பெற்ற நாகஜோதி, "சரி, இந்த முறை நவராத்திரி தீபாவளியையொட்டி 'நவவர்ண சேலை'யை அறிமுகப்படுத்துவோம்" என உற்சாகமாகக் களத்தில் இறங்கினார். அவருடைய லட்சியமான 'பெண்களுக்குச்

# இம்மாத இல்லத்தரசி

**சமையல் கூப்பன்**

பொருள் : காய்கறிகளால் தயாரிப்பு கடைசி தேதி : 15.10.97

.................................................. என்ற தலைப்பில் சமையல் குறிப்பை இதனுடன் அனுப்பியுள்ளேன். இச்சமையல் குறிப்பு இதுவரை எந்தப் பத்திரிகையிலும் வெளியானதல்ல என்று உறுதி கூறுகிறேன்.

கையொப்பம்

சிரமங்களில் உதவுவது' என்பதும் இதில் அடங்கிவிட்டதால் அவருக்கு ஏகத்ருப்தி. 'எத்தனை பேருக்கு நவரத்னக்கல் மோதிரம் அணிய முடியும், என்னாலானது நவவர்ணச் சேலையை அறிமுகப் படுத்துகிறேன்' என்றவர் திட்டமிடும் போதும், அதன் செயலாக்கத்தில் இறங்கும் போதும் பல சந்தேகங்கள். எனவே ஆலோசித்து ஆலோசித்து ஒவ்வொரு படியாக முன்னேறினார். கடைசியில் 'நவவர்ண சேலை'யை உருவாக்கியே விட்டார்.

யாரையும் எதிரியாகக் கருதாத சந்திரனின் விருப்ப வண்ணமான மெல்லிய வெள்ளை வண்ணத்தில் (ஆஃப் வொய்ட்) நவவர்ணத்தில் பலப்பல டிசைன்கள். பார்க்க மிக அழகாக அமைந்து விட்டது. அப்போதுதான் நாகஜோதி சொன்னார்,

"இப்படி ஒரு சேலையைப் பற்றி நினைக்கவே நீங்கள்தான் காரணம். எனவே என்னுடைய அன்புப் பரிசாக மங்கையர் மலர் நூறு வாசகிகளுக்கு இதனைப் பரிசாகத் தருகிறேன். எல்லோருக்கும் தர ஆசை இருந்தாலும் நான் அவ்வளவு பெரியவள் இல்லையே" என்றவர்,

"உங்கள் பரிசு பெறும் வாசகிகள் நவராத்திரிக்கே இந்தப் புடைவைகளைக் கட்டிக் கொண்டு பூஜைகள் செய்யட்டுமே! நவராத்திரியும் நவக்கிரங்களுக்கும் மேலான நாயகியைப் பூஜிக்கின்ற விழாதானே! எனவே இப்போது கொடுப்பது பொருத்தமாகவும் இருக்கும்"

என்றார். இப்போதைக்குப் பருத்தியில் தான் தயாரித்திருக்கிறார். அதன் விலை இரு நூறு ரூபாய்தான் ஆகிறதாம். எனவே அதோடு ரவிக்கைத் துணி, ஒரு வேஷ்டி, ஒரு ஷர்ட்துணி என ஐநூறு பெறுமான முன்ன பரிசாக ஒவ்வொருக்கும் கொடுத்து விடுகிறேன். தம்பதிகளாக அணிந்து மகிழட்டுமே!" என்றார்.

கரும்புத் தின்ன கூலியா? நம் வாசகர்களுக்குப் பரிசுகள் கொடுத்தால் வேண்டாமென்றா சொல்லப் போகிறோம்? மகிழ்ச்சியுடன் தலையாட்டினோம்!

பரிசு விவரங்கள் வேறு பக்கங்களில்

நம்ப ரேஷன்ல சுஸ்வாத் முறுக்கு சீடை பட்சணங்களை கொஞ்சம் கூடவே ஸ்டாக்கிலே வெச்சுக்க. சாப்பிட நல்லாவும் இருக்கு. நாள் படவும் இருக்கும்

சுஸ்வாத் கார வகைகள்

கல்யாண ஸ்வீட்ஸ், சீர்முறுக்கு, சீர்வரிசை பட்சணங்கள் எவ்வளவு தேவை ஆனாலும் அர்ஜெண்ட் ஆர்டர் பேரில் தயார் செய்து தருகிறோம்.

- ☐ சுத்தமான நெய்யில் தயாராகும் ஸ்வீட் வகைகள்
- ☐ சுத்திகரிக்கப்பட்ட, கொலஸ்ட்ரால் தொல்லை இல்லாத தாவர எண்ணெயில் தயாராகும் கார வகைகள்
- ☐ அதிகப்படியான எண்ணெய் அகற்றப் படுவதால் நீண்டநாள் கெடாமல் இருக்கும் தென்னிந்திய பட்சணங்கள் (Free of Oil)
- ☐ Instant இட்லி மிக்ஸ், தோசை மிக்ஸ், அடை மிக்ஸ், வடை மிக்ஸ், புளியோதரை மிக்ஸ் etc.

**OUR SPECIALITIES :**

- ☐ புழுங்கலரிசி கைமுறுக்கு, தட்டை, சீடை மிக்ஸர் (Free of Oil) etc.
- ☐ மைசூர் பாகு, போளி, லட்டு, கோதுமை அல்வா, etc.
- ☐ Nitrogen filled packing for a longer shelf life.



**SUSWAAD**

SUSWAAD SWEETS AND SAVOURIES PRIVATE LIMITED

**The Delicious Home made Sweets and Savouries**

1/3, Venkatraman Street,
(Near Kasi Arcade, Pondy Bazaar),
T. Nagar, Madras - 17. Ph : 8232678

*Also Available at :*

**C/0. Unique Electronics**
**160, Royapettah High Road,**
**Mylapore, Madras - 4.**
**Ph : 4992190**

**Home Needs Super Market,**
**Hitachi Showroom Building,**
**P.o.Box No.51681**
**BUR DUBAI, U.A.E.**
**Tel : 515199, Fax : 00-9714-553249**

**EXPORT ORDERS & ENQUIRIES FOR TECH. KNOWHOW SOLICITED.**

# 'மில்லினியம்' கொண்டாட்டங்கள்

புதிய 'மில்லினியம்' ஆண்டுகள் ஆரம்பமாவதற்கு இன்னும் 1000 நாட்களே உள்ளன. இந்த 1000 நாட்களின் எண்ணிக்கை (Countdown) இந்த ஆண்டு ஏப்ரல் 4-ஆம் தேதியிலிருந்து ஆரம்பமாகி விட்டது. முதல் நாள் தொடக்கத்தினைக் குறிப்பிடு வதற்காக 'எலக்ட்ரானிக் டிஜிடல் கடிகாரம்' ஒன்று 'க்ரீன்விச்'சில் உள்ள ஹவுஸ் ஆப் டைம், தி ராயல் அப்ஸர்வெட்ரி (House of Time - The Royal Observatory) யில் நிறுவப் பட்டுள்ளது.

'மில்லினியம்' என்றால் ஆயிரம் வருடத்தைக் குறிப் பிடுவதாகும். இதற்காக உலகம் முழுவதும் பற்பல நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டு வருகின்றன. முக்கியமாக உலக நேரத்திற்கு தந்தையாக விளங்கும் பிரிட்டனில் உள்ள க்ரீன்விச்சில் ஏராளமான கண்கவர் நிகழ்ச்சிகள் தயாராகிக் கொண்டு வருகின்றன. இந்த நகரம் இப்பொழுதே கோலாகலம் பூண்டு ஜெகஜோதியாய் காட்சியளிக்கிறது. இங்கு உள்ள சரித்திரப்புகழ் வாய்ந்த தேம்ஸ்நதி, தி ஓல்டு ராயல் அப்ஸர்வெட்ரி மற்றும் நேஷனல் மாரிடைம் மியூஸியம் போன்ற இடங்களில் உள்ள ஹோட்டல்களில் 1999-ம் ஆண்டின் இறுதி நாளான டிசம்பர் - 31 அன்று சூரிய அஸ்தமனத்தைப் பார்ப்பதற்காக அட்வான்ஸ் புக்கிங் செய்யப்பட்டு விட்டது.



'பிரிட்டிஷ் ஏர்வேஸ்' தன் பங்குக்கு ஒரு பெரிய அறுபது கம்பார்மெண்ட்டுகளைக் கொண்ட பிரம்மாண்டமான 'ஜெயின்ட் மில்லினியம் வீல்' புகழ்பெற்ற தேம்ஸ் நதிக்கரையில் அமைந்துள்ள 'வெஸ்மினிஸ்டர் பேலஸ்'க்கு எதிரில் அமைக்க உதவியுள்ளது. இந்த ஜெயின்ட் வீல் உலக அதிசயங்களில் ஒன்றான பிரான்ஸில் உள்ள ஈஃபிள் டவருக்கு சவால் விடுவதைப் போல் அமைக்கப் பட்டுள்ளது. இதில் உள்ள ஒவ்வொரு அறையிலும் பதினாறு பேர் அமரலாம். இதில் அமர்ந்து சுற்றும் பொழுது மொத்த நகரத்தின் பரப்பளவும் கண்ணுக்கு விருந்தாய் காட்சியளிக்கிறது. இதன் சுற்றளவு 500 அடிகளாகும். இதை உருவாக்குவதற்கு பத்து மில்லியன் டாலர் செலவு ஆனது. ஒவ்வொரு வருடமும் 2 மில்லியன் மக்கள் இங்கு வருகை தருவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. இப்படி உலகம் முழுவதும் 20-ம் நூற்றாண்டை வரவேற்பதற்காக உற்சாகமாக தயாராக உள்ளது.

நன்றி : 'ஹிந்து'

— ஷாந்தி



• மகிஷாசுரமர்த்தினி



• அஷ்டபுஜதுர்கை



• மோகினி

# நவநவமாய் வடிவாகும்

துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதி எனும் மூன்று தேவியரைக் கொண்டாடும் புனித நாட்களே நவராத்திரி. அந்த மூவருமே ஓரம்சமாக இணைந்து ஒரு ருவாக எழுந்தருளினால் அவளின் சிறப்பைக் கேட்கவும் வேண்டுமா? அப்படி ஒன்றாகி மூகாசுரனை அழிக்க அவதாரம் எடுத்தவளே மூகாம்பிகை. கொல்லூரில் குடி கொண்டிருக்கும் மூகாம்பிகை சகல சக்திகளும் ஒருருவாகி நிற்கின்றவள். கையிலே சங்குசக்ரதாரியாகி சிம்வாஹன தேவியாகத் திகழ்பவள்.

அப்பேர்ப்பட்ட மகத்துவம் வாய்ந்த மூகாம்பிகை தமிழ் நாட்டிலே அதுவும் சென்னையிலேதானே எழுந்தருளிக் குடி கொண்டிருக்கிறாள் என்று சொன்னால் அவளுடைய கருணையை என்னவென்று சொல்வது?

சிறு வயதிலிருந்தே தெய்வ சிந்தனையும், அருள் கருணையைப் பெற்றவளுமாக வளர்ந்தவர் ஸ்ரீசாந்தா அம்மையார். இவர் சிறுமியாக இருந்தபோதே பரமாச்சார்யார் இவரிடம் ஒரு படத்தினைக் கொடுத்து அதனை பூஜை பண்ணச் சொல்லி இருக்கிறார். சொப்பு வைத்து விளையாட வேண்டிய வயதில் அந்த

• சாந்தா அம்மையார்



• மீனாட்சி



• அன்னபூரணி



• ராஜராஜேஸ்வரி

ராஜராஜேஸ்வரியின் படத்தை வைத்துத் தனக்குத் தெரிந்த வகையில் பூஜை செய்ய ஆரம்பித்து இருக்கிறார். இப்படியாக அவருடைய பவித்ரமான பக்தி வளர ஆரம்பித்து இருக்கிறது. பரமாச்சார்யார் அளித்த அந்தப் படத்தினைக் காண்பித்தார் அம்மையார். பூஜையறையில் பரிமள கந்தத்துடன் தெய்வீகமாக அமர்ந்திருக்கும் ராஜராஜேஸ்வரியின் கண்கள் நம்மை ஆசிர்வதிக்கின்றன. கைகளில் சங்குசக்கரம்!

"அப்போ எனக்கு ராஜராஜேஸ்வரிக்கு எப்படி சங்குசக்ரம்னு கேட்கத் தோணலை. இப்பதான் புரியறது அவள் மூகாம்பிகையாக என்னிடம் வரப் போறான்னு சூசகமா சொல்லவே அப்படி ஒரு அரிய படத்தை மகா பெரியவர் என்னிடம் கொடுத்தார் என்பது..."

சிறு வயதிலிருந்தே தெய்வீக ஈடுபாட்டோடு வளர்ந்து வந்த சாந்தா அம்மையார் இல்லறக் கடமைகளை முடித்துக் கொண்டு விரைவிலேயே துறவறமும் மேற் கொண்டு விட்டார். நாள் முழுக்க பூஜை, தேவி உபாசனை என்று தொடர்ந்தது. அப்படி இருக்கும் போதுதான் யாரோ இருவர் அவர் வீட்டில் ஒரு மூட்டையை இறக்கி விட்டுச் சென்றார்கள். இரண்டு, மூன்று நாட்கள் கேட்பாரற்றுக் கிடந்த மூட்டையை, அதனுள் என்னதான் இருக்கிறது என்று எல்லோருமாகத் திறந்து பார்த்தபோது, தேவியின் சிலையொன்று அழகுற வீற்றிருந்தது!

# மூகாம்பிகை

'ஐயோ, இது யாருடையது தெரியவில்லையே, இது என்ன சுவாமி



• மஹாலக்ஷ்மி



• மஹாசரஸ்வதி

யென்றும் புரியவில்லையே எனத் திகைத்துப் போய் அம்மையாரின் கண்கண்ட தெய்வமாய் வாழ்ந்து கொண்டிருந்த பரமாச்சார்யாரிடம் ஓடியிருக்கிறார். அவர் அதனைப் பார்த்தவுடன்,

"ஓ மூகாம்பிகை உன்னிடம் வந்திருக்கா. கோயில் கட்டி பூஜை பண்ணு"

என்றிருக்கிறார். சாந்தா அம்மையார் திகைத்துப் போய் விட்டார். எளிய வாழ்க்கை வாழும் தன்னால் கோயில் கட்ட முடியுமா என்பதே மலைப்பிற்குக் காரணம். ஆயினும் தெய்வ வாக்காயிற்றே. நடப்பது நடக்கட்டும் என மூகாம்பிகையுடன் சென்னைக்குத் திரும்பினார்.

ஏற்கெனவே அம்மையாருக்குத் தெய்வ அருளினால் பலருக்கும் பூஜையின் போது நல் வாக்குகளைச் சொல்லி அது பலருக்கும் வழி காட்டியாக அமைந்த விதத்தில் அறிமுகமானவர் ஒரு பெண். அவருடைய நிலம் என்பதே தெரியாமல் மூன்றாம் கட்டளையில் 'இதுவே கோயிலுக்குரிய நிலம்' என உள்வாக்கு சொல்ல தேர்ந்தெடுத்ததையும். அதனைப் பின்னர் தனக்குத் தெரிந்த பெண்ணின் நிலமாக இருந்தது அறிந்து வாங்கிய தெய்வ அனுபவத்தையும் விவரித்தார் அம்மையார்.

தெய்வத்திற்கும் சோதனைகள் உண்டே! அப்படித்தான் மூகாம்பிகை கோயில் மூன்றாம் கட்டளையில் பலவித பிரச்னைகளுக்கு நடுவிலும் கம்பீரமாக எழுந்தது. கொல்லூரில் எந்த அமைப்பில் கோயில் இருக்கிறதோ அதே வகையில் இங்கேயும் அமைத்திருக்கிறார் அம்மையார்.

கொல்லூரிலுள்ள அதே வடிவம். அதே அளவு. நான்கு கால பூஜை. பகல் பன்னிரெண்டு மணிக்கு நடத்தப்படும் ஸ்ரீவேலி, இரவிலே கஷாய நைவேத்தியம். நெய் தீபம். மூகாம்பிகை அஷ்டோத்திரம், சகஸ்ர நாமம், லலிதா சகஸ்ர நாமம் இப்படிப் பல விதிமுறைகள் கொல்லூர் திருத்தலம் போலவே இங்கும் கையாளப்படுகின்றன.

கொல்லூரில் மூல விக்கிரகம் பஞ்ச லோகத்தால் ஏற்பட்டது. இங்கு சிலை வடிவில் உள்ளது. உற்சவர்தான் பஞ்சலோகத்தில் அமைந்துள்ளது.

நவராத்திரியில் மிக விசேஷமாகத் தன்னை



• மூகாம்பிகை



ரவை, மைதா தோசை சுடும் பொழுது அதில் ¼ பங்கு கடலை மாவையும் சேர்த்துச் சுட்டுப் பாருங்கள். தோசை மிருதுவாகவும் வித்தியாசமான சுவையுடனும் இருக்கும்.

— பி. ஜானகி

---

அலங்கரித்துக் கொள்கிறாள் மூகாம்பிகை. ஒன்பது நாட்களும் ஒன்பது வித அலங்காரத்தில் பொலியும் தேவி. சண்டி ஹோமமும், குத்து விளக்குப் பூஜையும் மிகச் சிறப்பாக செய்யப்படுகின்றன.

தனக்கே உரிய, எளிய, இனிமையான குரலில் சொன்னார் சாந்தா அம்மையார் -

"நவராத்திரி மூன்று சக்திகளின் அம்சங்கள். இச்சா சக்தி, க்ரியா சக்தி, ஞான சக்தி. மாயா எனும் இச்சா சக்தியைப் புரிபவள் துர்க்கை எனும் பார்வதி. அவளே உலகின் அனைத்து உயிர்களிலும் மாயை எழுப்பும் அன்னையாகிறாள். லட்சுமியோ க்ரியை அதாவது நினைக்கும் எண்ணங்களைச் செயல்படுத்துபவள். இவ்விரண்டின் அடுத்த நிலை ஞான சக்தி எனும் சரஸ்வதி. நல் எண்ணம், நல் செய்கை ஞானத்தைத் தருகிறது. ஒவ்வொரு ஆத்மாவின் லட்சியமும் ஞானத்தை அடைவதுதான். அந்த நிலையை அடைபவன் அனைத்திலும் வெற்றி பெறுகிறான். விஜயம் அவனுக்கு எளிதாகிறது. அதுதான் தேவியின் விஜயதசமி. இப்படி நம் வாழ்க்கையையே ஒன்பது நாட்களில் பகுத்துக் கூறும் பராசக்தியின் அவதாரமே மூகாம்பிகை. அவளை இந்த நவராத்திரி நாட்களில் தொழுவது மகாசிறப்பு.

அதே போல நவராத்திரியில் ஆரம்பிக்கிறது நம்முடைய நாட்டில் சிறப்பு தேவி வழிபாடு. அது தீபாவளி வரை தொடர்கிறது. நவராத்திரி அமாவாசையில் ஆரம்பித்து தீபாவளி அமாவாசை வரை தேவி வழிபாட்டிற்கு மிகவும் மகத்துவம் வாய்ந்த நாட்களாகும். அந்த ஒரு மாதமும் ஒவ்வொரு நாளும் சக்தியைத் தங்களுடைய சக்திக்குத் தகுந்தவாறு பூஜிக்க வரப்ரசாதியான தேவி மனமகிழ்ந்து வரம் தருவாள்.

அனைத்து சக்திகளும் ஒன்று திரண்டவள் அல்லவா மூகாம்பிகை. மூகனுக்கே பேசும் சக்தி தந்தவளாயிற்றே. சகல தேவர்களும், மூவரும் தங்களின் சக்தியை அவளிடம் தந்து மூகாசுரனை அழிக்கும்படி அவதாரம் எடுத்தவள். எனவே அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகியான அவளை நவராத்திரி நாட்களிலும் தொடர்ந்து வரும் விசேஷ நாட்களிலும் தொழுது நம்மை நாமே புனிதப்படுத்திக் கொள்வோம்."

சென்னையிலிருந்து பூந்தமல்லி சாலையில் போரூர் தாண்டி இடது பக்கம் குன்றத்தூர் செல்லும் கிளைச் சாலையில் திரும்பினால் ஆறு கிலோ மீட்டர்களில் மூன்றாம் கட்டளை வருகிறது. போக்குவரத்திற்கு பஸ்வசதியும் உண்டு. அங்கே அமைதியான சூழ்நிலையில் ஸ்ரீ மூகாம்பிகை சந்நிதி எழும்பி இருக்கிறது. மறைந்த முதலமைச்சர் எம்.ஜி.ஆர். இக்கோயிலின் வளர்ச்சியில் மிகுந்த ஈடுபாடு கொண்டிருந்தாராம்.

"இந்தக் கோயில் சென்னையில் எந்தப் பகுதியில் இருக்க வேண்டும் என்று சொல்லுங்கள். நான் ஏற்பாடு செய்கிறேன்"

என்று சொன்னாராம். ஆனால் தெய்வசித்தம் எப்படியோ அப்படியே இங்கு மூன்றாம் கட்டளைக்கு வந்து சேர்ந்திருக்கிறாள் முத்தேவியரும் ஒன்று சேர்ந்த ஸ்ரீ மூகாம்பிகை. தனக்கென்று இருந்த வீடு மற்றும் பல சொத்துக்களையும் விற்று இக்கோயிலை உருவாக்கியுள்ள சாந்தா அம்மையார் இப்போது கோயிலுக்குக் கோபுரம் எழுப்பும் பணியில் ஈடுபட்டு இருக்கிறார்.

"பக்கத்தில் ஏர்போர்ட் அதிகாரிகள் கோபுரம் இவ்வளவு உயரத்திற்கு மேல் இருக்கக் கூடாது என்றார்கள். அதனால் கொஞ்ச நாள் தடைப்பட்டது. பிறகு சரியாயிற்று. கொஞ்சம் கொஞ்சமாகக் கோபுரப்பணி நடந்து கொண்டு இருக்கிறது. என் வாழ்நாளுக்குள் இந்தக் கோபுரத்தை முடித்து கோயிலை முழுமையாக்கிவிட வேண்டும் என்பதுதான் என்னுடைய இலட்சியமாக இருக்கிறது. தேவியின் சித்தம் எப்படியோ அப்படியே அனைத்தும் நடக்கும்."

என்கிறார் தன் பெயருக்கு ஏற்ப சாந்தா அம்மையார். இன்றும் பலருக்கும் பூஜை நேரத்தில் தேவியின் திருவுளப்படி வழிகாட்டி வருகிறார். ஞாயிறு, வெள்ளி நாட்களில் இதற்கென்றே அமைக்கப்பட்டுள்ள தனியறையில் காலை ஒன்பது மணி முதல் ஒரு மணி வரை தன் மேல் முழு நம்பிக்கை வைத்து வரும் பக்தர்களுக்கு வழிகாட்டுகிறார் அம்மையார். அவர் வாக்கின் வழிகாட்டுதலில் நடந்து கொண்ட மிகப்பலரும் வாழ்க்கையில் வெற்றியடைந்த விதத்தையும், ஏற்றம் பெற்ற நிலையையும் மற்றவர்கள் கூறினார்கள்.

எப்படியாயினும் துறவு பூண்ட ஒரு பெண்மணி சக்தியின் வடிவினாலான மூகாம்பிகைக்கு ஒரு கோயில் எழுப்பி இருப்பதும், அங்கேயே வாழ்ந்து கொண்டு தெய்வத்திருப்பணியிலேயே தன் வாழ்நாளைச் செலவிடுவதுமே சிறப்பான ஒன்றுதானே!

— புவனா

இரட்டைச் சிறப்பிதழ் II

அட்டை, கட்டுரை வண்ணப்படங்கள் :

ஓம். சுப்ரமண்யம்

கல்யாணமாகி கல்கத்தாவுக்கு வந்து ஆச்சு - பத்து வருடங்கள். ஸ்ருதி பிறந்து அவளுக்கு ஐந்து வயது முடியும் இந்த ஐப்பசிக்கு. இந்த வருடம் தசரா லீவுக்கு சென்னை போவதாக நிச்சயித்திருந்தோம்.

எல்லா வருடமும் நவராத்திரியை கொலு வைத்துக் கொண்டாடுவது எனக்கு மிகவும் பிடித்த விஷயம். சிறு வயதிலிருந்தே கொலுவின் மீது எனக்குக் காதல். பாட்டி என்னை தினம் ஒரு அலங்காரம் செய்வாள். வீடு வீடாகப் போய் சுண்டல் நிறைய வாங்கி வந்து அதைப் பொட்டலம் வாரியாகப் பிரித்து ருசித்துச் சாப்பிடும்போது அது ஒரு தனி ருசிதான். ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொரு ருசி...



...டலில் பங்கு கேட்டு நான் பகிர்த்து கொள்ள மறுப்பேன்.

"உனக்கு வேணும்னா நீயும் வீடு வீடாகப் போய் வாங்கி வா - நான் தொண்டை கிழிய பாட்டுப் பாடி சுண்டல் வாங்கி வந்திருக்கேன்."

"ஆமாம், ப்ரமாத பாட்டு - அன்ன வாஹன தேவீ" என்று நீட்டி முழக்கி என்னை கேலி பண்ணுவான்.

"அம்மா பாரும்மா இவனை..." என்று கண்ணைக் கசக்க

"ஏண்டா அவள் வயிற்றெரிச்சலைக் கொட்டறாய்?" என்று அம்மா அவன் மேல் பாய ஓடி விடுவான்.

கல்யாணமாகி கல்கத்தா வரும்போது அம்மாவிடம் நச்சரித்துக் கொலுப் பெட்டியைத் திறந்து சில பொம்மைகளையும் ஒரு செட் மரப்பாச்சியையும் கொண்டு வந்தேன் - வருடம் தவறாமல் கொலு வைப்பேன். தவிர சென்னை வரும்போதெல்லாம் நங்கநல்லூரில் பொம்மை செய்யும் ஆளிடம் வித விதமான பொம்மைகள் ஆர்டர் செய்து - ஆண்டாள், கருடவாஹனர், பாவை விளக்கு, சின்னி கிருஷ்ணன் என [illegible] என்



னுடன் கல்கத்தா வரும் பொம்மைகள்

'இது என்ன பொம்மை பைத்தியம்' என என் கணவர்கூட கேலி செய்வார் -

இருந்தாலும் என் மனதில் தீராத ஆசை ஒன்று இருந்தது. என் பாட்டியின் மரப்பாச்சி செட்தான் அது. குள்ளமாக கொழுக் மொழுக் கென்று கன்னங்கரேல் கறுப்பில் மூக்கும் முழியுமாக ஒரு ஆணும் பெண்ணும் ஜோடி. அதை பாட்டி பெருமையாக "இது நானும் உன் தாத்தாவும் ஆக்கும்" என்பாள்.

அதற்கு அவள் பட்டுத்துணியில் புடவை, ரவிக்கை, மாலை, வளை, கொலுசு, ஒட்டியாணம், மூக்குத்தி, கம்மல், குண்டலம், நெற்றிச் சுட்டி என அமர்க்களமாக பெண்ணுக்கும், பட்டுத்துண்டில் வேட்டி சட்டை காதில் சிவப்புக்கல் கடுக்கன் என ஆணுக்கும் அலங்காரம் செய்வாள்.

நவராத்திரி கொலுவுக்கு எடுத்து பின் பத்திரமாக அட்டைப்பெட்டியில் துணி சுற்றிய மரப்பாச்சிகளை வைத்து இவ்வளவு வருடங்களாகக் காத்து வருகிறாள். யாராவது மரப்பாச்சியைத் தொட்டால் பாட்டிக்கு எம கோபம் வந்து விடும்.

"தொடாதேங்கடீ - இது மட்டும் என் சொத்து-"

"ஏன் பாட்டீ எனக்கு ரொம்ப பிடிச்சுது. இதை எனக்குக் குடேன்" என எவ்வளவோ தடவை குழந்தையா இருந்தப்பவே கேட்டிருக்கேன்.

"இது என் தாத்தா எனக்கு ஆசையா வாங்கித் தந்ததுடீ. இதை நான் யாருக்கும் தர மாட்டேன்."

"ஏன் பாட்டீ உங்கள் ஹனிமூனுக்குப் போனபோது வாங்கித் தந்தாரா?" பாட்டியைச் சீண்டுவோம்.

**கிரிஜா காசி**

"ஆமாண்டீ ஹனிமூனோ, கினிமூனோ, அதெல்லாம் எங்க காலத்துல கிடையாது. இது எனக்கு அவர் ஆசையா தந்ததுடீ. என் உயிருள்ள வரைக்கும் யாருக்கும் தர மாட்டேன்."

இந்த எழுபது வயதிலும் பாட்டி பிடிவாதமாக மரப்பாச்சி தன் உடமை என சொந்தம் கொண்டாடினாள்.

சென்னை வந்து மூன்று நாட்களாகி விட்டன. நாளை நவராத்திரி தொடங்கும். அமாவாசை. 'படி கட்டி பொம்மை அடுக்கணும். என் இரு மன்னிமார்களும் விழுந்து விழுந்து வேலை செய்து படிகட்டி அதற்கு அலங்காரம் செய்து விட்டார்கள். அண்ணா விளக்குகள் சரம் சரமாகத் தொங்க விட்டார். பொம்மைகள் படிப் படியாக இடம் பிடித்துக் கொண்டன. நடுப்படியில் மரப்பாச்சிகள் வழக்கம் போல. நடுவில் பாட்டியின் மரப்பாச்சி செட். இரு பக்கமும் அம்மாவின் மரப்பாச்சிகளும் மன்னிமார்கள் கொண்டு வந்த மரப்பாச்சிகளும்.

மரப்பாச்சியைப் பார்த்ததும் எனக்கு மீண்டும் ஒரு நப்பாசை -

"பாட்டீ இப்பவாவது இதை எனக்குக் குடுத்துடேன்-"

"நல்லா கேட்ட போ - நாதான் வருடக்

கணக்கா சொல்லிண்டிருக்கேன் - நான் மண்டையைப் போட்ட பின்தான் அது யாருக்காவது வரும்..."

கொலு முடிந்தது. மறுநாள் நாங்கள் கல்கத்தா கிளம்பணும். வெளியே ஷாப்பிங் சென்ற நான் கையில் ஒரு பார்சலுடன் வந்தேன். அட்டைப்பெட்டி. கூடம் நிறைய பொம்மைகள். இரு மன்னிமார்களுமாக கவனமாக ஒவ்வொரு பொம்மையையும் பேப்பரில் சுற்றி கொலுப்பெட்டிக்குள் வைத்துக் கொண்டிருந்தார்கள்.

ஹாலின் மூலையில் பாட்டியிடம் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தாள் ஸ்ருதி.

பாட்டி பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்டேன்.

அன்புடன் அவள் கையைப் பிடித்துக் கொண்டு "பாட்டீ நாளை நாங்கள் கிளம்பணும்" என்றேன்.

"போய் வாடீ குழந்தே - இனி எப்ப உன்னைப் பார்ப்பேனோ - என் காலத்துக்கப்பறம் உனக்குத்தான் என் மரப்பாச்சி" என்றாள்.

"இந்த சிறிசு இருக்கே இந்தப் பெட்டியைக் கொண்டு வந்து மரப்பாச்சிக் கதை சொல்லு பாட்டீ - தாத்தா உனக்கு வாங்கிக் கொடுத்த கதை என்கிறது. இவ்வளவு நேரம் அதைத் தான் சொல்லிண்டிருந்தேன்."

"ஸ்ருதிம்மா பாட்டியின் மரப்பாச்சியைக் கொண்டு வா, பெட்டியில் வைக்கணும்" என்றாள் மன்னி.

"இதோ மாமீ" என்றவாறே பெட்டியை எடுத்துக் கொண்டு போன ஸ்ருதி அதை பத்திரமாகக் கொலுப் பெட்டியில் வைத்தாள்.

மறுநாள் கிளம்பி கல்கத்தா வந்து சேர்ந்தோம். இரண்டு வாரங்களாக கேட்பாரற்றுக் கிடந்த வீட்டை பெருக்கி மெழுகி சுத்தம் செய்து அப்பாடா என்று ஓய்ந்து உட்கார்ந்திருந்தேன்.

சட்டென நினைவு வந்து பெட்டியிலிருந்து அட்டைப் பெட்டியை எடுத்துத் திறந்தேன். பக்கத்து வீட்டு பலராமன் மாமா ஒரு சந்தன முட்டி கேட்டிருந்தார். வாங்கி வந்திருந்தேன். அதைக் கொடுத்து வரலாம் என்று பெட்டியைத் திறந்தால் எனக்கு அதிர்ச்சி. பாட்டியின் மரப்பாச்சிகள் இரண்டும் என்னைப் பார்த்துக் கொண்டு இருந்தன.

'எப்படி இது, என யோசித்தேன். ஆமாம் பாட்டியிடம் பேசிக் கொண்டிருந்தபோது ஸ்ருதி எடுத்து வைத்த பெட்டி. இரு பெட்டிகளும் மாறிப் போய் விட்டதை யாரும் கவனிக்கவில்லை. அதேசமயம் - போன் அடித்தது.

அம்மா - "கமலீ பாட்டி போய் விட்டாளாம்" என்றாள்.

"என்னம்மா இது எப்ப?"

"இப்பத்தான். தாகம் எடுக்கிறது. ஜலம் கொடு என்றாள். கொடுத்தேன் - குடித்த பிறகு குழந்தை ஆசையா கேட்டிருக்கா - மரப்பாச்சி அவளுக்கே கொடுத்துடு என்றாள். கண்ணை மூடினாள்" என்றாள்.

அதிர்ச்சி.

அம்மாவிடம் விஷயத்தைக் கூறி விட்டு - "அம்மா அந்த சந்தன முட்டியை பாட்டியை எரிய விடும்போது போட்டு விடுங்கள்" என்றேன்.

> கொலுவிற்கு ரங்கோலி போடும் முன், என்ன டிசைன் வேண்டுமோ, அதை சாக்பீஸால் வரைந்து கொண்டு, மைதா பசையை, உட்புறம் லேசாக தடவிக் கொண்டு, பிறகு கலர் பொடி தூவி ரங்கோலி போட்டீர்களானால் கலையாமல் அப்படியே இருக்கும். ஃபேன் போட்டாலும் பொடி பறக்காது.
>
> – ஜானகி ஸ்ரீநிவாஸன்



# குடும்பதலைவிகளின் சரியான தேர்வு செப் மாஸ்டர்









"TEFLON" is a Regd. Trade mark of DUPONT-USA

கணவர் ஆபிஸ் போக வேண்டும். குழந்தைகளை ஸ்கூலுக்கு அனுப்ப வேண்டும், இந்த அவசரத்தில் பலகையை தேடி, எண்ணெயை எடுத்து ஒவ்வொன்றாய் தேய்த்து கொண்டிருந்தால் முடியுமா. ஒரு குடும்பத் தலைவி என்ற முறையில் என்னுடைய 'சிறந்த தேர்வு 'செப்மாஸ்டர் தான்.

# chefmaster™

## INSTANT CHAPATHI MAKER


SALEM STEEL CUPS


MOULDED ISI POWER CORDS


IMPORTED THERMOSTAT

Manufactured by:

**PREMIER MACHINE TOOLS**

Regd. office : 84-A, Vinayakar Street, Sivananda Colony, Coimbatore - 641 012., Tel: 0422-436833. Fax : 0422 - 439389, INDIA.

**Distributores :**

Madras : **M/s. Sha Taraji Ramlal & Sons.**, 388, Mint Street, Madras - 600 079 Phone : 518558

Coimbatore : **M/s. Hi-Tech Engineers**, 150, 5th Street, Gandhipuam, Coimbatore - 641 012 Phone : 430584

Madurai : **M/s. Anitha Marketing Agencies**, 36, Lakshmipuram 3rd Street, Madurai - 625 001, Ph : 620076

*Distributors required for all major cities of Tamil Nadu, Andhra Pradesh and Karnataka*

# வாழ்வை உயர்த்தும்

தேவி வழிபாட்டில் முக்கிய இடத்தைப் பெறுவது ஸ்ரீசக்ரம். நடுவில் பிந்து எனும் புள்ளியும் முக்கோணங்களால் ஆன ஆவரணங்களும், பிறகு தாமரையுமாக விரிகிறது ஸ்ரீசக்ரம். பிந்து மையாக தேவி அமர்ந்திருக்க, கோணங்களிலே தேவியின் படைகளாக யோகினிகளும் மற்றவர்களும் ஆட்சி புரிவதாக தேவியின் சரிதம் சொல்கிறது.

ஆதிசங்கரர் இந்தியா முழுவதும் தன் புனிதப்பாதங்களால் நடந்து

வில் பிந்து எனும் புள்ளியும் முக்கோணங்களால் ஆன ஆவரணங்களும், பிறகு தாமரையுமாக விரிகிறது ஸ்ரீசக்ரம். பிந்து மையாக தேவி அமர்ந்திருக்க, கோணங்களிலே தேவியின் படைகளாக யோகினிகளும் மற்றவர்களும் ஆட்சி புரிவதாக தேவியின் சரிதம் சொல்கிறது.

ஆதிசங்கரர் இந்தியா முழுவதும் தன் புனிதப்பாதங்களால் நடந்து

பல சக்திஸ்தலங்களில் ஸ்ரீ சக்ரத்தை ஸ்தாபித்திருக்கிறார். அவை மகோன்னதமான ஸ்தலங்களாக விளங்கி வருகின்றன.

'இதே ஸ்ரீசக்ரம் சமய வழிபாட்டோடு மட்டும் நின்று விடுவதில்லை. இது மனிதனையும், இந்த பிரம்மாண்டத்தையும் இணைக்க வல்லது' என்கிறார் இவ்வழியில் பல்லாண்டுகள் ஆராய்ச்சி செய்து பல அதிசய உண்மைகளை வெளிக்கொணர்ந்து இருக்கும் திரு. ஆர்.கே.எஸ். முத்துக்கிருஷ்ணன்.



யந்த்ரம், தந்த்ரம் எனும் முறைகளிலே 'தந்த்ரம்' மூலமாக பல சித்துக்களைச் சாதிக்க வல்லவர்கள் தாந்த்ரீகர்கள் எனப்படுவார்கள். இவ்வகையிலே கைதேர்ந்தவர்கள் மதுரையை அடுத்துள்ள கம்பளத்து நாயக்கர்கள். இப்பரம்பரையிலே வந்த முத்துகிருஷ்ணன் அடிப்படையிலேயே நிறைய மானுடசக்தி மற்றும் அண்டத்தின் சக்திகளைப் பற்றி தெரிந்தவராகவே வளர்ந்தார்.

"ஆனால் மந்திர, தந்திரங்களின் மூலம் யாருக்கேனும் கெடுதல் செய்வதை நான் அறவே வெறுத்தேன். அப்படிச் செய்பவர்களின் குடும்பங்களும், குழந்தைகளும் பிற்பாடு நசித்துப் போவதை நான் பார்த்திருக்கிறேன். அதனால்தான் வாழ்க்கையில் நம்மால் முடிந்த நல்லதையே செய்ய வேண்டும் எனும் வைராக்கியமே எடுத்துக் கொண்டேன். என்

"ஆனால் மந்திர, தந்திரங்களின் மூலம் யாருக்கேனும் கெடுதல் செய்வதை நான் அறவே வெறுத்தேன். அப்படிச் செய்பவர்களின் குடும்பங்களும், குழந்தைகளும் பிற்பாடு நசித்துப் போவதை நான் பார்த்திருக்கிறேன். அதனால்தான் வாழ்க்கையில் நம்மால் முடிந்த நல்லதையே செய்ய வேண்டும் எனும் வைராக்கியமே எடுத்துக் கொண்டேன். என்

னிடம் இருக்கும் ஆற்றல் மூலமாக இந்த மனித சமுதாயம் நலமாக வாழ வேண்டும் என்பதுதான் என்னுடைய தீவிரமான ஆசை" என்கிறார்.

கோவையில் டிராஃப்ட்ஸ்மேனாக வருவதற்குப் பயின்ற முத்துகிருஷ்ணனுக்கு அப்போதே கோடுகளும், முக்கோணங்களும் பரிச்சயம். அதையே ஒரு சமயம் ஸ்ரீசக்ரத்தில் பார்த்தபோது 'இதில் ஏதோ மறைபொருள் இருக்கிறது' என உள்ளுணர்வு உணர்த்த ஆராய்ச்சி செய்ய ஆரம்பித்து இருக்கிறார். பிறகு இதே துறையில் ஆராய்ந்த ரஷ்ய அறிஞரின் அறிமுகமும் தெய்வ அருளால் கிடைக்க மேலும் தீவிரமானார்.

பிரபஞ்சமே ஸ்ரீசக்ரத்தின் வடிவம். அதனுள் இருக்கும் மனிதனும் ஸ்ரீ சக்ரத்திற்குள் அடக்கமே. அவனுடைய வாழ்க்கையின் ஏற்றத்தாழ்வுகள் அதில் சொல்

> **மரப்பாச்சி, மர வேலைப்பாடுள்ள கொலு பொம்மைகளை வார்னிஷ் அடித்து வைத்தால் இப்போது வாங்கியது போலிருக்கும்.**
>
> **— லலிதா முரளீதரன்**

லப்படுகின்றன என்ற ரீதியில் ஆராய்ச்சி செய்து, சில மனிதர்களுக்குப் பலன் சொல்லப் போக ஆச்சர்யப்படும் வகையில் அவை பலித்தன.

"எனக்கு என்ன சொல்றதுன்னே தெரியலே. நான் ஏதோ பெரிய மகானோ, ஜோசியனோ அல்ல. எனக்குக் கிரகங்கள், ஆன்மீகச் செய்திகள் இதெல்லாம் தெரியாது. ஒரு மனிதனின் பிறந்த தேதியையும், அவனுடைய கையெழுத்தையும், பெயரையும் கொண்டே அதில் எழுகின்ற கோணங்களைக் கொண்டு அவர்களின் வாழ்க்கையை, எதிர்காலத்தைச் சொல்லி விடுவேன்."

அந்த வகையில்தான் காங்கிரஸ் வெற்றி பெற்றாலும் ராஜீவ் பிரதமராக மாட்டார் என 91-லும், பி.வி. நரசிம்மராவ், ஜெயலலிதா 96 - ல் வீழ்ச்சியடைவார்கள் என்றும் முன்னமேயே கணித்துக் கூறியிருக்கிறார்.

"இந்த உலகில் பணம் ரொம்ப முக்கியம். அந்தப் பணத்தை மனிதன்தான் படைத்தான். அப்படி இருக்கும்போது நல்ல செல்வச் செழிப்பை மனிதர்கள் பெறவாமே என்ற ரீதியில்தான் என் ஆராய்ச்சியை தொழில் நிறுவனங்களில் திருப்பினேன். தொழிற்சாலையின் உரிமையாளரின் பிறந்த தேதி, பெயரினைக் கொண்டு அந்தத் தொழிற்சாலையின் விதியையே நிர்ணயிக்க முடியும். அப்படிப் பலருக்கும் சொல்லியிருக்கிறேன். குறிப்பிட்ட மனிதருக்கு இது நல்ல பீரியட் எனும்போது பத்து ரூபாய் முதல் போடும் இடத்தில் நூறு ரூபாய் முதல் போட்டால் இன்னும் லாபம் அதிகம் கிடைக்கும். அதே போல 'நேரம் சரியில்லை' என்றால் ஏராளமாக இன்வெஸ்ட் செய்யாமல் நஷ்டத்திலிருந்து தப்பித்துக் கொண்டு விடலாம் இல்லையா?"

என்கிறார். பல கோடி ரூபாய் லாபம் சம்பாதிக்கும் வண்ணம் பல தொழிலதிபர்களுக்கு இவர் அறிவுறுத்தியிருக்கிறார். கம்பெனிகளின் லோகோ, பெயர்களை வடிவமைப்பதன் மூலம், மாற்றம் செய்வதன் மூலம் நல்லகாலத்தை வரவழைத்துக் கொள்ளலாம் என்கிறார் முத்துகிருஷ்ணன்.

சென்னை - 28, மந்தவெளியில் நெ. 1, சடையப்பன் தெருவில் வசிக்கும் ஆர்.கே.எஸ். முத்துக்கிருஷ்ணன் (தொ - 4937482) பேசும் மதுரைத் தமிழில் எத்தனை இனிமை இருக்கிறதோ அத்தனை தீர்மானமும் இருக்கிறது.

"கோடுகளும், முக்கோணங்களும்தான் இந்த உலகத்தை ஆளுகின்றன என்பதில் சந்தேகமே இல்லை. 'அண்டத்தில் உள்ளதுதான் பிண்டத்திலும் உள்ளது' என்பது ஆழ்ந்த ஆன்மீக விஷயங்கள் தெரிந்தவர்களுக்கு மட்டுமல்ல, விஞ்ஞானிகளுக்கும் தெரியும். இதே தத்துவம்தான் ஸ்ரீசக்ராவும். இது உலக இயக்கத்தில், சுழற்சியின் பிரதிபலிப்பாக இருக்கிறது. அதனால்தான் இதைப் பற்றி மேலும் மேலும் ஆராய்ச்சி செய்து கொண்டே இருக்கிறேன்.

என் வாழ்க்கையின் இலட்சியமே இந்த முக்கோணவடிவைக் கொண்டு செய்யப்பட்டுள்ள, மனித சாதனைக்கு விஞ்சிய பிரமிடுகளைப் பற்றித் தெரிந்து கொள்வதுதான். அதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டு வருகிறேன்.

பொதுவாக யாருக்காகவேனும் ஸ்ரீசக்ராவை வரைய வேண்டுமானால் 'வைப்ரேஷன்' நிறைந்த கோயிலில் சென்றுதான் வரைவேன். சிதம்பரத்தில் உயரத்திலும், காஞ்சீபுரத்தில் பூமியிலும், திருவானைக்காவில் அகிலாண்டேஸ்வரியின் தோடுகளிலும் ஸ்ரீசக்ரம் இருப்பதை நீங்கள் அறிவீர்கள். அந்த இடங்களுக்குச் சென்று நான் வரைவது வழக்கம்.

அதே போல உலக நன்மைக்காக பிரமிடுகளில் சென்று அந்த இடத்தில் ஸ்ரீசக்ரம் வரைந்து கொண்டு வர எண்ணியுள்ளேன். ஏனென்றால் அங்கும் 'வைப்ரேஷன்ஸ்' மிக அதிகம். பிரமிடுனுள் வைக்கப்படும் எந்தப் பொருளும் கெடுவதில்லை என்பது உங்களுக்குத் தெரியும். அழுகும் பொருளுக்கே அந்தச் சிறப்பு என்றால், ஏற்கெனவே சக்திகள் நிறைந்த ஸ்ரீசக்ரத்தை அங்கு வரைந்தால் அதைவிட சக்தி கேந்திரம் வேறு எதுவாக இருக்க முடியும். என்னால் முடிந்த அளவு நிறைய அங்கு அமர்ந்து வரைந்து கொண்டு வரப் போகிறேன்" என்கிறார்.

"எதில் வரைவீர்கள்?"

"செப்பிலும், தங்கத்திலும் வரைந்து செய்யப்படுபவைதான் மிக வீர்யம் நிறைந்ததாக அமைகிறது" என்கிறார்.

இவர் வாங்கும் ஃபீஸ்தான் மலைக்க வைக்கிறது. இன்டர்நெட்டில் சமீபத்தில் காலடி எடுத்து வைத்திருக்கிறார்.

"சும்மா ஏதோ சீரியஸாக இல்லாமல் இதையும் பார்க்கலாமே என வருபவர்களைத் தடை செய்யவே இந்த அளவு ஃபீஸ். தவிரவும் கோடிக் கணக்கில் லாபம் தரக்கூடிய தொழில் நடத்தும் காலநிலையைக் கூறும் போது அவர்களிடம் வாங்குவதில் தவறென்ன? ஆனால் எளியவர்கள் பலருக்கும் உதவி செய்துதான் வருகிறேன்" என்கிறார் முத்துக்கிருஷ்ணன்.

**— பவித்ரா**

நடு இரவில் திடீரென்று விழிப்பு வந்தபோது தலை பாறாங்கல்லாய்க் கனத்தது. ஒருகணம் எங்கிருக்கிறோம் என்று புரியாத நிலை. அடுத்தகணம் அடிவயிற்றில் எழுந்த ஒரு குமட்டல் சுதாரித்து எழுவதற்குள், எழுந்து பாத்ரூம் ஓட வேண்டும் என்கிற யோசனை செயல்வடிவம் பெறுவதற்குள் வாய் வழியே வெளிப்பட்டுவிட கொடகொடவென்று திடீரென்று குழாய் திறக்கப்பட்டாற் போல் கீழே கொட்டிய திரவத்தின் துர்நாற்றம் கணேசனைச் செயலிழக்க வைத்தது. பதற்றப்பட வைத்தது. எங்கே பூர்ணிமா எழுந்து விடுவாளோ என்கிற பயம் வியர்க்க வைத்தது. பூர்ணிமா சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள்.

அவளுக்கு அந்த அறையின் நிலைமை புரிய சில விநாடிகள் பிடித்தன. சட்டென்று புடவைத் தலைப்பு எடுத்து மூக்கைப் பொத்தினாள். அறையை விட்டு வெளியே ஓடினாள். பின்னேயே ஓடி வந்த கணேசனை ஏறிட்டுப் பார்த்தவள் கண்களுக்கு உவமை இல்லை.

"எத்தனை நாளா இந்தப் பழக்கம்?" என்றாள் உச்சஸ்தாயியில்.

# வயிற்றுக்குள் கத்திய அது



கணேசன் அவளை அமைதிப்படுத்துவதான சைகையுடன் " 'ஐ'ம் வெரி வெரி சாரி பூர்ணிமா... வாழ்க்கைல முதல் முதல் தடவையா இன்னிக்குத்தான். பார்ட்டில எல்லா பிரண்ட் ஸும் கம்ப்பெல் பண்ணதால.... சாரி பூர்ணிமா... இனிமே இந்தச் சனியனை நினைச்சுக்கூடப் பார்க்க மாட்டேன்...." என்றான் நடுங்கிய குரலில்.

"அதெல்லாம் அப்புறம். முதல்ல அந்த ரூமை

# பெ. நாயகி

யார் சுத்தப் படுத்தப் போறா, உங்களுக்கு ஊத்திக் கொடுத்த பிரண்ட்ஸா?"

கணேசன் மௌனமாக நின்றான்.

"எனக்குத் தெரியாது. இன்னும் பத்து நிமிஷத்துல அந்த ரூம் சுத்தமா இந்த இழ வெடுத்த நாத்தமில்லாம இருக்கணும். இல்லை, நான் கத்தி ஊரைக் கூட்டுவேன்..." என்றாள் குரலை உயர்த்தி.

கணேசனுக்கு திக்கென்றது. வாழ்க்கையில் அவன் தன் ஜட்டியைக்கூட துவைத்து அலசியது கிடையாது. அவனைப் போய் ரூம் சுத்தம் செய்யச் சொன்னால்...

"ப்ளீஸ் பூர்ணிமா... தெரியாம பண்ணிட்டேன். டோட்டலா நான் என் கன்ட்ரோல்லயே இல்லை. அதனால்தான் வாமிட் ஆயிருச்சு. வேணும்னு செய்யதில்லை..."

"இந்தக் கன்றாவியை வேணும்னு வேற செய்வாங்களா? இப்ப நீங்க பேசறதைப் பார்த்தா நான் அந்த ரூமை சுத்தம் செய்வேன்னு ஏதும் எதிர்பார்ப்பா?"

கணேசனின் அமைதியான திருட்டு முழி ஆமாம் என்று சொல்லாமல் சொல்லியது.

"நோசான்ஸ். ஐயோ! அந்த கெட்ட நாத்தம் இங்கே வரை குடலைப் பிடுங்குது. நீங்க குடிச்சீங்க, நீங்க வாந்தி எடுத்தீங்க. புருஷன் உடம்பு



முடியாமக் கிடந்து வாயிலெடுத்தா கையில் பிடிக்கப் போடலாம். உங்க கொழுத்த வேலைக்கு தண்டனை வேணாம்? போங்க உள்ளே. பாத்ரூம்ல ஃபினாயில் இருக்கு. தரையை நல்லா துடைச்ச பிறகு ஃபினாயில் போட்டுக் கழுவுங்க. ஃபேனை முழு ஸ்பீட்ல சுத்த விடுங்க. ஜன்னல்களைத் திறந்து வைங்க. பத்து நிமிஷம் கழிச்சு டிரஸ்ஸிங் டேபிள்ல ரூம் ஃப்ரெஷ்னர் இருக்கு, எடுத்து ஸ்ப்ரே பண்ணிட்டு என்னைக் கூப்பிடுங்க..."

என்று விரட்டாத குறையாக அவனை அந்த அறையினுள் தள்ளிக் கதவை வெளிப்புறமாகத் தாளிட்டாள். அடுப்படிக்கு நடந்து குளிர்ந்த நீர் குடித்து விட்டு வந்து சோபாவில் தொப்பென்று உட்கார்ந்தாள். அயர்ச்சியாக இருந்தது. அப்படியே சாய்ந்து தூங்கி விட்டாள்.

அவள் சொன்ன வேலைகளைச் செய்கையில் நாற்றம் பொறுக்க முடியாமல் இன்னும் இருமுறை வாயிலெடுத்தான் கணேசன். சனியன் பேய் சண்டாளி சூர்ப்பனகை என்று மனைவியைத் திட்டியபடியே துடைத்தான். எல்லாம் முடிந்த பிறகு கதவைத் திறந்து பூர்ணிமா சோபாவில் தூங்கும் காட்சியை வெறித்து விட்டு அவளை எழுப்பாமல் கட்டிலில் போய் உட்கார்ந்தான். முதலில் மிரட்டலாகச் சொன்னாளே ஒழிய சுத்தம் செய்ய ஆரம்

# குழந்தை இல்லையா?

## மாதவிடாய் கோளாறா?

### வரவும் - நிறுத்தவும் தொடர்ந்து மாத்திரைகளா?

திருமணம் ஆகி குழந்தை இல்லாத பல பெண்களும், 13-14 வயதில் பருவம் அடைந்ததிலிருந்தே பல இளம்பெண்களும் மாதவிடாய் வரவும், நிறுத்தவும் கூட தொடர்ந்து 5 நாள்/21 நாள் ஹார்மோன் மாத்திரைகளை சாப்பிட்டுக் கொண்டே வருகிறார்கள். இதன் விளைவுகளை அறியாமலும் திருமணம் ஆனால் சரியாகிவிடும்- குழந்தை பிறந்தால் சரியாகிவிடும் என்று கூறுவதை நம்பியும் பின்னர் வாழ்க்கையே வெறுமையாய் போனவர்கள் பலர்! இன்னும் கருக்கோளக் கட்டிகள் (Ovarian Cysts- PCOD), கருக்குழாயில் நீரடைப்பு சதையடைப்பு (F. Tube Block), முட்டையே (Follicle) தானாக உருவாகாத பெருஞ்சிக்கல், கருப்பை பலவீனம், வீக்கம், தொடர்ந்து கருச்சிதைவு (Missed Abortion), கருப்பை புண்கள்/வெள்ளைபடுதல் கடுமையான வயிற்று வலி (Endometriosis, Cervicitis, Hyperplacia) மற்றும் கட்டிகளால், கறுப்பான தாறுமாறான ரத்தப் போக்கு போன்ற பல காரணங்கள் குழந்தைபேறுக்கு தடையாக உள்ளன.

இம்மாதிரியான குறைபாடுகள் நோய்களுக்கு வேறு மருத்துவமே இல்லை என்று தவறாக எண்ணி ஒரே விதமான ஹார்மோன் மருந்துகளையே பெரும்பாலும் வருடக் கணக்கில் பலன் இல்லாமலும் சாப்பிட்டு வருகிறார்கள். சிலருக்கு இப்படியே கருத்தரிக்கும் இளம் வயது வீணாகி விடுகிறது.

**உயிரணு இல்லாத ஆண்கள்:** (Azoospermia) திரு. கணேஷ் (34), சென்னை-4. உயிரணு உற்பத்தி இல்லாத இவருக்கு வேறு எந்த சிகிச்சையும் பலனில்லா நிலையில் எமது குரு மருந்து சிகிச்சை ஒரு சில மாதங்களுக்குப் பின் 20 மில்லியன் உயிரணு உற்பத்தியாகி உள்ளது சோதனையின் (Test) மூலம் உறுதியாகி உள்ளது. இதுபோல பலனடைந்து வருபவர்கள் பலர். ஆண்களின் குறைபாடுகளில் மிகவும் சிக்கலானதும் பிறரிடம் உயிரணு பெறுதல் அல்லது தத்து எடுத்தல் இரண்டு மட்டுமே தீர்வு என்று கருதப்படும் இந்த கோளாறுக்கு வெற்றிகரமான சிகிச்சை எம்மிடம் உண்டு. 5-6 மில்லியன் உள்ளவர்கள் பலர் பல மாத்திரை, ஊசி மருந்து எடுத்தும் தற்காலிகமாக அதிகமாகி 3 மாதம் கழித்து சோதித்தால் முன் உள்ளதும் இல்லாமல் போனவர்களும் பலர் உண்டு.

இக்குறைகளை எமது 180 ஆண்டு பாரம்பரை அனுபவம் பெற்ற குரு மருந்துகளால் தீர்த்து குழந்தைபேறு அடைய உதவுகிறோம்.

### 40 வயதில் 15-20 நாள் நிற்காத இரத்தப் போக்கா? கருப்பை ஆபரேசன் வேண்டாம்!

40 வயது நெருங்கும் ஆயிரக்கணக்கான பெண்கள் 15-20 நாள் நிற்காத அதிகமான இரத்தப்போக்கு, இடுப்பு முறிவு போன்ற வலி, கால்கள் உளைச்சல், இரத்த சோகையினால் அவதிப்படுகிறார்கள். இவர்களுக்கு கருப்பை வீங்கி இருப்பதும் உண்டு. ஆபரேசன் ஒன்றுதான் தீர்வு என்று கூறுவதுண்டு. ஆனால் எமது சிகிச்சையின் மூலம் இது பூரணமாக குணம் பெறலாம். ஆபரேசனையும் தவிர்க்க முடியும். அதன்பின் விளைவான உடம்பு, வயிறு உப்புதல், Incision ஹெரணியா, மார்பு படபடப்பு, இடுப்பு-மூட்டு வலி, குடைச்சல், தூக்கமின்மையையும் தவிர்க்கலாம்.

அக்டோபர் 17-ந் தேதி, டாக்டரை திருச்சி-1, ஜங்ஷன் ரோடு, திருவள்ளுவர் பஸ் நிலையம் அருகில், ஹோட்டல் அஜந்தாவில் சந்திக்கலாம். போன்: 460501.

# கணையத்தில் கட்டி குணமாகியது

14 வயதுள்ள போலீஸ் அதிகாரி மகளுக்கு திடீரென்று எவ்வளவு சாப்பிட்டாலும் தீராத பசி, அடிக்கடி இனிப்பு சாப்பிட்டுக் கொண்டே இருக்க வேண்டிய நிலை. இல்லாவிட்டால் மிகுந்த சோர்வுடன் மயக்கம் கூட ஏற்பட்டு விடும். C.T. Scan மற்றும் ரத்த பரிசோதனை செய்ததில் அவளுடைய கணையத்தில் (Pancreas) கட்டி (Insulinoma) உள்ளது உறுதியானது. இது மிகவும் அபூர்வமான ஒரு நோய். இதை குணப்படுத்தும் சிகிச்சையோ, ஆபரேஷன் செய்யும் வாய்ப்போ இல்லை என்றும் கூறப்பட்டது.

எமது குரு மருந்து சிகிச்சை தொடங்கி 15 நாளில் கடும் பசி, சோர்வு, மயக்கம் நின்றது. 4 மாத சிகிச்சைக்கு பின் முழு குணம் அடைந்தாள். இது போன்ற கணைய அழற்சி நோய் என்கிற Pancreatitis நோய் உள்ளவர்களும் ஆண்டு கணக்கில் தீராத நோய் என்று துன்பப்படுவது உண்டு. எமது சிகிச்சையில் முழு குணம் பெறலாம்.

## கருப்பை புற்று

Mrs. சிரங்கம்மாள் (வயது 56) காமனாம்பட்டி, திருச்சி-13. இவருக்கு கருப்பையில் புற்று நோய் ஏற்பட்டு இரத்தம், சீழ் ஒழுக்குடன் மிகவும் துன்பப்பட்டு வந்தார். எமது குரு மருந்து சிகிச்சையில் குணமடைந்து 5 மாதமாக நலமுடன் இருக்கிறார். எந்த வயதிலும் நீடித்த வெள்ளைபோக்கு, கருப்பை புண்கள் (Cervical Erosion, Cervicities) பலருக்கு புற்று நோயாக மாறி விடுகிறது. இதில் பெண்கள் அலட்சியம் கூடாது. கருப்பை மார்பக புற்று, மூளை கட்டிகள் இரத்தப் புற்று (Leukemia), தொண்டை, கன்னம், கல்லீரல், இரைப்பை, தைராய்டு & அக்குள் காப்பி, மலக்குடல் புற்று உள்பட எல்லா புற்று நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கிறோம். 20-40 நாளில் குத்தல்-வலி நின்று கட்டிகள் சுருங்கி முன்னேற்றம் தெரிவதை உணரலாம்!

## பெண்கள் மார்பக கட்டி

பெண்கள் மார்பகத்தில் குத்தல், வலியுடனோ வலி இல்லாமலோ ஒருவித கட்டி (Fibro Adenoma) வருவதுண்டு. இதற்கு நவீன மருத்துவத்தில் இதுவரை மருந்து இல்லை. பலமுறை ஆபரேஷன் செய்த பின்பும் கட்டி வளர்ந்ததால் பலர் எம்மிடம் சிகிச்சை பெறுகிறார்கள். பலர் ஆண்டுக் கணக்கில் வேறு மருந்து சாப்பிட்டும் குணமில்லை என்று வருகிறார்கள். எமது 4 மாத குரு மருந்து சிகிச்சையில் இது குணம் தெரிவதை காணலாம். பயத்துடன் நாட்களை கடத்த வேண்டாம்.

**சன் T.V.-ல்**

2-8-97 கருப்பை நோய்கள், புற்று நோய்; 9-8-97 ஆண்மை, உயிரணு குறைவு; 16-8-97 எய்ட்ஸ் மற்றும் குருமருந்து பற்றிய பேட்டி வெளியானது.



**Dr. S. JEYARAM,**
M.D. (A.M.), RMP, M.A., M.A.,

# நவோதயா சித்தர் மருத்துவமனை

20, ஆற்காடு ரோடு, கோடம்பாக்கம், சென்னை - 24.
(லிபர்டி பஸ் ஸ்டாப் / சேகர் எம்போரியம் அருகில்)
போன் : 044-4810752 / 044-4982258 (வீடு)

ஆலோசனை நேரம் : காலை 10 முதல் 2 மணி வரை, மாலை 4 முதல் 8.30 மணி வரை, ஞாயிறு விடுமுறை

முன்பதிவு பெற்று வரவும்.



பல வீட்டு கொலுக்களை பார்க்கப் போகும்போது நாம் காண்பது.... பாடத் தெரிந்தவர்களை 'பாடுங்களேன்' 'பாடுங்களேன்' என்று தாங்கோ தாங்கு என்று தாங்குவார்கள். ஆனால் பாட ஆரம்பித்தவுடன் எல்லோரும் பேச ஆரம்பித்து விடுவார்கள். பாடுபவர்கள் தொடருவதா, நிறுத்தி விடுவதா எனத் தர்மசங்கடப்படுவார்கள். பாடிக் கொண்டிருக்கும்போது பேசாமல், பாடி முடித்தவுடன் 'ரொம்ப நன்றாக இருந்தது' என்று பாராட்டுவதே நாகரீகம்.

— உஷா

பித்து கொஞ்ச நேரத்தில் "நகருங்க நானே பண்றேன்" என்று புடவையை இழுத்துச் செருகிக் கொண்டு வருவாள், கண்ணீருடன் அறிவுரை சொன்னவாறே மிச்ச வேலைகளைச் செய் வாள் என்ற நம்பிக்கை வீணானதுடன் அவள் தூங்க வேறு செய்தது அவன் ஆண்மையை அதிகம் பாதித்தது.

சே! என்னென்ன கேள்விப்படுகிறோம். எத் தனை வீடுகளில் தினம் குடியும் அடியும் தடியு மாக இருக்கிறது. இவள் மாதிரியா இருக் கிறார்கள் மற்ற பெண்கள். இவளுக்குத் திமிர் ஜாஸ்தி. எல்லாம் நான் கொடுத்த இடம். என்ன வேண்டுமானாலும் செய்ய சுதந்திரம். கரஸ்பான்டென்ஸ் கோர்ஸ் படிக்கணுமா? ஓ.கே. கம்ப்யூட்டர் க்ளாஸா ஓ.கே. மாதர் சங்கமா, ஓ.கே. சமைக்க மனசில்லையா ஓட் டல் போகணுமா ஓ.கே என்று தூக்கி வைத்தது தவறு. அதும் கல்யாணமாகி ஐந்து வருஷத் துக்கப்புறம் உண்டாகியிருக்காளே என்று எக்ஸ்ட்ரா ஏற்றம். ஒருநாள் நண்பர்களுடன் தண்ணி அடிச்சா மன்னிப்பு கிடையாதா. அதும் தண்ணியடிச்சிட்டு வந்து கலாட்டாவா செய்தேன். இவளுக்குக்கூடத் தெரியாதே. பார்ட்டியிலிருந்து கிளம்புமுன் நண்பர்களின் கேலியைக்கூடப் பொருட்படுத்தாமல் எத் தனை முறை வாய் கொப்பளித்து பாக்கு

மென்று மவுத் ப்ரஷ்னர் போட்டு ஸ்ப்ரே அடித்து ஊதிக் காட்டி வீடு வந்த பிறகும் அதிகம் பேசாமல் களைப்பாய் இருப்பதாய்ப் பொய் சொல்லிப் படுத்து உறங்கியது எல்லாம் இவளுக்குப் பயந்தா? என்ன பயம். பொம்பளை. அதுவும் என்னைவிட நான்கு வயது சின்னவள். என்ன செய்து விடுவாள்? ஓங்கி ஓர் அடி விட்டால் தாங்குவாளா? அவள் மேல் மரியாதை வைத்துத் தானே பயப்படுவது போல் பாசாங்கு. அந்த மரியாதையை நிஜமாகவே பயம் என்று எடுத்துக் கொண்டு ஆடுவதா? இவளுக்குப் பாடம் கற்பித்தே ஆக வேண்டும். நாளையும் குடித்து விட்டு வந்தால் என்ன செய்து விடுவாள்?

தீர்மானித்தான். முறுக்கேறிய நரம்புகளுடன் மணி பார்த்தான். படுபாவி. என் தூக்கம், மூடு. போதை சகலத்தையும் அழித்துவிட்டுத் தூங்குகிறாள்!

விடிவதற்குக் காத்திருந்தான். காலையில் அவளிடம் பேசவில்லை. அவளும் இவனிடம் பேசாமல் ஒதுங்கியவாறே இருந்தது எரிச்சலைத் தூண்டியது. ராத்திரி நடத்தைக்கு மன்னிப்பு கேட்பாள் என்று எதிர்பார்ப்பு தூளானதில் இன்னும் கடுப்பு ஏற இன்று குடிக்காமல் வீடு வருவதில்லை என்று உறுதி பூண்டான்.

மறுநாள் இரவு கதவைத் திறந்த வேகத்தில் விருட்டென்று திரும்பி உள்ளுக்கு நடந்த பூர்ணிமா நான்கைந்து அடிகள் நடந்த பிறகு திடீரென்று விஸ்கி நெடி மூக்கைத் தாக்கத் திரும்பினாள்.

திமிர்ப் புன்னகையுடன் நின்றிருந்தான் கணேசன்.

"நேத்து தெரியாம ஒரு தப்பு பண்ணினதுக்கு அந்தத் துள்ளு துள்ளுனியே. இன்னிக்கு தெரிஞ்சே குடிச்சிட்டு வந்திருக்கேன். என்ன செஞ்சுருவ?" என்றான் எக்காளமாக.

பூர்ணிமா நிதானமாக அவனை ஏறிட்டாள். வாசலை நோக்கிக் கையை நீட்டினாள். "நீங்களா வெளியே போயிருங்க" என்றாள் மெதுவாக ஆனால் உறுதியான குரலில்.

"ஹா! வெளியவா? எங்கே? இது என் வீடு"

"இது நான் குடியிருக்கிற வீடு. மரியாதையா வெளியே போயிருங்க. ஒரு குடிகாரனுக்கு இங்கே இடம் கிடையாது. வெளியே போறீங்களா இல்லை ஊரைக் கூட்டவா" என்றாள் குரலை உயர்த்தி.

"கூட்டேன். என்ன பயமுறுத்தறியா? எல்லோரும் வந்து உன்னைத் தான் கண்டிப்பாங்க. எதுன்னாலும் நீ தாம்மா அனுசரித்துப் போகணும். அவன் என்ன இருந்தாலும் உன் புருஷன் என்று அட்வைஸ் பண்ணுவாங்க" நிற்க முடியாமல் லேசாகத் தடுமாறி சோபா

வில் கை வைத்துத் தள்ளாடினான்.

"நல்லபடியா சொன்னா கேட்கமாட்டீங்க. உங்களைப் போலீஸைக் கூப்பிட்டுத்தான் துரத்தணும்..." என்றபடி விறுவிறு என்று உள் அறைக்கு நடந்தாள். போனை எடுத்து நம்பர் சுழற்றினாள். "ஹலோ போலீஸ் ஸ்டேஷன்... இங்கே ஒரு குடிகாரன் வீட்டுக்குள் புகுந்து கலாட்டா பண்ணிட்டிருக்கான்..." என்று சொல்ல ஆரம்பித்தாள்.

கணேசனுக்கு சப்த நாடி சகலமும் ஒடுங்கியது. போதை பனிச்சென்று காணாமல் போனது. ஓட்டமாய் ஓடி போனைக் கட் செய்தான். "அடிப்பாவி! நீயும் ஒரு பொம்பளையா? நான் என்ன அன்னிய குடிகாரனா - போலீசைக் கூப்பிடறயே - நான் உன் புருஷன்டி..."

"என்னைப் பொறுத்தவரை செத்துப் போயிட்டா எப்படி ஒரிஜினல் பெயரெல்லாம் போய் பாடி, பிணம்னு பேராயிடுதோ அதே மாதிரி பாட்டிலைக் கையில் எடுத்தாச்சுன்னா அவனுக்கு ஒரே பொதுப் பெயர்தான். குடிகாரன். அது புருஷன்னாலும் சரி, அப்பா, பிள்ளைன்னாலும் சரி. ஒரு குடிகாரனோட ஒரே வீட்டில் என்னால இருக்கவே முடியாது. நீங்களே வெளியே போயிருங்க"

"போறேன்டி. ஒன்ஸ் அன்ட் ஃபார் ஆல் போறேன். உன் வாழ்க்கையை விட்டே போறேன்..." என்று புலம்பியபடியே ஒரு சூட்கேஸை எடுத்தான். இரண்டு மூன்று செட் துணிமணி அடைத்தான். "என்னைத் தேடாதே" என்றான். வாசலுக்கு நடந்து திரும்பிப் பார்க்காமல் வெளியே போனான்.

மறுநாள் கைகளைப் பிசைந்தவாறு அந்த வக்கீலின் வரவேற்பறையில் அவருக்காகக் காத்திருந்தான். சிவந்திருந்த கண்கள் வெறித்தபடி இருந்தன. கொஞ்சமும் தணியாத கோபம் நேரம் ஆக ஆகக் கூடிக் கொண்டுதான் போனது. நேற்று இரவு பெட்டியுடன் கிளம்பியவனுக்கு அவன் வாயிலிருந்து கிளம்பிய வாடையும் முகத்தில் வெளித் தெரிந்த கலவர உணர்வும் அவன் போன ஓட்டல்களில் இடம் இல்லாமல் செய்து விட்டன. அந்த இரவில் எந்த நண்பன் வீட்டுக்கும் போக தைரியம் வரவில்லை. கொஞ்சம் தண்ணியடிச்ச புருஷனை போலீஸ் கூப்பிட்டு எந்த மனைவி விரட்ட ரெடியாயிருக்கிறாள் என்று நண்பர்கள் வீட்டில் சோதனை செய்து பார்க்கத் தயாராக இல்லை. அவன் நிலையைப் பார்த்த ரிக்ஷாக்காரன் ஒருவன் என்ன வாத்யாரே என்று ஆரம்பித்து மேற்கொண்டு கேட்டது அவனை அதிர வைத்தது. ஒருகணம் உடனடியாகக் கண்ணாடியில் தன்னை பார்த்துக் கொள்ள விரும்பினான். கடைசியில் நொந்து போய் ஒரு சந்துக்குள் இருந்த பாடாவதி ஓட்டல் ஒன்றில் ரூம் எடுத்து, புழுக்க விச்சத்துடனான கட்டிலில், ஹைதர் காலத்து தலையணையில் தூக்கம் வராமல் புரண்டு விடியும்வரை காத்திருந்து பொது டாய்லட்டின் சுத்தம் பற்றிய எண்ணத்தை ஒதுக்கிக் காலைக்கடன்கள் முடித்துவிட்டு ஆபீஸுக்கு லீவு சொல்லிவிட்டு இந்த வக்கீலிடம் வந்தான் விவாகரத்து பற்றி முடிவு எடுப்பதற்காக.

கணேசன் கையெழுத்துக்காக நீட்டிய பேப்பர்களைப் பார்த்த பூர்ணிமாவின் முகத்தில் எந்தவித உணர்ச்சியும் இல்லை.

"என்ன இதெல்லாம்!" என்று கேட்டாள்.

"இல்லை பூர்ணிமா. இனிமேல் நமக்குள் ஒத்து வராது என்று நினைக்கிறேன். வக்கிலிடம் பேசினேன். மியூச்சுவல் கன்ஸன்ட் இருந்தால் டைவர்ஸ் வாங்குவதில் அதிகம் பிரச்னை இருக்காது என்கிறார். இந்த பேப்பர்கள்ல கையெழுத்து போட்டேன்னா..."

பூர்ணிமா அயர்வதாக இல்லை...

"ஸோ, கோர்ட்டுக்குப் போறதுன்னு முடிவு பண்ணிட்டீங்க"

"நீ பொம்பளை, போலீஸ் வரைக்கும் போகலாம். நான் கோர்ட்டுக்குப் போகக் கூடாதா?"



டொமேடோ கெச்சப் வரும் சிறிய பாட்டிலில் கல் மாவு வெள்ளை கலரில் உள்ள மாவில் ரங்கோலி பொடி கலர்களை வாங்கி நமக்குப் பிடித்த கலருடன் வெள்ளை மாவைக் கலந்து தனித்தனியாக வைத்துக் கொண்டு ஒவ்வொரு கலராக லைட் கலர் பிறகு டார்க் கலர் என மாறி மாறி ஒரே அளவாக போட்டு பாட்டிலை நிரப்பி மேல் பகுதியில் மலர்க் கொத்துக்களை சொருக வெகு ஜோராக இருக்கும். எந்த பாட்டிலிலும் செய்யலாம்.

— சித்ரா ரவீந்தர்

"நான் மறுத்தா என்ன செய்யறதா உத்தேசம்?"

கணேசன் இதனை எதிர்பார்க்கவில்லை.

"எப்படியும் டைவர்ஸ் வாங்கியே தீருவேன் பூர்ணிமா. உனக்குள் இப்படி ஒரு ராட்சசி இருப்பது இவ்வளவு நாள் தெரியாம இருந்தது. இனிமேல் நாம் பிரியறது தான் இருவருக்கும் நல்லது."

"அதாவது நீங்க என்ன திமிர்த்தனம் பண்ணினாலும் பெண்டாட்டி ஒண்ணும் கேட்கக் கூடாது. கேட்டா டைவர்ஸ் இல்லை?"

கணேசன் ஒன்றும் பேசவில்லை.

"நான் உங்களை விவாகரத்து பெற விட மாட்டேன். என்னுடைய பதில் இதுதான். சாரி."

கணேசன் எரிச்சலானான். "ஒண்ணு சொல்றேன் கேட்டுக்க. எங்க ஆபீஸ்ல வேலை பார்த்த வேலப்பன்னு ஒருத்தன் போன மாசம் செத்துப் போனான். எப்படித் தெரியுமா? குடிச்சு. உன்னை மாதிரி ராட்சசி பொண்டாட்டியா வாய்ச்சா மனுஷன் குடிக்காம என்ன பண்ணுவான்? அவன் செத்தும் அவன் பொண்டாட்டிக்கு ஒரு பைசா கிடைக்கல. ஏன் தெரியுமா? அவன் ஆறு மாசமா வேலைக்கே வர்றதில்லை. அதுவும் அவன் பொண்டாட்டிக்குத் தெரியாது. இப்போ நடையா நடந்திட்டிருக்கா. உனக்கும் அது மாதிரி ஆனா தெரியும்..." என்று கையாலாகாத கோபத்துடன் கத்தினான்.

பூர்ணிமா ஒன்றும் சொல்லாமல் உள்ளே போனாள். கொஞ்ச நேரம் கழித்து வெளியே வந்தபோது அவன் அங்கே இல்லை.

மூன்று நாளில் ரிஜிஸ்டர் போஸ்ட்டில் வக்கீல் நோட்டீஸ் வந்தது.

பூர்ணிமா ஒரு தாளெடுத்து கணேசனின் மேலதிகாரிக்கு ஒரு விண்ணப்பம் எழுதத் தொடங்கினாள்.

"மதிப்பிற்குரிய உயர் அதிகாரி அவர்களுக்கு,

தங்களுடைய செக்ஷனில் தங்கள் மேற்பார்வையில் பணிபுரியும் திரு. கணேசன் அவர்களின் மனைவி பூர்ணிமாவாகிய நான் பணிவுடன் சில விவரங்களைத் தங்கள் பார்வைக்கு வைக்க விரும்புகிறேன்.

1) என் கணவர் திரு. கணேசன் கடந்த சில தினங்களாகக் குடிகாரனாக மாறி வருகிறார். அவருக்கு இந்தப் பழக்கத்தைப் பழக்கி விட்டது யார் என்ற கேள்விக்குப் போக விரும்பவில்லை. அவருடைய மேலதிகாரி

என்கிற முறையில் அவரைச் சீர்திருத்த வேண்டிய கடமையை அறிவீர்கள் அல்லவா?

2) கடந்த சில தினங்களாக அவர் வீட்டுக்கே வருவதில்லை. இந்த நிலை நீடிக்கும் பட்சத்தில் அவர் தன் சம்பளப் பணத்தை எனக்குத் தராமல் குடித்தே அழித்து விடக் கூடிய அபாயம் இருக்கிறது.

3) ஏற்கெனவே தங்கள் அலுவலகத்தில் வேலை பார்த்துக் குடியால் அழிந்து போன திரு. வேலப்பன் அவர்களின் குடும்பம் போல் என் குடும்பம் ஆவதற்கான அனைத்து சாத்தியக் கூறுகளும் என் கண்களில் தெரிகின்றன.

4) என்னை சட்டபூர்வமாக மணம் முடித்த டிக்ளரேஷன் என் கணவர் தங்கள் அலுவலகத்திற்குத் தெரிவித்திருக்கிறார். அந்த உரிமையில், அவருடைய சம்பளப் பணத்தில் முக்கால் பகுதியை எனக்கும் கால் பகுதி மட்டும் அவருக்குக் கிடைக்கும் வண்ணம் தாங்கள் ஆவன செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

5) இந்தப் பிரச்னைக்காக என் கணவருடன் மணமுறிவு செய்வதான எந்த சிந்தனையும் எனக்கு இல்லை. அவர் விண்ணப்பித்தாலும் நான் சம்மதம் தருவதாக இல்லை. இப்போதெல்லாம் நீதிமன்றங்கள் அநியாயத்தை எதிர்ப்பதில் அரசாங்கம் வரை கண்டிக்கத் தவறுவதில்லை. எனக்கு நியாயம் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

6) ஒருவேளை என் கணவரும் திரு. வேலப்பன் அவர்களைப் போலவே அலுவலகமே வராமல் சம்பளம் பெறும் தகுதியை இழக்கும் நிலைக்குத் தன்னை ஆட்படுத்திக் கொள்வதாக இருக்கும் பட்சத்தில் எனக்கு முன் அறிவிப்புத் தர வேண்டிய கடமையைத் தங்களுக்கு ஞாபகப் படுத்த விழைகிறேன். அப்படி ஒருநிலை ஏற்படும்முன் என் கணவருக்கு எச்சரிக்கைகள் விடுத்து அவர் சரிவராத பட்சத்தில் அவரை வேலையில் இருந்து நீக்கி அவருடைய கல்வித்தகுதிக்கு இணையான என்னை வேலைக்குப் பரிசீலிக்கும்படி வேண்டிக் கொள்கிறேன். அதன் பிறகும் என் கணவர் என்னுடன் சேர்ந்து வாழாத பட்சத்தில் அவருக்குக் கால்பகுதி சம்பளப் பணம் தரத் தயாராக உள்ளேன்.

தங்கள் உண்மையுள்ள
பூர்ணிமா.

இணைப்பு: என் பயோடேட்டா, என் வங்கிக் கணக்கு எண்
நகல்: மாநில முதல்வருக்கு

அந்தக் கடிதம் ஒரு தொடக்கம்தான். விஷயம் பரவி மாதர் சங்கம் செயலில் இறங்கியது. அடுத்த பத்தாம் நாளில் தமிழின் பெரிய பெண்கள் பத்திரிகையில் பூர்ணிமாவின் கீழ்க்கண்ட பேட்டி வெளி வந்தது:

பத்திரிகை: மேலதிகாரிக்கு அப்படி ஒரு கடிதம் எழுதும் எண்ணம் தங்களுக்கு எப்படி வந்தது?

பூர்ணிமா: வேறு யாருக்கு நான் எழுத முடியும் - தீர்வு வேண்டினால். என் அப்பா, அம்மாவுக்கு எழுதுவதில் யாருக்கு என்ன லாபம்?

பத்திரிகை: நகல் மாநில முதல்வருக்கு அனுப்ப வேண்டிய அவசியம் என்ன? மேலதிகாரியை மிரட்டுவதற்கா?

பூர்ணிமா: நிச்சயமாக இல்லை. நான் அந்த விண்ணப்பத்தில் கேட்டுள்ள கோரிக்கைகள் அரசு ஊழியர் வேலை சம்பந்தமான சட்ட விதிகளுக்குப் பொருந்தி வராததாக இருக்கும் பட்சத்தில் திருத்தம் கொண்டு வரும் உரிமையும் அதிகாரமும் மாநில முதல்வரிடம்தானே உள்ளது? எனவே தான் அவருக்கு நகல் அனுப்பினேன்.

பத்திரிகை: உங்கள் கணவரின் குடிப் பழக்கத்தைத் திருத்தும் கடமையை அவருடைய மேலதிகாரியிடம் எப்படி எதிர்பார்க்கிறீர்கள்?

பூர்ணிமா: எப்படி பள்ளியில் படிக்கும் குழந்தை நாளின் பெரும் பகுதியை ஆசிரியரின் நேரடிப் பார்வையில் கழிப்பதால் அதன் ஒழுக்கம் மற்றும் இன்னபிற விஷயங்களுக்கு ஆசிரியர் பொறுப்பாகிறாரோ அதேபோல் அவர் நாளின் பெரும்பகுதி மேலதிகாரியின் மேற்பார்வையில்தான் இருப்பதால் அவருடைய ஒழுக்கம் நடத்தை போன்றவற்றைச் சீர் படுத்தும் கடமை அவருக்கு இருக்கிறது. ஆசிரியருக்குக் குழந்தை பயப்படுவதுபோல் ஆண்கள் பயப்படும் ஒரே இடம் அவர்களுடைய மேலதிகாரியின் முன்னிலைதான். எனவேதான் 'அவர் என்ன குழந்தையா' என்று கேட்டு ஒதுக்கி விடாத தார்மீகப் பொறுப்பை மேலதிகாரியிடம் எதிர்பார்க்கிறேன்.

பத்திரிகை: அது என்ன முக்கால் பாகக் கணக்கு?

பூர்ணிமா: முதலில் பாதிதான் கேட்க நினைத்தேன். அப்புறம் ஞாபகம் வந்தது. வீடு முதலான அசையாச் சொத்துக்களையும் என் வயிற்றில் இப்போது அசைந்து கொண்டிருக்கும் சொத்தையும் நான்தானே மெய்ன்டெய்ன் பண்ணணும்?

பத்திரிகை: அவருடைய போக்கு பிடிக்கவில்லை என்றால் விவாகரத்து செய்து விடுவதுதானே?

பூர்ணிமா: அதனால் பிரச்னை எங்கே தீர்கிறது? தன் மகளைத் தள்ளிவிட்டால் போதும் என்று நினைக்கும் ஒரு தகப்பன் இவருக்குப் பெண் கொடுப்பான். அவள் சீரழிவு ஒரு பக்கம் இருக்க, என் கதி? இந்த ஆள் குடித்

தார் என்பதற்கு எனக்கு ஏன் தண்டனை?

பத்திரிகை: உங்கள் வீட்டார், உறவினர்களின் ரியாக்ஷன் என்ன?

பூர்ணிமா: இரண்டு பக்கத்தாரும் அவருக்கு சார்பாகத்தான் பேசுகிறார்கள். நான்தான் பெருந்தன்மையாய்ப் போக வேண்டும் என்று அறிவுரை. முள்ளில் சேலை விழுந்தாலும் சேலையில் முள் விழுந்தாலும் என்று உதாரணம் சொல்கிறார்கள். சேலைக்கு முள்ளை மணம் செய்து வைப்பது சரி அல்லவா? மேலும் ஆண் தன்னை முள்ளுக்கு உதாரணப்படுத்துவதே ஒருவகை ஒப்புதல் வாக்குமூலம்தானே!

பத்திரிகை: உங்கள் கோரிக்கைகள் நிறைவேறும் என்று நம்புகிறீர்களா?

பூர்ணிமா: அவற்றில் சுயநலமற்ற சத்தியம் இருந்தால், உங்களைப் போன்ற பத்திரிகைகள், நாடெங்கும் உள்ள மகளிர் அமைப்புகள் எல்லோருடைய ஒத்துழைப்போடும் இவை நிறைவேறும். நிறைவேற வேண்டும். ஏனென்றால் இது பூர்ணிமாவின் தனி பிரச்னை அல்ல. ஆயிரக்கணக்கான நடுத்தர வர்க்கக் குடும்பங்களில் உழலும் பிரச்னை.

பத்திரிகை: இன்னும் குறிப்பாக ஏதேனும் சொல்ல விரும்புவீர்களா?

பூர்ணிமா: ஒன்றே ஒன்று. சம உரிமை என்கிறார்கள். அடிப்படையாக என்ன உரிமை நிலை நாட்டப்பட்டிருக்கிறது இன்று வரை. ஆம்பளை பற்றி அவனுடைய ஒழுக்கம், நடத்தை, வேலை, சம்பளம் எல்லாம் நம்பி பெண்ணின் எதிர்காலம் ஒப்படைக்கப்படுகிறது. ஆனால், அவன் தன் தவறுகளால் கொழுப்பால், தன்னை நம்பி வந்த பெண்ணுடைய அவன் மூலம் ஈன்றெடுத்த குழந்தைகளின் எதிர்காலத்தைப் பாழாக்கும் வண்ணம் எடுக்கும் நடவடிக்கைகளில் இருந்து அவர்களுக்கு என்ன காப்பு இருக்கிறது? பிரச்னை முற்றும்போது ஆண் பார்த்து பெண்ணை விவாகரத்து செய்தாலும் பெண்ணே வெறுத்துப் போய் விவாகரத்து வாங்கி ஒதுங்கிப் போனாலும் பாதிப்பு என்னவோ பெண்ணுக்கு மட்டும்தான் இருக்கிறது. ஆணுக்கு என்ன தண்டனை? சமூகம் சிந்திக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

இந்தப் பேட்டி அரசியல், ஊழல் சர்ச்சைகளிலேயே சலித்துப் போயிருந்த சமூகத்தை ஓர் உலுக்கு உலுக்கியது. திண்ணைகளில், கல்யாண வீடுகளில், ஓட்டல்களில் விவாதங்கள் நடந்தன. மாநிலமெங்கும் மாதர் சங்கங்கள் சிறப்புத் தீர்மானங்கள் இயற்றின. பத்திரிகைகள் தலையங்கங்கள் எழுதின. குடி, சீட்டு, லாட்டரி, சூது போதை முதலான அரசுகளிடமிருந்து பொதுமக்களை, அரசு ஊழியர்களை குறிப்பாக அவர்கள் குடும்பங்களைப் பாதுகாக்க வேண்டிய அரசு இன்னும் கடுமையான சட்டங்களை இயற்ற ஏன் தயங்குகிறது என்று கேள்விகள் எழுப்பின. சட்டசபையில் பெண் எம்.எல்.ஏ.க்கள் கட்சி சார்பில்லாமல் போராடினார்கள். முதல்வர் தன் அறிக்கையில்-

"அரசு ஊழியர்கள் தங்கள் வாழ்நாள் முழுதும் அரசுப் பணிக்காக அர்ப்பணிக்கிறார்கள் என்றால் அவர்கள் அரசின் பிள்ளைகள் மாதிரி. அவர்களின் குடும்பங்களை தத்தெடுக்க வேண்டியது அரசின் கடமை. அந்தக் குடும்பத்தில் ஒரு பெண்ணுக்குக் கண்ணீர் வடிக்கும் நிலை ஏற்படுகிறது என்றால் அதனைத் துடைப்பது மட்டுமல்லாமல் அந்தக் கண்ணீருக்கான காரணத்தை அறிந்து அதைத் துடைப்பதுதான் ஒரு தந்தையின் கடமையாக இருக்க வேண்டும். அந்தக் கடமையை எனக்கு ஞாபகப்படுத்திய என் மகள் போன்ற பூர்ணிமாவுக்கு நன்றி செலுத்தி கீழ்க்கண்ட ஷரத்துகளை சட்டத்தில் இடம் பெறச் செய்யும் முன் சபையின் விவாதத்துக்கு வைக்க விரும்புகிறேன்.

• அரசு ஊழியர்கள் பிராவிடன்ட் பண்ட் அட்வான்ஸ், விழாக்கால அட்வான்ஸ், வாகன அட்வான்ஸ், வீடு கட்ட அட்வான்ஸ் முதலான எந்தவிதமான அட்வான்ஸுக்கு விண்ணப்பித்தாலும் ஈட்டிய விடுப்புக்கு விண்ணப்பித்தாலும் விண்ணப்பம் மனைவியின் கையெழுத்துடனான கூட்டு விண்ணப்பமாக இருக்க வேண்டும்.



பயறு கண்டல் செய்ய எட்டு மணி நேரம் ஊற வைத்து தண்ணீரை வடித்து ஹாட்பேக்கில் போட்டு மூடி மறுநாள் திறந்து பார்த்தால் முளைக் கட்டிய பயறு தயார் ஆகிவிடும்.

— ஆர். மீனாட்சி

• தன் கணவர் போதைப் பொருட்களுக்கு அடிமையாகிறார் என்றோ சூதாட்டத்தில் ஈடுபடுகிறார் என்றோ மனைவி எழுத்துமூலம் உறவினர்களின் சாட்சிக் கையெழுத்தோடு விண்ணப்பித்தால் கணவனின் சம்பளத்தில் முக்கால் பகுதி நேரடியாக மனைவியிடம் ஒப்படைக்கப்படும்.

• ஊழியர் தன் பணியிலேயே ஒழுங்காக இல்லாத பட்சத்தில் அவருடைய பணி நீக்கம் செய்யப்பட்டு அவருடைய மனைவி தன் கல்வித் தகுதிக்கு ஏற்ற வேலை பெறுவது பெண்களின் அடிப்படை உரிமையாக்கப்படுகிறது.

• விவாகரத்து வழக்குகளில் அடிப்படைக் காரணம் சூது, போதைப் பழக்கம் முதலானவையாக இருந்தால் தீர்ப்பு பெண்ணுக்குச் சாதகமாகவே வழங்கப்படும்.

• தன்னுடைய கடனைத் திருப்பித் தர இயலாத நிலையில் கோர்ட்டில் சரணடைந்து இன்ஸால்வன்ஸி பெறுவதற்குச் சமமாக விவாகரத்து வழக்குகள் கருதப்படும். எப்படி இன்ஸால்வன்ஸி பெறுபவன் தன் எஞ்சிய வாழ்நாளில் சொத்து திரட்டவோ தொழில் செய்யவோ இயலாதோ அதே போல் தன்னை நம்பி வந்த பெண்ணை வாழ்நாள் முழுதும் வைத்துக் காக்கும் கடனிலிருந்து விவாகரத்து மூலம் விடுபட இயலும் ஆணுக்கு இரண்டாம் திருமணம் சட்டப்படி மறுக்கப்படும். அதோடு அவர் அதன்பின் என்ன சம்பாதித்தாலும் அதில் முக்கால் பகுதி பெண்ணுக்கே போய்ச் சேரும்.



**சேம்பு இலைக்கறி**

துவரம் பருப்பை ஊற வைத்து, உப்பு மிளகாய், பெருங்காயம் சேர்த்து பருப்பு உசிலிக்கு அரைப்பது போல் அரைத்து வைத்துக் கொண்டு, சேம்பு இலைகளை நன்றாக அலம்பி, ஒவ்வொரு இலையாக எடுத்து கவிழ்த்துப் போட்டு அதில் எலுமிச்சம் பழ அளவு அரைத்த பருப்பை வைத்து, சிறிது அகலமாகத் தட்டி, அந்த இலையை சுருட்டி, எல்லா இலையையும் அப்படி செய்து, ஆவியில் வேக விட்டு எடுக்கவும். ஆறிய பின், சட்டியில் கடுகு மட்டும் தாளித்து, வெந்த பருப்புடன் கூடிய இலைகளை நான்கு துண்டங்களாக நறுக்கி, அதில் போட்டு வதக்கி எடுக்கவும். சாப்பிட அருமையாக இருக்கும்.

— கமலா கிருஷ்ணன்

• அரசு உதவியுடன் ஆண் வாங்கும் அனைத்துச் சொத்துக்களுக்கும் அவன் மனைவியே உரிமையாளராக்கப்படுகிறார்.

• மனைவியை அடிப்பவர்களைத் தண்டிக்க இன்னும் கடுமையான சிறப்புச் சட்டம் பரிசிலனையில் இருக்கிறது.

• இந்த யோசனைகளை நடைமுறைப் படுத்தும்படி தனியார் நிறுவனங்களும் அரசு சார்பு நிறுவனங்களும் வற்புறுத்தப்படுவார்கள்.

• இது ஒரு தொடக்கமே. அரசு ஊழியர்கள் மட்டுமின்றி எல்லா ஆண்களின் குடும்பங்களுக்குமான காப்புறுதிக்கு அறிஞர்கள் அக்கறை கொண்டோரின் கருத்துகளைக் கேட்டு பரிசீலித்து அரசு விரைவில் தீவிர முடிவெடுக்கும்.

"என்ன மிஸ்டர் கணேசன்! விவாகரத்து கேட்டு நோட்டீஸா அனுப்புறீங்க... இப்போ கையெழுத்து போடட்டுமா...?'' என்று கேட்டபடி வில்லன் சிரிப்பு சிரித்தாள் பூர்ணிமா.

வெடுக்கென்று உடம்பு உதறி விழிப்பு வந்து எழுந்து உட்கார்ந்தான் கணேசன். தலை விண்ணென்று தெறித்தது. அவ்வளவும் கனவா? குனிந்து கீழே பார்த்தான். வாந்தி கீந்தி ஒன்றும் இல்லை. ஆண்டவா! கனவா அது...! உடம்பு தெப்பலாக வியர்வையில் நனைந்திருந்தது.

மகாத்மா காந்தி சிறுவயதில் நண்பர்களின் வற்புறுத்தலுக்காக ஆட்டுக்கறி சாப்பிட்டு அன்று இரவு அவர் வயிற்றுக்குள் ஆடு கத்துவதுபோல் கனவுகண்டு அலறி எழுந்து தவறு உணர்ந்து புலாலை விட்டார் என்று படித்தது ஞாபகம் வந்தது. இது அதையெல்லாம் தூக்கிச் சாப்பிட்ட கனவு. கொஞ்சமாய் உள்ளே போன போதை இத்தனை பெரிய கிதை படித்து விட்டதே...

வியர்த்துக் கொட்டிய முகத்தைத் துடைக்கக் கூடத் தோன்றாமல் அப்படியே உட்கார்ந்திருந்தான். காபி தம்ளருடன் உள்ளே வந்த பூர்ணிமா "என்ன இன்னிக்கு லீவுன்னா அதுக்காக ஒன்பது மணி வரைக்குமா தூங்கறது? நேத்து ராத்திரியே ரொம்ப டயர்டா இருந்தீங்களேன்னுதான் எழுப்பலை. சரி டைனிங்டேபிள்ல எல்லாம் எடுத்து வச்சிருக்கேன். எனக்கு டயமாகுது. நான் கிளம்பட்டா...'' என்றாள் பரபரப்பாக.

"எங்கே?'' என்று கேட்டான்.

"நேத்தே சொன்னேனே, மறந்து போச்சா? எங்க மாதர் சங்கம் சார்புல இன்னிக்கு ஒயின் ஷாப் முன்னால மறியல். டெமான்ஸ்ட்ரேஷன்...''

மாதர் சங்கம் என்ற பெயரெடுத்தாலே கிண்டலாகப் புன்னகைக்கும் கணேசன் இன்று 'ஆல் தி பெஸ்ட்' என்று வாழ்த்தியதை நம்ப முடியாமல் பார்த்தாள் பூர்ணிமா.

# குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு தெய்வீக மூலிகை மருத்துவம்

குழந்தை பாக்கியம் இன்மை, வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை போன்றவைகளுக்கு முக்கிய காரணம் நாம் உண்ணும் உணவுகளில் அதிகமாக ரசாயனப் பொருட்கள் கலந்திருப்பதாலும், பலவித நோய்களுக்காக அவ்வப்போது வீரியமிக்க ரசாயன மாத்திரைகளை உட்கொள்வதாலும், அடிக்கடி மாமிச உணவுகள் உண்பதாலும், அதிகமான கவலை கொள்ளுதல், பலருடன் உடலுறவு கொள்ளுதல் போன்றவைகளால் கர்ப்பப்பையில் புண் ஏற்படுகின்றது. இதனால் கர்ப்பப்பையில் உள்ள சுரப்பிகள் நன்றாக இயங்காது. மேலும் அதன் சுரப்பு நீரும் திறன் மிக்கதாக இருக்காது. தவிர கர்ப்பப்பையும் நன்றாக சுருங்கி விரியும் தன்மையினை இழந்துவிட்டால் முறையான மாதவிடாய் இருக்காது. வெள்ளைப்படுதலும் தோன்றும். வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறுகள், மலட்டுத்தன்மை உள்ள தாய்க்கு கருத்தரிக்கும் வாய்ப்பு மிகவும் கடினம்.

## கருத்தரிக்காமைக்கு காரணம்

பெண்களுக்கு உற்பத்தியாகும் கரு முட்டைகள் சரியான முதிர்ச்சியும், வளர்ச்சியும் இல்லாதிருத்தல், கருப்பையின் குழாய்கள் அடைப்பு அல்லது சுருங்கி இருத்தல், முட்டையகத்தில் (ஓவரி) குறைபாடு, கருப்பை வளர்ச்சியின்மை, கர்ப்பப்பை புண், ஆண்களின் விந்தணு எண்ணிக்கையில் குறைவாகவும், தகுந்த உயிரோட்டத்துடன் இல்லாமல் இருத்தல், ஆண்மைக் குறைவு, சரியான நேரம் அறிந்து உடலுறவு கொள்ளாமை, அடிக்கடி உடலுறவு கொள்ளுவதால் முதிர்ச்சி இல்லாத விந்தணு வெளியாகி உயிர்ப்பிக்கும் சக்தி இல்லாதிருத்தல் ஆகியன கருத்தரிக்காமைக்கு காரணம் ஆகும்.

## தெய்வீக மூலிகை வைத்தியம்

விநாயகருக்குரிய அருகம்புல், சக்திக்குரிய வேப்பிலை, சிவனுக்குரிய வில்வம், பிரம்மாவுக்குரிய அத்தி, கங்கைக்குரிய மாவிலை மற்றும் அற்புத மூலிகை மருத்துவ குணம் கொண்ட அரசிலை, ஆலிலை, நாவல் இலை, முருங்கையிலை, ஓரிலை தாமரை, கீழாநெல்லி ஆகியவைகளைப் பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடிசெய்து சலித்து பின் சம அளவில் ஒன்றாக கலந்து ஒரு பாட்டிலில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு ஸ்பூன் தூள் எடுத்து ஒரு டம்ளர் தண்ணீரில் கலந்து உணவுக்கு முன் தினமும் காலை இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ளவும். இதனை சுமார் ஆறுமாதம் வரை பின்பற்றவும். இளம் தம்பதிகளுக்கு மிக விரைவிலும், மற்றவர்களுக்கு சற்றுத் தாமதமாகவும் கண்டிப்பாக பலன் தெரியும். இத்தகைய மூலிகைகளினால் வெள்ளைப்படுதல், மாதவிடாய் கோளாறு, மலட்டுத்தன்மை நீங்கி கர்ப்பப்பை நன்கு வளர்ச்சி அடையும். விந்தணு, சினைமுட்டைகள் நன்கு முதிர்ச்சி அடைந்ததாகவும், வளர்ந்ததாகவும் இருக்கும். மேலும் எலும்புகள், நரம்புகள் பலம் பெற்று ஆண்மைக் குறைவும் மறையும்.

வேப்பிலை, வில்வம், கீழாநெல்லி போன்றவை எதிர்ப்பு சக்தியையும், ரத்தம் சுத்தம் அடையவும், அத்தியிலை, நாவல், முருங்கை, ஓரிலை தாமரை போன்றவை நரம்பு மண்டலம் நன்கு இயங்கவும், அரசன், ஆலயிலை, மாவிலை போன்றவை கருத்தரிக்க உதவும் உயிர் அணுக்கள், கருமுட்டை ஆகியவற்றின் எண்ணிக்கை அளவு, வீரியம் ஆகியவற்றை அதிகப்படுத்தவும் உதவும். இத்தகைய மகிமையின் காரணமாகவே திருமண சடங்குகளின்போது இதன் குச்சிகளை ஓமம் வளர்ப்பார்கள். அப்போது அதன் புகைகளை தம்பதிகள் இருவரும் சுவாசிப்பதன் மூலம் மேற்கூறிய பலனை அடைவார்கள் என்பது உண்மை.

## உணவு முறைகள்

தம்பதிகள் இருவரும் தினம் ஏதேனும் ஒருவேளை வேகவைக்காத பச்சையாக உட்கொள்ளும் பழங்கள், காய்கள், பழரசங்கள், சாலட்கள் போன்றவற்றையே உணவாக உட்கொள்ள வேண்டும். கேரட், வெண்டை, வெள்ளரிக்காய், பீர்க்காய், வாழை, கொய்யா, ஆப்பிள், பேரிட்சை, திராட்சை, மாதுளை, தர்பூசணி, பாதாம், முந்திரி, இளநீர், கரும்புச்சாறு, தேங்காய், வெங்காயம், கறிவேப்பிலை, கொத்தமல்லி போன்றவற்றில் இருந்து ஏதேனும் இரண்டு (அ) மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளலாம். பின்னர் மற்ற இரண்டு நேரம் சாதாரண சமைத்த சைவ உணவுகளை உட்கொள்ள வேண்டும். இதில் கேழ்வரகு, கோதுமை, கம்பு, மக்காச்சோளம் போன்ற தானியங்களையும் அடிக்கடி சேர்த்துக்கொள்வது நல்லது. நிலக்கடலை, மூக்குக்கடலை, கொள்ளு போன்றவற்றையும் மாலை வேளைகளில் சுண்டல் செய்து உட்கொள்ளலாம். கிடைத்தால் வெள்ளாட்டுப்பால் சிறிது தண்ணீர் கலந்தும் தம்பதிகள் குடிக்கலாம்.

தவிர்க்க வேண்டியது : புகைத்தல், மதுவகைகள், மாமிச உணவுகள், சர்க்கரை கலந்த இனிப்புகள், ரசாயனம் கலந்த உணவுகள், குளிர்பானங்கள், எள்ளில் செய்த பலகாரம், அகத்திக்கீரை, பாகற்காய், பப்பாளி முதலியவை தவிர்க்கவும். இவர்கள் வாரம் ஒருநாள் பகல் ஒருவேளை (சமைத்த) உணவை தவிர்க்கவும். இரவு உணவை 7 மணிக்குள் முடித்தல் வேண்டும்.

உடற்பயிற்சிகள் : நடத்தல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், நின்ற இடத்தில் ஓடுதல், குதித்தல், கயிறாட்டம், கைகால் விரல்களை நீட்டி மடக்குதல், மூச்சுப்பயிற்சி தியானம் போன்றவற்றை தினம் 20 நிமிடம் காலை மாலை செய்தல் நல்லது.



*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

தலைமை முகவரி : Dr.C.K.M.குருபரன் & Dr.C.K.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B. No: 30, 3, திருநாத முதலி நகர், (கலெக்டர் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ 04179-20469, 22769.

சென்னை கிளை : 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் கோர்ட் பக்கத்தில் கெல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளில் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 6 to 8 ✆ : 6424285, 6427638

**குறிப்பு:** சென்னை, வேலூர், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஓசூர், கிருஷ்ணகிரி, சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், ஆம்பூர், காஞ்சிபுரம், தர்மபுரி, திருப்பூர், உடுமலைப்பேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 22 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.55/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.45/-ம் தலைமை முகவரிக்கு D.D. அனுப்பவும்.

# ஜோரான ஜார்

எந்த மிக்ஸி ஜாரையும் விட
இந்த ஜார் சிறந்தது

புதிய அறிமுகம்



இனி அம்மியில் அரைக்கத் தேவையில்லை

இனி மாவு மில்லுக்கு செல்லத் தேவையில்லை

பிரபலமான அனைத்து மிக்ஸியுடனும் பொருந்தும் தனித்தனி ஜார்கள்.

# அமிர்தம்

## அல்ட்ரா மிக்ஸர் ஜார்

மஞ்சள் பொடியோ, மசாலா பொடியோ, இட்லி பொடியோ, பருப்பு பொடியோ, வாங்க வேண்டியதில்லை. தரமாக, உங்கள் சுவைக்கேற்ப வீட்டிலேயே அமிர்தம் அல்ட்ரா மிக்ஸர் ஜார் கொண்டு சிக்கனமாக தயாரிக்கலாம்.

சேலம் ஸ்டெயின்லெஸ் ஸ்டீலினால் தயாரித்த அகன்ற பாத்திர அமைப்பு, நன்கு சுத்தம் செய்வதற்கு மிக எளிதானது. நான்கு கூர்மையான முனைகளை கொண்ட பெரிய பிளேடுகள் நல்ல அரவைத் திறனை அளிக்கிறது.

**இனி இல்லத்தரசிகள் இதுவே போதும் என்பார்கள்**

தயாரிப்பாளர்கள்:

தங்கவேல் இண்டஸ்ட்ரி, 29/1, வெங்கடபதி ஐயங்கார் தெரு, மதுரை - 625 009. ☎ 625389

---

# தீபாவளி சிறப்பு தள்ளுபடி விற்பனை



PGP சில்க்ஸ்ஸன் காஞ்சி, ஆரணி, குடந்தை, பிரிண்டட் பட்டு, அபூர்வா, பனாரஸ் பட்டு சேலைகள், அனைத்து ரக மில், காட்டன் சுங்கடி, பாலிகாட் சேலைகள், சூட்டிங், சர்ட்டிங், சூடிதார் ரகங்களுக்கு

**10 % To 50 % DISCOUNT**

**11-10-97** முதல் **30-10-97** முடிய

## P.கோவிந்தசாமி பிள்ளை எண்டர்பிரைசஸ்

258, அவ்வை சண்முகம் சாலை, (Lloyds Road) கோபாலபுரம்,
சென்னை-86. Ph: 8276769. வேலை நேரம்: காலை 9.30 A.M to 9 P.M

WE ACCEPT ALL MAJOR CREDIT CARDS



• ரமணஸ்கந்தன்

"எங்கள் சொந்த ஊரான பாலக்காட்டுக்கு அருகிலுள்ள பெருங்குளம் கிராமத்தில் ஸ்ரீ மஹாலக்ஷ்மி கோயிலில் நவராத்திரியை மிகச் சிறப்பாகக் கொண்டாடுவார்கள். மிகவும் சாஸ்த்ர சம்ப்ரதாயங்களோடு அந்தப் பூஜைகள் நடைபெறும். அவற்றைச் சிறு வயதில் இருந்து பார்த்துக் கொண்டிருந்ததாலோ என்னவோ நவராத்திரியை எங்கள் தொழிற்சாலையில் விமரிசையாகக் கொண்டாடுவோம்!"

என்கிறார் கப்பா எலக்ட்ரிகல்ஸ் உரிமையாளரான திருமதி கமலா பரசுராமன். டிரான்ஸ்ஃபார்மர் உற்பத்தி செய்யும் தொழிற்சாலையை வேளச்சேரியில் நிறுவி வெற்றிகரமான தொழிலதிபராக விளங்கும் இவர் ஆழமான ஆன்மீகவாதி; விரிவாக நிறைய உதவிகளைச் செய்யும் சமூக சேவகியும் கூட.

ரமணரையும், அரவிந்த அன்னையையும் கண்கண்ட தெய்வங்களாக வழிபடுபவர். ரமணரே முருகனின் அவதாரம் என அவருடைய பக்தர்கள் நம்புவது போலவே இவரும் நம்புகிறார். அதனாலேயே இவருடைய தொழிற் சாலை வளாகத்திலேயே ரமணஸ்கந்தர் எனும் முருகன் கோயிலை அமைத்துள்ளார். தொழிற் சாலையில் பணிபுரிபவர்கள் மட்டுமின்றி, மிகப் பலரும் வந்து வணங்கும் கோயிலாகி வருகிறது. இங்கு தினமும் செய்யப்படும் 'சர்க்கரை அபிஷேகம்' மிகவும் பிரசித்தம். இங்குதான் மேற்சொன்ன மஹாலக்ஷ்மியின் படத்தையும் வைத்து நவராத்திரி அமாவாசையோடு சேர்ந்த பத்து நாட்களும் மிக விமரிசையாகக் கொண்டாடுகிறார்.

# ஆன்மீகவாதியே வெற்றியடைய முடியும்!



"அரவிந்த அன்னையும், தேவியின் அம்சமே. அதனாலேயே தேவிபாகவதமும், லலிதா சகஸ்ர நாமமும் நவராத்திரி நாட்களில் இங்கு சொல்லப்பட்டு விசேஷ பூஜைகளும் நடத்தப்படுகின்றன. நான் வீட்டிலேயும் இந்த நாட்களில் இரண்டையும் படித்துப் பூஜை செய்வேன். யார் ஒருவர் மிக ஆழ்ந்த ஆன்மீக நம்பிக்கையோடு வாழ்கிறார்களோ அவர்களால்தான் எத்தகைய பிரச்னைகளையும் சமாளிக்க முடியும். நாங்கள் ஒரு தொழிற்சாலையை நிறுவி வெற்றிகரமாக நடத்தி அதை விரிவாக்கிக் கொண்டு வருகிறோம் என்று சொன் னால் எங்களுடைய தெய்வ நம்பிக்கை தான் காரணம்" என்கிறார் கமலா பரசுராமன்.




• டத்தோ வியோவுடன் கமலா, பரசுராமன் தம்பதியர்

அதென்ன 'கப்பா'? (இவருடைய நிறுவனத்தின் பெயர் 'கப்பா எலக்ட்ரிகல்ஸ்') இவருடைய பெயரின் முதல் எழுத்தையும், கணவர் பெயரான பரசுராமனின் பெயரில் முதல் எழுத்தையும் இணைத்து உருவாக்கி இருக்கிறார். ஒரே பெண்ணான மீரா எலக்ட்ரிகல் இன்ஜினியர். இவருக்கும் பெற்றோர்களின் தொழிற் சாலையில் மிகுந்த ஈடு பாடு உண்டு.

டிரான்ஸ்ஃபார்மர் தயாரிக்கும்

தொழிலில் சிறிய நிலையில் ஆரம்பிக்கப்பட்ட இத்தொழிற் சாலை இன்று திருமதி கமலா பரசுராமனின் கடினமான உழைப்பில் பலகிளைகளாகப் பரவி வளர்ந்து நிற்கிறது. 'கப்பா எக்ஸ் போர்ட்ஸ்' நிறுவனமும் வெற்றிகரமாக செயல்பட்டு வருகிறது. வெளிநாடுகளிலும் பல வர்த்தகக் கண்காட்சிகளில் இவர்கள் பங்கேற்றதுடன், பல பரிசுகளையும் பெற்று வந்திருக்கிறார்கள்.

"அந்த வகையில் கடந்த ஜூனில் கோலாலம்பூரில் நடந்த 'ரக்ஸ்எக்ஸ்' டெக்னலாஜிகல் கண்காட்சியில் நாங்கள் பங்கு பெற்றதை மறக்க முடியாது. அந்நாட்டின் தகவல் தொடர்பு அமைச்சர் திரு டத்தோ லியோ மோகி

• ஆந்திர அமைச்சர்கள் & உதவிபெறும் சிறுவன்

இந்தியன் ஹை கமிஷனர் திரு சஹாய் இருவரும் எங்களுடைய ஸ்டாலுக்கு வந்து எங்கள் பணியைப் பாராட்டியதை மறக்கவே முடியாது. நாங்கள் இரவுபகலாக இக்கண்காட்சிக்காக பட்ட சிரமம் எல்லாம் அவர்களின் உற்சாக வார்த்தைகளில் பறந்தே போய்விட்டது..."

என்று கூறும் கமலா பரசுராமன் மீண்டும் தன் நவராத்திரி நினைவுகளுக்கு வருகிறார்.

"ஒவ்வொரு வருடமும் என்னை மிகவும் கவரும் பண்டிகை நவராத்திரிதான். என் சொந்த ஊரில் நவராத்திரி கொண்டாடுவார்கள் என்பது மட்டுமல்லாமல், நான் பிறந்ததே 'காளி பூஜா'வுக்குப் பெயர் பெற்ற கல்கத்தாவில் நவராத்திரி சமயத்தில்தான். தவிரவும் தீமைகளுக்கு எதிராக, இதர சக்திகளுக்கு எதிராக தெய்வசக்தி நடத்திய போர் என்பதுதானே இதன் தாத்பர்யம். சாதாரணமாக பார்க்கும் போது காளி, மகிஷாசுரன். இதையே தத்துவார்த்தமாக பார்க்கும் போது மனிதன் மிகக் கீழான குணக்கேடுகளுக்கு ஆளாகும் போது தெய்வசக்தி வீர்யமாக எழுந்து அடக்க வேண்டியுள்ளது. அப்போதுதான் மனிதன் மனிதனாக வாழ முடியும். அவனால் வெற்றியடைய முடியும். அதுதான் விஜயதசமி.

அதுவும் நம் கலாசாரத்தோடு அழகாகப் பிணைத்து கொலு என வைத்து அனைத்து உயிர்களுமே தேவியின் அம்சம் என்கிறார்கள். மனிதனுக்குள் சாதி மதம் இல்லை. மிருகங்கள், பறவைகள் கூட கடவுளின் அம்சங்களே என்று கூறுவதுதானே கொலு. நட்பு, அன்பு, சகோதரத்துவம் இவற்றைப் பரிமாறிக் கொள்வதுதானே கொலு உணர்த்தும் பாடங்கள். இவையெல்லாம் என் மனத்தில் பதிந்து விட்டதால்தானோ என்னவோ இறைவன் எனக்கு அளித்ததை என்னால் இயன்ற அளவில் பலருக்கும் தருகிறேன்..."

என்று இவர் அடக்கமாகக் கூறிக் கொண்டாலும் இவர் செய்யும் சமூக சேவை மிகப் பெரியது. நிறைய பேருக்கு உதவிகள் செய்து வருகிறார். ஆந்திராவில் சூலூர்ப்பேட்டையில் நலிந்த நிலையில் உள்ள பல பெண்களை உணவு உடை கொடுத்து பராமரித்து வருகிறார். மருத்துவ சிகிச்சை, உடல் ஊனமுற்றோருக்கு மூனுசக்கர சைக்கிள் என இவர் பணி விரிவடைந்து கொண்டே போகிறது. ஆந்திர மாநில அமைச்சர் பி.வி. ரத்தினம், சந்திர மோகன் ரெட்டி போன்றோரும் இவருடைய நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டு இருக்கிறார்கள்.

இங்கும் நிறைய நிறுவனங்களுக்குக் குறிப்பாக உடல் ஊனமுற்றவர்களுக்காக, மூளை வளர்ச்சி குன்றிய குழந்தைகளுக்காக தொண்டாற்றும் நிறுவனங்களுக்கு உதவி செய்கிறார். மருத்துவ முகாம் முதல் உடைகள் தருவது



• சுதந்திரதின விழாவில்....

வரை நிறைய.

சமீபத்தில் சுதந்தரதின பொன்விழா நாளன்று இவர் வசிக்கும் இடத்தைச் சுற்றியுள்ள அனைத்துப் பள்ளிக் குழந்தைகளுக்கும் ஆயிரக்கணக்கில் பிஸ்கெட்ஸ் அளித்து மகிழ்ந்திருக்கிறார். விழாவில் மேடவாக்க பஞ்சாயத்துத் தலைவர் ஹரி, கவுன்சிலர் ஏழுமலை நாயக்கர் ஆகியோரும் கலந்து கொண்டார்கள்..

இப்படி நவராத்திரியின் ஒன்பது நாள் நோக்கத்தையும் வருடம் முழுவதும் நிறைவேற்றி வருகிறார் கமலா பரசுராமன் என்றுதான் சொல்ல வேண்டும்.

# ராஜாளி® நான்-ஸ்டிக் அதிசயம்

## தொடர்கிறது...

இதுவரை தோசைக்கல், ஃப்ரை பான், கடாய் மட்டுமே தயாரித்து வழங்கி வந்த **ராஜாளி** இப்போது முதன் முதலாக யாரும் பார்த்திராத புதிய நான்-ஸ்டிக் இட்லி தட்டுகளும், நான்-ஸ்டிக் மில்க் பாய்லரும் தயாரித்து வழங்கி உங்களை அதிசயத்தில் ஆழ்த்த வந்திருக்கிறது.

**இதெல்லாந்தான் கிடைக்கிறதே! இதிலென்ன அதிசயம்?!**






**அதிசயம்தான்!**

**நான்-ஸ்டிக்கில் இதெல்லாங்கூட**



மில்க் பாய்லர் கூட
ராஜாளி நான்-ஸ்டிக்கா?!



- சாதாரண மில்க் பாய்லரில் உட்புறம் பாலேடு படிந்து கொள்வது போல் ராஜாளி நான்-ஸ்டிக் மில்க் பாய்லரில் ஒட்டாது.
- தொடர்ச்சியாக உபயோகப்படுத்திய பின்பும் கூட பாத்திரத்தில் முந்தய காய்ச்சிய பால் வாசம் இருக்காது. ● சுத்தம் செய்ய எளிது
- வழவழப்பான டஃப்லான் உட்புறம் பூச்சினால் பால் திரிந்து போகாது
- இது அகல வடிவமைப்பு பாத்திரமாகையால் எரிபொருள் மிச்சம்

- எண்ணெய் தடவாமலேயே தட்டிலிருந்து இட்லிகளை எடுக்கலாம்.
- இட்லி ஒட்டாததால் மாவு விரயம் ஆகாது
- நேரமும், எரிபொருளும் மிச்சம். ● தட்டுகள் சுத்தம் செய்வது எளிது
- எல்லா குக்கர் & இட்லி குக்கர்களிலும் பொருந்தக்கூடியது
- 4 தட்டுகள் மேலும் 6 தட்டுகளாக கிடைக்கிறது

**நான்-ஸ்டிக்கில் இவையனைத்தும் கிடைப்பது அதிசயந்தானே!!**



ISI முத்திரையினைக் கொண்டது

- ☐ தோசைக்கல் (Flat & Concave) ☐ கடாய் ☐ ஆப்பக் கடாய்
- ☐ இட்லித் தட்டுக்கள் ☐ மில்க் குக்கர்
- ☐ சாஸ் பான் ☐ ஃப்ரை பான் ☐ ப்ரட் டோஸ்டர்

எல்லா பிரபல பாத்திரக் கடைகளிலும் கிடைக்கும்



**RAJALI®**
**HOME EQUIPMENTS**

50-A, Appar Swamy Koil Street, Thiruvottiyur, Madras - 600 019. ☎: 543391, 543867



# 15 நாள் கொலு!

அம்மச்சி தன் வீட்டிற்குள் நுழைவதைப் பார்த்ததும், சி.பி. ஐ.யே நுழைந்தாற்போல அதிர்ச்சி அடைந்தான் ராகவன்.

வத்சலா அம்மச்சியை பூரண கும்பம் வைத்து வரவேற்காத குறைதான். இந்த அம்மச்சி, ஒரு கப் தேநீருக்காக எல்.ஐ.சி. கட்டிடத்தையே விற்கக்கூடியவள். பூலோக நவீன நாரதரணி!

அவரவர் வீட்டில் அவளுக்குக் கிடைக்கும் உபசாரத்தையும் விருந்தின் அளவையும் பொறுத்து மற்றவர் வீட்டின் தகவல் வந்தடையும். அறை வாங்கினவளின் கன்னம் வலிப்பதற்குள் அந்தத் தகவலை அவளின் எதிர்க்கு ஒரு ரிப்போர்டரின் லாகவத்தோடு விரைவாக தகவல் பரிமாறும் செயல் வீரி!

மைதிலியின் முகத்தில் ஏற்பட்ட திடீர் பிரகாசத்திற்கான காரணம் என்ன என்று தவித்த வத்சலாவிற்கு அம்மச்சியின் வரவு பாலை வார்த்தது போல இருந்தது.

இவளை எந்தவிதமாகவாவது திருப்திப்படுத்த வேண்டும் என்ற கவலையோடும் கரிசனத்தோடும், சுடச்சுட அடையையும், அவியலையும் படையல் மாதிரி வைத்துவிட்டு, சாமி வந்த பெண்ணிடம் குறி கேட்பவளாய் அவள் எதிரில் உட்கார்ந்து விட்டாள்.

அவளும் சாப்பிட்டு விட்டு, ஒரு ஜோஸ்யர் கைரேகை பார்ப்பது போல வத்சலாவின் முகத்தைக் கூர்மையாகப் பார்த்து, "ஓ அம்மே! விஷயம் அறியுமோ?" என்ற பீடிகையோடு ஆரம்பித்தாள்.

இந்தத் தருணத்திற்காகவே பிறவியெடுத்ததைப் போல மிக ஆவலாய் அவளுக்குக் காதையும், மனதையும் தானம் செய்தாள்.

அவள் சொல்ல வேண்டியதை கனகச்சிதமாக சொல்லி முடித்துவிட்ட கதியில் ராகவனைப் பார்த்து, ஸ்டீரியங்கை ஒடிக்கும் டிரைவரின் லாகவத்தோடு முகத்தை வெட்கத்தால் ஒரு இடி, ஒரு ஒடி ஒடித்து விட்டுப் போய் விட்டாள்.

அவள் போனதுமே கல்யாணம் முடிந்த சத்திரமாய் வீடே அமைதியில் இருந்தது.

வத்சலாதான் மந்திரவாதி ஏவிவிட்ட மைதா மாவு பொம்மையாய் குதித்துக் கொண்டிருந்தாள்.

''மைதிலிக்கு ஆனாலும் இத்தனை நெஞ்சழுத்தம்



ஷம் நம்ம வீட்லேயும் கொலு வைக்கிறோம்" என்று ஒரு மெகா அதிர்ச்சியை கொடுத்தாள்.

"நம்ம வீட்ல பழக்கமில்லையே வத்சலா."

"அதெல்லாம் தெரியாது. இந்த வருஷம் கண்டிப்பா நம்ம வீட்ல கொலு உண்டு. சிறப்புப் பரிசு வாங்கறோம். நம்ம போட்டோவும் வர்றது."

தஞ்சாவூர் பொம்மைப் போல தலையாட்டுவதை தவிர வேறு வழி!

கழக மாநாடு நடக்கும் இடமாய் வீடு திமிலோகப்பட்டது.

ரிசர்வ் பேங்கில் இறங்கும் பணப் பெட்டியாய் பொம்மைகள் வந்து இறங்கியது.

டெரகோட்டா பொம்மை, பீங்கான், கண்ணாடி, களிமண், பேப்பர் என்று வகை வகையான பொம்மைகள் போதாமல் மகா

**எஸ். கே. கணேசன்**

பலிபுரம் போய் வேறு வாங்கிக் கொண்டு வந்தாள்.

இதெல்லாம் திருப்தி தராமல் நல்ல அலுமினிய பாத்திரத்தை யெல்லாம் போட்டு உருக்கி அச்சில் வார்த்துத் தெருவில் பொம்மை செய்து கொடுப்பவனிடம் கொண்டு போய் கொடுத்து பொம்மையாக மாற்றி எடுத்து

என்று கேட்பவரை திகைக்க வைத்தான்.

புதிய படத்திற்குப் பூஜை போடுவது போல சாஸ்திரிகளை வரவழைத்து முறைப்படி கொலுவை திறந்து வைத்தான்.

ரங்கோலி போடுவதில் கைதேர்ந்தவளான அவளின் அக்காப் பெண்ணை போன் செய்து வரவழைத்தாள்.

ஆட்டோ பிடித்து ஆள் உயர பித்தளை விளக்கை அண்ணா நகரிலிருக்கும் அவளின் அண்ணா வீட்டிலிருந்து கொண்டு வந்தாள்.

தெருவிலிருக்கும் பையன்களையெல்லாம் கூப்பிட்டு பலூனை ஊதச் சொல்லி வீடு முழுவதும் தொங்க விட்டாள்.

திருவிழாவில் விற்பது போல மஞ்சளும், குங்குமமும் வீட்டில் இறைபட்டது.

புயலில் பாதிக்கப்பட்டவர்களுக்காக கட்டப்பட்ட சாப்பாட்டு பொட்டலமாய் தினமும் சுண்டல் பொட்டலம்.

கொலுவிற்கு மாறுவேஷப் போட்டியில் வரும் குழந்தையைத் தேர்ந்தெடுத்து பரிசு என்று ஒரு அறிக்கை வேறு வெளியிட்டான்.

மேற்கொண்டு கொலுவை எப்படி அலங்கரிக்கலாம் என்று இவன் சிந்தித்தைப் பார்த்தால் பட்ஜெட் போடுவதற்காக ஒரு நிதிய மைச்சர் கூட அத்தனை தீவிரமாக சிந்தித்திருக்க மாட்டார் எனலாம்.

முதன் முதலாக கொலு வைக்கிறோம் என்று வத்சலா அனைவரையும் நேரில் போய் கூப்பிட்டது போதாதா! வீடு இடம் கொள்ளாமல் வாசலில் பந்தல் போட்டு, சமையலுக்கும் ஆள் போட்டாகி விட்டது.

ராகவனுக்கோ தன் வீட்டிலேயே படுக்க இடமில்லாமல் நண்பனின் வீட்டில் படுத்து ஆபீசுக்கு வருவது போல தன் வீட்டிற்கே ஆட்டோ, பஸ் பிடித்துக் காலையில் வர வேண்டியதாகப் போய் விட்டது.

பேங்கிலிருந்து விசிட்டிற்கு வரும் நேரம் கரண்ட் இல்லாமல் போய் விட்டால் என்று புதியதாக எமர்ஜென்ஸி விளக்கு வாங்கி சார்ஜ் பண்ணி வைத்து விட்டாள்.

ஒருவேளை வீடியோ எடுத்தால் என்று புது கவலை ஏற்பட்டு இரண்டு நாளைக்கொரு முறை முகத்தை பிளீச் பண்ணிக் கொண்டு எந்த வேலையும் செய்யாமல் ரிசப்ஷனில் உட்கார்ந்திருக்கும் மணப்பெண்ணாய் வாசலை பார்த்தபடியே உட்கார்ந்து விட்டாள்.

இந்த அமர்க்களத்தையெல்லாம் பார்த்து கண்டிப்பாக இவளுக்குத்தான் பரிசு என்று இவனுக்குள்ளும் ஒரு எண்ணம் விழுந்து விட்டது.

மகாபாரதத்தில் நடந்த பதினெட்டு நாள் யுத்தம் போல ஒருவழியாக ஒன்பது நாளும், பேங்கிலிருந்து யாரும் வராமலேயே முடிந்து விட்டது.

வத்சலாதான் இன்னும் கொலுவை கலைக்காமல் நம்பிக்கையாய் வாசலைப் பார்த்தபடியே உட்கார்ந்திருந்தாள்.

"இனிமே அவங்களெல்லாம் வரமாட்டா வத்சலா, நம்பு!"

"இல்ல கண்டிப்பா வருவாங்க. அவங்களுக்கு பேங்க்ல என்ன வேலையோ என்னமோ!" பதினைந்து நாள் ஆகிவிட்டது தெருவே 'கொல்'லென்று போய் விட்டது.

கடைசியில், 'இவர்தான் பரிசு பெற்ற பெண்மணி' என்று ஸ்டேம்ப்சைஸ் போட்டோ (அதுவும் முத்திரைக் குத்திய ஸ்டேம்ப்பாய்) ஒன்று அவர்களின் பேங்க்கிலிருந்து வெளிவரும் பத்திரிகையில் வெளியிட்டிருந்ததைப் பார்த்துத்தான் நம்பினாள்.

"ஏன் இங்க மட்டும் வரலை? மைதிலி வீட்டுக்குப் போயிருக்காங்களே?" மைதிலிக்குப் பரிசு கிடைக்காததில் உடனடியாக சுதாரித்துக் கொண்டாள்.

"அவங்க வாடிக்கையாளர் வீட்ல மட்டும் தான் விசிட்டாம்."

"கவுத்துட்டாளே மைதிலி!" என்று கவியரங்கத்திற்கு கவிதை வாசிப்பதைப் போல் சொல்லிக் கொண்டாள்.

லோன் போட்டு மிச்சம் இருந்த பணத்தில் செலவழித்து வாசலில் ஒரு போர்டை தொங்கவிட்டாள்.

"இங்கே சகாய விலையில் பொம்மைகள் விற்கப்படும்."

**மருந்துக் கடைகளில் கிடைக்கும் களிம்பு (ஆயின்ட்மென்ட்) டியூப்களிலிருந்து, மருந்து மற்றவர்களால் எடுக்கப்படுவதை தடுப்பதற்காக உலோக மெட்டல் சீல் செய்யப்படுகிறது. உபயோகிப்பாளர்கள் அந்த சீலை அகற்றுவதற்காக ஏதேனும் ஆணி போன்ற கூர்மையான பொருள்களை உபயோகிக்கிறார்கள். அது தேவையில்லை. அதனை திறப்பதற்கான வழி வகை அதிலேயே உள்ளது. அதாவது டியூப் பின் பிளாஸ்டிக் முடியை திருப்பி வைத்து அழுத்தினால் அந்தப் பக்கம் உள்ள கூர்மையான பிளாஸ்டிக் முனையால் 'சீல்' அகற்றப் பட்டு விடும்.**

**— த. சாந்தி**



நவராத்திரி, தீபாவளி விற்பனை



# Charulatha™
## Saree Shop

புடவை

சங்க காலத்தில் பிறந்து
வங்க தேசத்தில் வளர்ந்து
சாருலதா வண்ணமாக
உங்கள் மேலாடையாக மிளிர்கின்றன!

நவராத்திரி
சிறப்பு விற்பனை!

நவராத்திரி நவரச விற்பனை

(ஒன்பது நாட்கள்) (ஞாயிற்றுக்
கிழமைகளும் உண்டு)

**At SRI SANKARA HALL A/C**

278, T.T.K. Road - ALWARPET - CHENNAI - 18.

DATE : அக்டோபர் 4 முதல்
12-ம் தேதி வரை

(4.10.97 TO 12.10.97) (SUNDAYS ALSO OPEN)

எல்லா ரக பெங்கால் புடவைகளும்
கிடைக்கும்

**SPECIAL VARIETIES**

- ORIGINAL BALUCHARI (அசல் பட்டு சரிகை)
- KATAHA WORK ON TUSSAR/COTTON
- TANCHOI ON COTTON/ORGANZA
- VALKALAM PRINT POLYCOT
- MIRROR WORK ON COTTON/ORGANZA/POLYCOT
- POONA (MAHARASTRA) SAREES
- DACCAI SILK
- TANGAIL/DHANEKALI SAREES
- SALWAR DRESS MATERIALS
- SPECIAL BEDSPREADS

**10%**
தள்ளுபடி
புடவைகளுக்கு
மட்டும்

வாடிக்கையாளர்கள் அக்டோபர் 4 முதல்
12-ம் தேதி வரை சங்கரா ஹால் வரும்படி
கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

H.O. CHARULATHA SAREE SHOP PH : 4890358, 4899160
13/3 12th AVENUE,
ASHOK NAGAR - CHENNAI - 600 083.

BRANCH
No. 5 ALSA ARCADE, B.9 SECOND AVENUE,
(OPP : INDIAN OVERSEAS BANK)
ANNA NAGAR EAST) - CHENNAI - 102.

**WHOLESALE &**
**RETAIL**

MASTER/ VISA/
DINERS AMERICAN
EXPRESS CARDS
ACCEPTED.

# பிரசவம் ஒரு சுகமான அனுபவம்!

டாக்டர். எஸ். ஜெயராம்



ரசவம் என்றாலே, 'நல்லபடியாக பெற்றுப் பிழைத்து வர வேண்டுமே' என்ற கவலை எப்போதுமே உள்ளதுதான். ஆனால் வசதிகள் பெருகி - நவீன மருத்துவம் சிறப்பாக வளர்ந்துவிட்ட இன்றைய நாட்களிலும் கூட இதே கவலை - சொல்லப் போனால் இன்னும் அதிகமாகவே வளர்ந்து இருப்பது வியப்பான செய்திதான். கருத்தரித்த நாள் முதலே சில எளிமையான, இயற்கையான சித்த மருத்துவ முறைகளை கையாண்டு வந்தால் அவை நல்ல பாதுகாப்பாகவும் பல சிக்கல்களுக்கு தடுப்பு முறையாகவும் அமைவதுடன் பிரசவம் என்பது அஞ்ச வேண்டிய ஒரு விஷயமாக இல்லாமல் ஒரு சுகமான அனுபவமாகவும் இருக்கும். அதோடு அனாவசிய மருத்துவச் செலவையும் பெரும்பகுதி தவிர்க்கலாம்!



முன்பெல்லாம் பிரசவத்தை வீட்டிலேயே வைத்துக் கவனித்துக் கொள்வதுதானே வழக்கம்? பெற்று அனுபவப்பட்ட பாட்டிமார்களும் கைதேர்ந்த மருத்துவச்சிகளும் இதைச் சிறப்பாக செய்து வந்தனர். பெண்ணின் உடல் கூறுபாடுகள், அறிகுறிகள், கைநாடி சோதனை வயிற்று பரிசோதனை மூலம் முன்பே பிரசவம் ஆகும் நாளையும் கூறிவிட இவர்களால் முடியும். தொப்புள் கொடி குழந்தையை சுற்றிக் கொள்ளும் சிக்கல் ஒன்றுதான் ஆபத்தான விஷயம். இது தவிர, அனைத்துப் பிரச்சினைகளையும் சிறு சிறு கை வைத்தியம் சிட்கா முறைகள், செய்தே சரிசெய்து விட முடியும்! குழந்தை தலை திரும்பி வராத நிலை, பனிக்குடம் உடைந்து நீர் (AMNIOTIC FLUID) வெளியேறி விட்ட நிலை, கருப்பையிலேயே பல கட்டங்களில் குழந்தை இறந்து விடுதல் போன்றவைகளையும் கூட இதில் திறமையாக சமாளித்து விட முடியும்! இதற்கு சித்த மருந்துகள் பல உண்டு! கர்ப்பமான பெண்கள் தூங்கும்போது படுத்தபடியே புரண்டு படுத்தல் கூடாது. இதுவே தொப்புள் கொடி சுற்றிக் கொள்ள ஏதுவாகும். எழுந்து அமர்ந்து பிறகு திரும்பிப் படுத்தல் வேண்டும்.

கருத்தரிப்பின் ஆரம்ப மாதங்களிலேயே சிலருக்கு கருச்சிதைவு ஏற்படுவது ஏன்? இதற்குக் கருப்பை பலவீனம், ஆரோக்கியமற்ற தன்மை கருப்பை மற்றும் உள்ளே வளரும் கருவுக்குப் போதுமான ரத்தம் மூலம் ஊட்டச் சத்து ஆக்சிஜன் போன்றவை சென்றடையாததுதான் அடிப்படைக் காரணம்! நவீன மருத்துவ ஆய்வில் கூறப்படும் கணவன் - மனைவியின் RH Factor எதிரிடையாக அமைந்த ரத்த குருப் கூட காரணமாக அமையலாம்! ஆனால் இவை சித்த மருத்துவ அடிப்படையில் பெரிய பிரச்னை அல்ல! கருப்பை வெட்டை, வறட்சியே இவைகளுக்கு மூலகாரணமாக அமைந்துள்ளன. இதனால் கருச்சிதைவது ஒருபுறம் இருக்க பலருக்கு கருத்தங்குவது கூட இல்லை. நவீன மருத்துவத்தில் கூறப்படும் Dry Endometrium, Non-Secretory Endometrium போன்றவை இதில் அடங்கும்.

கருவை வளர்க்கும் சூல் மெத்தையில் வறட்சி ஏற்பட்டாலோ அல்லது சுரப்பு குறைந்து போனாலோ கருச்சிதைவு ஏற்படாமல் போகுமா என்ன? இவைகளை சரிசெய்ய சிறப்பான மருந்துகள் எமது ஆராய்ச்சியில் உருவாக்கி உள்ளோம். 5, 6 முறை தொடர்ந்து கருச்சிதைவு (Missed Abortion) ஏற்பட்ட பல நூறு சகோதரிகள் இதனால் பலனடைந்து ஆரோக்கியமான குழந்தைகளை, சுகப்பிரசவமாகப் பெற்றெடுத்து உள்ளனர்!

கருப்பையினுள் பிண்டம் முழுமையான உறுப்பு வளர்ச்சி தொடங்குமுன்பு - 5 மாதத்திற்கு முன்பு வரை கருச்சிதைவு ஏற்படுவதை Missed Abortion, Threatened Abortion என்றும் பிண்ட முழு உருவம் பெற்றபின் 6 - 7 மாதத்திற்கு மேல் ஏற்படும் சிதைவை 'கருப்பையினுள்ளே செத்துப் போதல்' Intra Uterine Death என்றும் நவீன மருத்துவத்தில் இரண்டு வகைகளாக பிரிப்பது உண்டு. இதில் Missed Abortion ஐ தடுக்கவோ இதற்கான காரணமோ நவீன மருத்துவத்தில் கண்டுபிடிக்கப்படவில்லை.

6 - 7-ம் மாதம் குறைப் பிரசவத்திற்கு கருப்பைச் சுவர் தளர்ச்சி அடைந்து, கருப்பையின் கழுத்துப் பகுதியும் தளர்ந்து, விரிந்து போவதும்தான் காரணம். இப்படிப்பட்டவர்களை தலைப்புறம் தாழ்வாகவும், கால் புறம் உயரமாகவும் இருக்கும்படி படுக்கவைத்து சிகிச்சை அளிப்பதுண்டு. கருப்பையின் சுவர்களை இறுக்கி சிசு வெளியாவதை தடுக்கும் வகையிலும் கருப்பைக் கழுத்தில் தையல் போடுவது அல்லது வளையம் போடுவதன் மூலம் தடுக்க முயற்சி செய்யப்படுகிறது.

கருப்பையின் பலவீனத்தை சரிசெய்வது தான் சிறந்த சிகிச்சை! அதையே சித்தமருத்துவம் செய்கிறது. கருவழிதல் மற்றும் குழந்தை இறந்து போதல், குறைப்பிரசவம் போன்ற 'எல்லா பிரச்னைகளையும் உள்ளடக்கி சித்த மருத்துவத்தில் பலவகை கருவளர்க்கும் எண்ணெய்கள் உண்டு. இதை 5-ம் மாதம் தொடங்கி 15 நாளுக்கு ஒருமுறை அல்லது மாதம் ஒருமுறை சாப்பிட்டு வர கர்ப்பத்திற்கு எந்த ஆபத்தும் வராது. இதில் இன்னொரு பெரிய நன்மை உண்டு. தாய் தகப்பனுக்கு உள்ள பரம்பரையான பல நோய்களும் கூட பிறக்கும் குழந்தைக்கு வருவதில்லை. இந்த ஒரே மருந்தினாலேயே மலமூத்திரச் சிக்கல், கர்ப்பிணிக்கு வரும் மூலம், உயர்ரத்த அழுத்தம் எல்லாம் தீரும். பிரசவம் எளிதாக கஷ்டமின்றியே ஏற்பட்டு விடும்! கருச்சிதைவையும் Threatened Abortion கூட இதனால் தடுக்கப்படுகிறது. ரோஜா குல்கந்து குமரி லேகியமும் கூட இதற்கு நன்கு பயன்படும்.

இம்மாதிரி கருச்சிதைவு, குறைப்பிரசவம் ஏற்பட ஆண்களின் உயிரணு பலவீனமாக இருப்பதும் கூட காரணம் என்று சித்த மருத்துவம் கூறுகிறது. இவைகளை எல்லாம் தடுக்க சில உணவு ஒழுங்குகளையும் முன்னெச்சரிக்கைகளையும் ஆரம்பம் முதலே கடைப்பிடிக்க வேண்டும். குறைந்த அளவானாலும் சத்துள்ள உணவுகளை சாப்பிட வேண்டும். பழங்கள், கீரைகள் நன்று. வாந்தி அதிகமிருந்தால் ஒரே தடவையாக உண்பதை கொஞ்சம் கொஞ்சமாக பல தடவை பிரித்து உண்ணலாம்! தளர்ச்சியான உடை அணிய வேண்டும். புழுக்கம் இல்லாதபடி காற்றோட்டமான இடத்தில் இருக்க வேண்டும். சிறிது நடைப் பயிற்சி நல்லது. கர்ப்பம் தரித்த பின்பு உடலுறவை தவிர்ப்பது நல்லது என்றே சித்த மருத்துவம் கூறுகிறது. அதிலும் 7-ம் மாதத்திற்கு மேல் ஈடுபட்டால் குழந்தைக்குப் பார்வை, காது மந்தம் ஏற்பட வாய்ப்பு உண்டு என்கிறது. காரமான, வாயு உண்டுபண்ணும் உணவை தள்ள வேண்டும். சிறு வயதில் உணவு சாப்பிடும் விஷயத்தில் அலட்சியம் காட்டிய பெண்களுக்கு இது சோதனைக் காலமாகி விடும்! நீடித்த மலச்சிக்கல், உடல்-மன அதிர்ச்சி, பயம் அதிகமான துக்கம் இவற்றைத் தவிர்க்க வேண்டும். இதனாலேயே கருப்பையில் உஷ்ணம் ஏற்பட்டு கருப்பை தளர்ச்சியடைந்து ரத்த நாளங்கள் விரிவடைந்து ரத்தக் கசிவு ஏற்படும் அபாயம் உண்டு! மூத்திரக் கடுப்பு ஏற்படாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். இதற்கு வில்வ இலை, வெங்காயம், வெந்தயக் கஷாயம் நல்ல நிவாரணம்! மூத்திர உறுப்புக்களில் ஏற்படும் தொற்று - பாதிப்பு கருப்பையையும் தொற்றும் என்பதைத் தெரிந்து கொள்க!

பிரசவ வலிதான் பெண்ணின் அதிகபட்ச பயத்துக்குக் காரணம். மகள் வலி தாங்க மாட்டாள் என்று கூறி முதலிலேயே ஆபரேஷன் செய்து குழந்தையை எடுத்து விடும்படி டாக்டரிடம் கூறும் சில தாய்மார்களும் உண்டு.

கிரேக்க ஞானியான அரிஸ்டாடில் மருத்துவ கலைக்கே முன்னோடியும் ஆவார்! இவருடைய கருத்துப்படி பேதி மருந்து (Catharsis) உடலை சுத்தம் செய்கிறது. நெஞ்சைப் பிழியும் சோகமான நாடகம் காண்போரின் கர்வம், பேராசை போன்ற கெட்ட குணங்களைப் போக்கடித்து நல்ல சிந்தனை தருகிறது என்கிறார். இதன்படி 'பிரசவ வலி' பெண்ணின் உடலின் நரம்பு மண்டலம் மற்றும் ஒரு சிசுவிலும் கூட வலி மிகுந்த அதிர்வு அலைகளை செலுத்தி உணர்வுகளை தூண்டி விடுவது போன்ற அனுபவத்தைக் கொடுக்கிறது. தாங்கும் சக்தி முழுமைக்கும் ஒரு பெரிய சவால்! இந்த வலி துன்பத்தை தாங்கி குழந்தை பிறந்த பின் அவளுடைய உடலும் மனமும் கூட அதிர்ச்சி வைத்தியம் பெற்றது போன்று ஒரு சமநிலை அடைகிறது. பின்னர் எதையும் தாங்கும் திடம் பெறுகிறது என்பது உண்மை! இதனாலேயே பிரசவ வலியை தாயாகும் பெண் அனுபவிப்பது நல்லதே என்று மேலை நாடுகளில் தற்போது கருதி ஊக்குவிக்கப் படுகிறது.

கருத்தரித்தது முதல் 5 மாதம் வரை உடல் தளர்ச்சி, அசதி, அடிவயிற்றில் சூடு, இறுக்கம், மலச்சிக்கல், ஏப்பம், சாப்பாட்டில் வெறுப்பு, அல்லது முடியாமை, குமட்டல், வாந்தி, தலை சுற்றல், மயக்கம் எனப் பலவித உபாதைகள் படிப்படியாக தோன்றுகின்றன. இது ஏன்? கருவுற்றபின் கல்லீரல், இரைப்பையின் செயல்பாடுகளில் உண்டாகும் சிறு மாறுதல் இதற்கு ஒருவகையில் காரணமாகிறது. அஜீரணமும், அடிக்கடி வாந்தியும் ஏற்படும். வாந்தி நிற்காமல் ஆஸ்பத்திரியில் சேர்த்து 'குளுகோஸ்' செலுத்தும் அவசியம் கூட சிலருக்கு ஏற்படுவது உண்டு.

**"OLD IS GOLD**
**GOLD IS T. NAGAR LKS**







*The Big Shop*

தலைமுறை தலைமுறையாக
தரம்மிக்க நகைகளை விற்பனை
செய்து வருவதில் நிகரற்று விளங்குவது
எல். கே. எஸ் கோல்டு ஹவுஸ்

# L.K.S
# GOLD HOUSE

60, USMAN ROAD, T.NAGAR, MADRAS - 600 017.
PHONE : 4341111, 4342222, 4344444, 4345555, 4342122, 4343323

*** OPEN ON SUNDAYS - 10 A.M. TO 1 P.M.**

**"LKS GOLD" IS CASH IN HAND**

ADSTART

கர்ப்பம் தாங்கிய ஆரம்ப மாதங்களில் உடலில் ஒருவித "ஒவ்வாமை" போல இந்த அனுபவம் ஏற்படுகிறது. வேண்டாத ஏதோ ஒன்று உடலுக்குள் புகுந்துவிட்டது போலவும் அதை வெளியேற்ற முயற்சிக்கும் உடலின் ஒரு "ரியாக்ஷன்" போல இவை ஏற்படுகின்றன. இந்தக் காலகட்டத்தில் கருப்பை தளர்ந்து போகாமல் வலுவாக இருக்க வேண்டியது அவசியம்! பிறகு கர்ப்பத்தை உடல் ஏற்றுக் கொள்கிறது. மேற்சொன்ன அறிகுறிகளும் நின்று விடுகின்றன. இந்த அறிகுறிகளை போக்க தீவிரமான ரசாயன மருந்துகள் ஏதும் உட்கொள்வது நல்லதல்ல!

புளிப்பும் இனிப்பும் கலந்த பழங்கள் இந்தக் கால கட்டத்தில் நன்மை செய்யும். அல்பகோரா பழம், புளிப்பு திராட்சை, நாரிஞ்சிப்பழ சர்பத் போன்றவை அடிக்கடி சாப்பிடலாம்! புளிப்புத் தயிரில் லஸ்ஸி தயாரித்து சாப்பிடலாம்! இரவு உணவாக பழரசங்கள் மற்றும் அரைகுறை திட உணவும் உண்டு வரலாம்! உடலுக்கு ஊட்டம் தர திராட்சாதி ரசாயனம், திராட்சாதி சர்பத் ஜீரக வில்வாதி லேகியம் போன்றவை நன்கு பயன்படுகின்றன. மாதுளை ரசாயனம் கருப்பையை பலப்படுத்த மிகவும் நன்று.

கர்ப்பம் வளர வளர மூத்திரம் சரிவர வெளியேறாமல் கால்கள் வீங்குவது உண்டு. இதற்கு நெய்யில் வறுத்த சுக்கு 5 கிராம் அதற்கு சமன் சோம்பு நசுக்கிப் போட்டு கஷாயம் செய்து இரவு தோறும் அரை கப் சிறிது சர்க்கரை சேர்த்து சாப்பிட்டு வந்தாலே போதும். நீர் பிரிந்து வீக்கம் தணியும்.

மலேரியா போன்ற 'வைரஸ்' காய்ச்சல் ஏற்படும் போது வயிற்றில் உள்ள கருவையும் பாதிக்கும் வாய்ப்பு உண்டு. மஞ்சள் காமாலை ஏற்பட்டாலும் இப்படியே! இதற்குக் கர்ப்பச் சிதைவு செய்யாமலேயே சித்த மருத்துவத்தில் சரிசெய்து விட முடியும்! முற்றிய நிலையானால்தான் கடினம்! சுரங்களுக்கு சித்தாமுட்டி பேராமுட்டி வேர், சித்தில்கொடி, திப்பிலி, சுக்கு நிலவேம்பு இவை 6-ம் வகைக்கு 5 கிராம் அளவு நசுக்கிப் போட்டு கஷாயம் தயாரித்து அரை கப் வீதம் தினம் 2 வேளை 3 - 4 நாள் சாப்பிட்டாலே போதும்!

கர்ப்பிணிக்கு பிரவச மாதத்திற்கு முன்பே வயிறு வலித்து ரத்தக் கசிவு ஏற்பட்டால் தென்னம் பூவை மோர் தெளித்து இடித்து எடுத்த சாறு அரை கப் தினம் 2 வேளை கொடுத்து வர நிற்கும். இது போல ஆல், அத்தி, அரசு, மா மரத்தின் கொழுந்து இலைகளை அரைத்துப் போட்டு குடிநீர் போல செய்து கொடுத்து வந்தாலும் நிற்கும். வயிற்றில் உள்ள குழந்தை உயிருடன் இருப்பதைக் கண்டறிய நவீன சாதனம் உண்டு. பழைய முறைப்படி பசு வெண்ணையை கர்ப்பத்தின் மேலாக தடவ அது விரைவில் உருகுவதைக் கொண்டு தெரிந்து கொள்ளலாம்! உருகாவிட்டால் இறந்து விட்டது என்று புரிந்து கொள்ளலாம்!

பிரசவமான பின் நஞ்சு விழாமல் பல பெண்கள் துன்பப்படுவது உண்டு. கருவேப்பிலை, வேம்பு, முருங்கை இவற்றின் கொழுந்து வகைக்கு 20 கிராம் அளவு சேர்த்து 5 கிராம் அளவு கடுக்காய் தேன் சேர்த்து குடிநீர் செய்து கொடுக்க அது வெளியாகிவிடும்!

பிரசவமான பெண்களுக்குக் கருப்பையின் அழுக்கு முழுவதும் வெளியேற வேண்டியது முக்கியம். இதனால் பல தொற்றுகள் ஏற்படுவதையும், சிலருக்குக் சுரவாத ஜன்னி போன்ற ஆபத்தான நோய்கள் ஏற்படுவதையும் தடுக்கலாம்! இதற்கு நடாசய்லேகியம் என்கிற பெருங்காய லேகியம் நன்று. சுக்கு லேகியமும் சிறந்தது. துவர்ப்பட்டை கஷாயங்களால் கருப்பை முகப்பை தினம் அலம்பி வரலாம்! இதனால் கருப்பை விரைவில் தளர்ச்சி, வீக்கம் போன்றவை நீங்கி மீண்டும் விரைவிலேயே ஆரோக்கிய நிலையை அடையும். வயிறு பிரசவத்துக்குப் பின் உடல் பெருத்துப் போவதும் இதனால் தடுக்கப்படுகிறது. வெண்பூசினி லேகியம், குமரிலேகியம், அசுவகந்தி லேகியம் போன்றவை சாப்பிடுவதால் பிரசவத்தில் ஏற்பட்ட சோர்வு தளர்ச்சி, ரத்த இழப்பு முதலியவைகள் வெகு விரைவில் சரியாகி ஆரோக்கியமும் பலமும் ஏற்படும்.

(மீதி அடுத்த மாதம் தொடரும்)

(சித்த மருத்துவத்தின் இப்படிப்பட்ட அற்புதமான முறைகளைச் சொல்லும் டாக்டர் ஜெயராமை 4810752 தொலைபேசியில் அணுகலாம்.)

**தேவையில்லாத சின்னதாகிப் போன சாக்ஸில் சின்னச் சின்ன பீங்கான் பொம்மைகளைப் போட்டு வைத்தால் அடுத்த கொலு வரை பளபளப்பு கெடாமல் பத்திரமாக இருக்கும்.**

**— லலிதா முரளீதரன்.**



# வாஸ்து எனும் புதையல்

பி. ஜே. ரவிராஜ்



அழகென்பது எது? நமக்கு உள்ள அனைத்து விஷயங்களிலும் எல்லாம் பூரணமாக இருப்பது தான் அழகு. நமக்கு வாழ்க்கையில் ஏற்படும் அனைத்து நிகழ்ச்சிகளுக்கும் காரணம் நம்முடைய வீட்டின் அமைப்புதான் என்பதனை ரிக்வேதம் கூறு கின்றது. நம்முடைய முகத்தில் கண்கள், காதுகள், மூக்கு, வாய் முதலியன நல்ல இடத்தில் அமைந்து நமக்கு அழகைக் கொடுக்கின்றது. அது இடம் மாறினால் விகாரமாகும். அதே போன்று வீட்டின் அமைப்பில் மாறுதல்கள் இருப்பின் நம் அகத்தின் (வீட்டின்) அழகு கெட்டு விடும். நாம் கிரகத்தைக் கட்டுகின்ற பொழுது, நம் சரீரத்திற்கு எப்படி நடை, உடை, பாவனைகளை அமைத்துக் கொள்கின்றோமோ அதே எழிலான தோற்றம் நம் அகத்திலும் (வீட்டிலும்) வரும்படியாக அமைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த இதழில் தலைவாசல் இரட்டைக் கதவுகள் எப்படி அமைய வேண்டும் என்பதனை பார்ப்போம். முதலில் இரட்டைக் கதவுகளை எப்படி அமைக்க வேண்டும் என்பதனை தெரிந்து கொள்வோம். இரட்டைக் கதவுகளை வடக்கு, கிழக்கு மற்றும் மேற்கில் மட்டுமே அமைக்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் தெற்கு பார்த்த வீட்டிற்கு தலைவாசல் இரட்டைக் கதவுகளாக வைக்கக் கூடாது. இது மிகவும் கொடுமையானதும் மிகவும் மோசமான விளைவுகளை கொடுப்பதாக சாஸ்திரங்கள் கூறுகின்றது. இன்றும் நடைமுறையில் பார்க்கின்ற பொழுது இது உண்மை என்பது நமக்கு நன்கு விளங்குகின்றது. இரட்டைக் கதவு தலைவாசலை கீழ்கண்ட படத்தின் வாயிலாக அறியலாம்.




N
W
E
S

ஒற்றைக் கதவுள்ள தலை வாசல் அமைப்பதே மிகவும் சிறந்ததாகும். அப்படி அமைக்கின்ற போது அவை நான்கு திசைகளிலும் அமையலாம். அது கீழ்க்கண்ட வரைபடத்தில் உள்ளது போல் அமைவது மிகவும் சிறந்ததாகும்.






வடக்கு பார்த்த வீட்டிற்கு ஒற்றைத் தலைவாசலை படம் A-ல் காட்டியது போல் அமைக்க வேண்டும். அப்படி அமைக்கின்ற பொழுது தலைவாசலின் கதவு வடக்கிலிருந்து மேற்கை நோக்கிச் செல்லும்படியாக அமைக்க வேண்டும். கதவு ஈசான்ய மூலையாகிய கிழக்குப்புறம் போகாதபடி அமைக்க வேண்டும். வடக்கு ஈசான்யத்தில் கிழக்கு அல்லது வடக்கு சுவற்றை தொட்டால் நம் சந்ததிகளாகிய குழந்தைகளின் உடல்நலம் பாதிக்கும். கிழக்குச் சுவற்றில் பட்டால் ஆண் குழந்தைகளையும், வடக்கைத் தொட்டால் பெண் குழந்தைகளையும் பாதிக்கும்.

கிழக்கு பார்த்த வீட்டிற்கு வரைபடம் B-ல் உள்ளது போல் அமைக்க வேண்டும்.




இதில் கதவு சட்டத்திலிருந்து இடதுபுறமாக தெற்கைப் பார்த்தே திறக்கப்படும்படியாக அமைக்கப்பட வேண்டும். இதிலும் ஈசான்யத்தில் படும்படியாக கிழக்கில் அமைந்தால் ஆண் குழந்தைகளுக்கே பாதிப்பு ஏற்படும். கதவு முழுவதுமாக திறந்து கிழக்கு சுவற்றில் படும்படியாக அமைந்தால் வீட்டின் தலைவியையும் மூத்த மகனையும் பெரிதும் பாதிக்கும் என்று சாஸ்திரங்கள் கூறுவதுடன் நடைமுறையில் அப்படியே இருப்பதனையும் காண்கின்றோம்.

தெற்கு பார்த்த வீட்டிற்கு வரைபடம் C-ல் உள்ளது போல் அமைக்க வேண்டும். இதில் கதவு சட்டத்திலிருந்து மேற்குப்புறமாக பார்த்தே திறக்கப்பட வேண்டும். இதில் தெற்குச் சுவற்றில் முழுவதுமாக படிந்து இருந்தால் தவறு ஏதும் இல்லை.

தெற்குத் தலைவாசலுக்கு நேர் எதிர்த் திசையில் வடக்கில் கதவு அவசியம் அமைய




வேண்டும். இது இரட்டைக் கதவுகளாக அமையலாம். தெற்குத் தலைவாசல் உள்ள வீட்டிற்குக் கண்டிப்பாக கிழக்குப்புறம் கதவு வைக்கக் கூடாது. இது வீட்டின் தலைவனுக்கு மிகுந்த ஆபத்தை உண்டாக்கும். தெற்குத் தலை வாசல் வீட்டிற்கு மேற்கில் ஒரு வாசல் இருந்தால் வீட்டின் தலைவிக்கு மிகுந்த கேடு உண்டாகும்.

மேற்கு பார்த்த வீட்டிற்கு வரைபடம் D-ல் உள்ளது போல் தலைவாசல் அமைய வேண்டும். மேற்குத் தலைவாசல் அமைந்த வீட்டின் தலைவாசல் சட்டத்திலிருந்து தெற்கை நோக்கியே திறக்கப்பட வேண்டும். இப்படி திறக்கப்படுகின்ற கதவு மேற்குச் சுவற்றில் படும்படியாகவும் அமைத்துக் கொள்ளலாம்.




வடக்குச் சுவர் படும்படியாக திறந்தால் பொருளாதார தட்டுப்பாடும் கோர்ட் வழக்குகளும் ஏற்படும். மேற்குத் தலைவாசலுக்கு நேர் எதிர்த் திசையில் கிழக்கு வாசல் அமையலாம். இது இரட்டைக் கதவுகளாகவும் அமையலாம். எக்காரணத்தைக் கொண்டும் தெற்கில் கதவு அமையக் கூடாது.

வீட்டின் தலைவாசல் கிரஹங்களின் அடிப்படையில் அமைவது என்பது ஒரு சதுரமான வீட்டிற்கு மட்டுமே சரியாக அமைகின்றது. இது பழங்கால முற்றம் அல்லது தொட்டி வீட்டிற்குச் சரியாக அமையும். மேலும் பிரம்மஸ்தானமாகிய மையப் பகுதி வீட்டில் வானம் பார்த்தபடி திறந்து இருந்தால் நான்கு புறமும் நிலைக் கதவுகள் இருந்தாலும் பாதிப்புகள் ஏற்படாது. நாம் எந்தத் திசை வீடுகளை கட்டினாலும் தலைவாசல்களை அமைக்கின்ற பொழுது சிறந்த வாஸ்து வல்லுனர்களை அணுகி உச்சஸ்தானத்தில் இடத்தின் அமைப்பிற்கு ஏற்ப அமைத்துக் கொள்ளுவதே சிறந்ததாகும். புத்தகங்களை படித்து விட்டு 9 பாகங்களாக பிரித்து நாமே வைத்துக் கொள்வது மிகுந்த தொல்லைகளை உண்டாக்கிவிடும். வீடு அமைக்கின்ற இடத்தின் கோணங்களை சரி செய்த பின்னரே இந்த அளவுகளின் உச்சஸ்தானத்தில் சாஸ்திர விகிதாசாரப்படி பிரித்து தலைவாசல்களை அமைக்க வேண்டும். நமக்குத் தேவதைகளின் மேல் மிகுந்த நம்பிக்கை உண்டு. வாயிலை காக்கின்ற நல்ல தேவதைகளின் உச்சஸ்தானத்தில் தலைவாசலை வைத்துக் கொண்டு துர்தேவதைகளின் ஸ்தானத்தைத் தவிர்த்து வியாதி, கஷ்டம், நஷ்டம் துக்கங்களில் இருந்து விடுதலை பெறலாம்.

இதே போன்று தொழிற்சாலைகளிலும் வாசல் நிலை, நல்லபடி அமைக்கின்றபொழுது தொழிலாளர் பிரச்னை உற்பத்தித் திறன் மற்றும் பல பிரச்னைகளிலிருந்து விடுபெறலாம்.

மாதத்தின் முதல் தேதி முதல் 7-ந் தேதி வரை சென்னையில் 044-8570084-லும் மற்ற நாட்களில் கோவையில் 0422 - 579031 மற்றும் 577907லும் தொடர்பு கொள்ளலாம்.




FLAKES GRANULES METALLUX GRANITE FINISH

வேறெதற்கும் இல்லை ஹெரிடேஜ்

# வசிக்கும் அறை சுவர்கள். சாப்பாட்டு அறை சுவர்கள். படுக்கை அறை சுவர்கள். ஹெரிடேஜின் குடியிருப்புகள்.

ஹெரிடேஜ் சர்ஃபேஸ் டெக்ஸ்சர்கள் கொண்டு சுவர்களில் என்றென்றும் நிலைத்து நிற்கும் முத்திரைகளைப் பதிக்கலாம். இது ஒரு சிங்கிள்கோட் ப்ரீமியம் வால் ஃபினிஷ். தட்ப வெப்பநிலை மற்றும் மங்குதலை எதிர்க்கும் திறனைக் கொண்ட இது, நீங்கள் பாராட்டுகளைப் பெற கைவசம் இருக்கிறது. உங்கள் ரசனை மற்றும் ஹெரிடேஜின் 108 வண்ணங்கள். இரண்டும் உங்களுடையதே.

**CORPORATE OFFICE:** BAKELITE HYLAM LIMITED, SURFACE TEXTURES DIVISION, 3RD FLOOR, 104, S.P. ROAD, SURYA TOWERS, SECUNDERABAD-500 003, INDIA. PH: 040-840881, TLX: 0425-6671, FAX: 040-840890. REGIONAL OFFICE PH. NOS.: • **AHMEDABAD,** 6568258/4601333 • **BANGALORE,** 2867836/2863896, C&F AGENT : 2233187 • **BHUBANESWAR,** 432941/430602 • **CALCUTTA,** 2485921/2/3 • **CHANDIGARH,** 708165/708597/706719 • **CHENNAI,** 8275945/8274537, C&F AGENT : 4320634 • **COCHIN,** 362307/380207 • **COIMBATORE,** 472740 • **DELHI,** 4623393/4625935/4621456 • **INDORE,** 559527 • **LUCKNOW,** 238142/235748 • **MUMBAI,** 4938568/4938580/4938581 • **PUNE,** 4480634/432352 • **SECUNDERABAD,** 7536495/7537505.

Mudra : BH : 97156 Tam


என்றும் ஒளிவீசிடும் எழில்மிகு படைப்பு - அது
என்டைஸ் தரும் தனிச்சிறப்பு
என்டைஸ் தீபாவளி கலெக்ஷன்.
ஒவ்வொன்றும் வண்ணத்தில் நெய்த
வாழ்த்துக் கவிதை. உங்களுக்காக.
உங்கள் குடும்பத்திற்காக.
10% தள்ளுபடி
15.09.97 முதல்
29.10.97 வரை
என்டைஸ்®
சிறந்த ரகங்கள். சரியான விலை.
நேஷனல் டெக்ஸ்டைல் கார்ப்பொரேஷன்
(தமிழ்நாடு மற்றும் பாண்டிச்சேரி) லிமிடெட்
ஒரு மத்திய அரசு நிறுவனம்
SASI/695/9

# காந்தம் போலக் கவரும் அழகு

ரோமானிய பேரழகியான கிளியோபாட்ரா தன் அழகையும், ஆயுளையும் அதிகரிக்க, தன் மணிமுடியில் காந்தக் கற்களை அணிந்திருந்ததாக சரித்திரம் கூறுகிறது. மனித உடலில் ஏற்படும் எல்லா நோய்களையும் காந்தங்கள் மூலம் குணப்படுத்தலாம் என ரஷ்ய நாடு உலகிற்கு அறிவித்துள்ளது. இது சிறந்த இயற்கை முறை என ஜப்பான் அரசு ஏற்றுக் கொண்டுள்ளது. நமது உடலின் இயக்கங்கள் யாவும் நடைபெற இரண்டு சக்திகள் அவசியம். இதையே வலது சிவம் எனவும் இடதுசக்தி எனவும் கூறுகின்றோம். சிவமானது வெப்பமும், கொடியதை அழிப்பதாகவும், சக்தியானது உடலுக்கு வலிமையையும் இயக்கத்தையும் தருவதாகவும் இருக்கிறது. இந்த இயக்கங்களில் மாறுபாடு ஏற்படும் போது தான் உடலானது நோய்ப் படுகின்றது.

காந்தங்களில் அமைந்த இருதுருவமும் இதே தத்துவத்தில் செயல்படுவதால் உடலின் இயக்க மாறுபாடுகளைச் சரிப்படுத்த உடல் ஆரோக்கியம் அடைகிறது. காந்தத்தின் வடதுருவப் பகுதி நோய்க் கிருமிகளின் ஆற்றலை குறைக்கிறது. குளிர்ச்சியைத் தருகிறது. புளிப்புத்தன்மையைக் கட்டுப்படுத்தி காரத் தன்மையை உண்டாக்குகிறது. வேண்டாத வளர்ச்சிகளை தடுத்து சமன்படுத்துகிறது. அணுச்சிதைவை உண்டாக்குகிறது. இறுக்கத்தை ஏற்படுத்துகின்றது. தென்துருவம் வளர்ச்சியைத் தூண்டுகிறது, சக்தியைக் கொடுக்கிறது, புளிப்புத் தன்மையைத் தருகிறது. குளிர்ச்சியைத் தருகிறது. இரத்த ஓட்டத்தைத் தூண்டுகிறது. தளர்ச்சியை உண்டாக்குகின்றது. ஆகவே இந்த இரண்டு துருவங்களின் இடையே வலது பக்க உடலின் வடதுருவத்தையும், இடதுபக்க உடலின் மீது தென் துருவத்தையும் வைக்க காந்த அலைகள் உடலின் இயக்கங்களை ஊக்குவித்து பல்வேறு நோய்களைத் தீர்க்கவும், நோய்கள் வராமல் இருக்கவும் உதவி புரிகிறது.

காந்தங்களின் மீது வைக்கப்படும் எந்தப் பொருளும் அதன் தன்மையில் சிறப்பு பெறுகிறது. எந்த ஒரு மருந்தையும், சிலநாள் காந்தங்கள் மீதுவைக்க அவை விரைந்து செயலாற்றி நோயைப் போக்க உதவுகிறது. காந்தங்கள் இடையே பதினைந்து நாள் கூந்தல் தைலங்களை அல்லது எண்ணெய்களை வைத்து பின் பயன்படுத்த, கூந்தல் உதிராமலும் இளநரை ஏற்படாமலும், நீண்டு கருமையாக வளரவும் செய்கிறது. குடிக்கும் நீரை காந்தங்கள் இடையே எட்டு மணி நேரம் வைக்க தண்ணீரில் உள்ள ஆக்ஸிஜன் ஹைட்ரஜன் அணுக்கள், பல்வேறு மெல்லிய அணுக்களாகப் பிரிக்கப்படுகிறது. நீரின் ஆவியாகும் திறன் விரைவுபடுகிறது. நீரில் பிசுபிசுப்பு மாறி கடின நீர் மெல்லிய நீராக மாறி தண்ணீரே க்ரியா ஊக்கியாக உடலில் செயல்படுகிறது. இத் தண்ணீரில் தினசரி மூன்று வேளை முகத்தைக் கழுவி வர முகத்தோலில் இரத்த ஓட்டத்தை தூண்டி புத்துணர்வைத் தருகின்றது.

— மங்கையர் மலர்



இதனால் பருக்கள் மறைகிறது. கரும்புள்ளிகள் மறைகின்றன. மருக்கள் சிறிதாகி உதிர்கின்றன. முக அழகை பளிச்சிடச் செய்கிறது. காந்த நீரை பயன்படுத்துவதால் முன்னாள் இங்கிலாந்து பிரதமர் தாட்சர் என்றும் இளமையுடனும் அழகுடனும் காணப்படுகிறார் என பல நாளேடுகளில் செய்தி வந்துள்ளது.

மகளிரின் மார்பக வளர்ச்சியில் குறை ஏற்படின் மார்பில் காந்தப் பட்டையை தூங்கும் போது மார்புக் கச்சை அல்லது ஜாக்கெட் உள் வைத்து பயன்படுத்த சுருங்கிய மார்பகம் விரிவுபடுகிறது. மார்பில் ஏற்படும் கட்டி சுரணைகளுக்கு பட்டையின் வடதுருவப் பகுதியை பயன்படுத்த, இரணசிகிச்சை இன்றி எளிதாக கரைக்கப்படுகிறது. பிரசவத்தில் தடைபடும் பால் சுரப்பிற்கு மார்பின் மீது தென்துருவங்கள் பயன்படுத்த பால்சுரப்பை தூண்டுகின்றது. அதிகப்படி சுரந்து, பால் கட்டிக் கொள்ளும் வலியான மார்பகங்கள் மீது வடதுருவம் வைக்க சில நிமிடங்களில் வலிகள் மறைந்து பயன்தரும். வலது பக்கம் வடதுருவ பட்டையும் இடதுபக்கம் தென்துருவப் பட்டையும் பயன்படுத்தி வர மார்பகங்கள் தளர்ந்து விடாமல் எழிலான தோற்றம் தருகிறது.

இடுப்பு வயிறு பெருத்தலுக்கு காந்த இடுப்புப் பட்டையை பயன்படுத்த மாதத்தில் அரை அங்குலத்தில் இருந்து மூன்று அங்குலம் வரை உடலின் தன்மைக்கு ஏற்ப வயிறு குறைகின்றது. இடுப்பு வலிகள் எளிதாக நீக்கப்படுகிறது. கருப்பை நீக்கிய பின்வரும் உடல் பருமன் இடுப்பு கால்கள் வலிகளுக்கும் அதிக உடல் பருமனுக்கும் காந்தங்களை அடிவயிற்றின் மீது பயன்படுத்த பல்வேறு கோளாறுகள் நீக்கப்படுகிறது.

**மகளிர் நோயும் சிகிச்சையும் :**

கருப்பை வளர்ச்சியின்மை, மாதவிடாய் கோளாறுகள் யாவற்றிற்கும் தினசரி வலது அடிவயிற்றின் மீது வடதுருவமும் இடது அடிவயிற்றின் மீது தென் துருவமும் வைக்க அவ்வுறுப்புகள் இயக்கம் சீர்பட்டு பல கோளாறுகள் நிவர்த்திக்கப்படுகிறது.

எந்த நிலையிலும் தினசரி மூன்று வேளை காந்த நீரை அருந்தி வருவதால் ஜீரண உறுப்புகள் இயக்கம் செம்மைப்படுத்தப் பெற்று மலம் சிறுநீர் தடையில்லாமல் வெளியேறுவதால் பல்வேறு கோளாறுகள் வராமல் உடலை காயகல்ப சிகிச்சை போல் பாதுகாக்கிறது.

குழந்தைகளுக்கு தினசரி காந்த நீரை தருவதால் உடல் ஆரோக்கியம் மேம்பட்டு, சுறுசுறுப்பும் தெளிவும் பெற்று நன்கு படிக்கவும் நோய் ஏற்படாமலும் பாதுகாக்கிறது.

இவ்வாறு காந்த சிகிச்சையில் சுமார் இருபதுக்கு மேற்பட்ட கருவிகளை வடிவமைத்தும் சிகிச்சை சாலைக்கான மின்காந்த கருவிகளை வடிவமைத்தும் நடத்திவரும் டாக்டர் எம்.ஜி. அண்ணாதுரை தெய்வீகப் பணிகளை நடத்தி வருவதுடன் தமிழகம் முழுதும் இலவச காந்த சிகிச்சை ஆலோசனைகளை தொண்டுள்ளம் கொண்டவர் உதவியுடன் நடத்தி வருகிறார்.

சுமார் இருபதுக்கு மேற்பட்ட இலவச சிகிச்சை நிலையங்கள் தமிழகமெங்கும் இயங்கி வருகிறது. அவற்றைப் பற்றி அறிய விரும்புபவர்கள் 60, ஜீவன்லால் நகர், திருவெற்றியூர் (பஸ் டெர்மினஸ் பக்கத்தில்) திருவெற்றியூர், சென்னை – 600 019 என்ற விலாசத்தில் பதில் கடிதம் இணைத்த கடிதத்தின் மூலமோ, சென்னை – 545 207 தொலைபேசியின் மூலமோ தெரிந்து கொள்ளலாம். பல்வேறு மாற்று மருத்துவ சிகிச்சைக்கான தபால் பாட வகுப்புகளை மிகக் குறைந்த கட்டணத்தில் இவர் தலைவராக உள்ள கிராம உடல்நலம் மற்றும் கல்விச் சங்கம் நடத்துகின்றது. மிக பின்தங்கிய ஏழை மகளிர்க்கு இலவசமாக ஒரு வருட மாற்று மருத்துவ பயிற்சி வகுப்பையும் அளித்து சான்றும் அளித்து அவர்கள் தொழில்புரிய உதவியும் செய்கின்றார்.






**கொலு சிறப்பாக அமைய செட்டு செட்டாக பல விலையுயர்ந்த பொம்மைகள் தான் வேண்டும் என்பதில்லை. வீட்டிலிருக்கும் கொலு பொம்மைகளைக் கொண்டே அழகாக அலங்கரிக்கலாம். பத்திரிகைகளில் காலண்டர்களில் வரும் கலர் போட்டோக்களைக் கத்தரித்து தெர்மோகோலில் ஒட்டி அழகாக நிற்க வைக்கலாம். இது நம் முழு கற்பனையில் உருவாவதால் நம் வீட்டுக் கொலு வெகு சிறப்பாக அமையும்.**

**– லலிதா முரளீதரன்.**

நியூஸ் சாலட்

மதர் தெரஸா, இளவரசி டயானா – இருவரின் அலைவரிசைகளுமே வேறானவை. சில விஷயங்களில் வாழ்வு பற்றிய எதிர்மாறான கொள்கைகள் கொண்டிருந்தவர்களும் கூட. ஆக இருவரையும் ஒப்பிடுதல் என்பது பொருந்தாத ஒன்றுதான். என்றாலும் இந்த இருவரின் பாதைகளும் சந்தித்த கணங்கள் உண்டு. அடுத்தடுத்து நிகழ்ந்த இவர்களது மரணங்கள் ஏற்படுத்திய தாக்கத்தின் பின்னணியில் எழும் மலரும் நினைவுகள் இவை.

“இளவரசி டயானாவின் இறுதி ஊர்வலத்தில் நான் கலந்து கொள்ளப் போவதில்லை” என்று அன்னை தெரஸா கூறியபோது அந்த இறுதி ஊர்வலத்தின் போது அன்னையின் இறுதிமூச்சே நின்று விடப் போகிறது என்ற வேதனையான உண்மையை யார்தான் கணித்திருப்பார்கள்?



# உலகை உலுக்கிய இரு மரணங்கள்

சாவின் விளிம்பை சமீபகாலமாக அடிக்கடி எட்டிப் பார்த்தவர்தான் அன்னை தெரஸா. என்றாலும் குறிப்பிட்ட தினத்தில் அவருக்கு மரணம் ஏற்படப் போவதற்கான எந்த அறிகுறியும் அதற்கு ஓரிரு மணி நேரங்கள் முன் வரை தெரியவில்லை. அந்த விதத்தில் அன்னை தெரஸாவின் மறைவு அதிர்ச்சி தந்தது. அதிர்ச்சியை விட “சேவையையே உயிர் மூச்சாகக் கொண்ட இவர் போன்ற ஒரு ஜீவன் இனி எப்போது இவ்வுலகத்தில் தோன்றுமோ?” என்ற சோகம் பலரை உலுக்கியது.

டயானாவின் முடிவும் உலகெங்கும் பேரதிர்ச்சி அலைகளை எழுப்பியது. சாவோடு சம்பந்தப்படுத்திப் பார்க்கவே முடியாத இளவயது. அரச வாழ்வு தந்த அழுத்தங்களின் காரணமாக, “புலீமியா” (நரம்புத் தளர்ச்சி காரணமாக உணவுப் பழக்கங்களில் ஏற்படும் அசாதாரண ஒழுங்கின்மை) என்ற நோயால் அவர் தற்காலிகமாக பாதிக்கப்பட்டதுண்டு. இருமுறை அவர் பக்கிங்ஹாம் அரண்மனையில் தற்கொலை முயற்சியில் கூட ஈடுபட்டதுண்டு. ஆனால் அரண்மனையிலிருந்து வெளியேறி சுதந்திரக் காற்றை முழுமையாக சுவாசிக்க அவர் ஆசைப்பட, அது இயலாமல் கார் விபத்தில் அவர் நசுங்கி இறந்தது யாருடைய எதிர்பார்ப்புக்கும் அப்பாற்பட்டது.



விவாகரத்துக்குப் பிறகு சமூக சேவைகளில் நிறைய கவனம் செலுத்தினார் டயானா. ஆதர வற்றோருக்குப் புகலிடம் வழங்கும் நிறுவனங் களுக்கு நிறைய நன்கொடையளித்தார். தன் பழைய உடைகளை பெருந் தொகைக்கு ஏலம் விட்டு, திரட்டிய பணத்தை அனாதைகள் நலவாழ்வுக்கு அளித்தார். பல நாடுகளில் (வியட்நாம் போன்றவை) புதைக்கப்பட்டுள்ள கண்ணி வெடிகளை அகற்ற வேண்டியதன் அவசியத்திற்காகப் பிரசாரம் செய்தார்.

இத்தனை நல்ல காரியங்களுக்கும் ஒரு 'ரோல் மாடலாக' - ஆதர்சப் பெண்மணியாக - டயானா தேர்ந்தெடுத்தது யாரைத் தெரியுமா? அன்னை தெரஸாவைத்தான். இந்தியா வந்திருந்த போது கல்கத்தாவில் உள்ள அன்னை தெரஸா அடைக்கல இல்லங்களுக்கு விஜயம் செய்தார். தொழுநோயாளிகளைக் கூட தயக்கமின்றி அவர் தொட்டுப் பேசு வதையும், கண்கலங்குவதையும் கண்ட பலர் ஆச்சர்யப்பட்டனர்.

மதர் தெரஸா வழங்கிய சான்றிதழ் இது - "கல்கத்தாவுக்கு டயானா வந்தபோது ஏழைக் குழந்தைகளுக்குக் கணிசமான உதவியைச் செய்ய வேண்டும் என்ற துடிப்பை அவரிடம் காண முடிந்தது. எந்த கர்வமும் இல்லாமல் ஒரு சாதாரண குடும்பத் தலைவி போலவே அவர் நடந்து கொண்டார். ஒரு சிறந்த அன்னையாகத்தான் அவரை நான் கருதுகிறேன்."

சில விஷயங்களில் அன்னை தெரஸா கண்டிப்புமிக்கவர். 1979-ல் அவருக்கு அமைதிக்கான நோபல் பரிசு அளிக்கப்பட்டது. பரிசு விழா முடிந்ததும் அன்று மாலை ஒரு சிறப்பு விருந்தும், கலைநிகழ்ச்சியும் நடக்கும் - இது தான் வழக்கம். ஆனால் அன்னை தெரஸா இதற்கு உடன்பட மறுத்தார். "விருந்தும் கலை நிகழ்ச்சியும் வேண்டாம். இதனால் மிச்சமாகும் பணத்தை கல்கத்தாவில் இருக்கும் ஏழை மக்களுக்கு அளிக்க வேண்டும்'' என்றார். முதல் முறையாக (இந்த வேண்டுகோளை ஏற்றதன் மூலம்) தன் மரபுகளில் வளைந்து கொடுத்தது நோபல் குழு.

டயானாவைப் பொறுத்தவரை அவர் இறந்த பிறகு அவருக்காக மாற்றியமைக்கப்பட்ட மரபுகள் அதிகம். பிரிட்டிஷ் மக்களின் உணர்வு வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல், இதுவரை நடத்திராத அதிசயம் ஒன்று நடைபெற்றது. பக்கிங்ஹாம் அரண்மனையில், பிரிட்டிஷ் ஜாக் கொடி அரைக்கம்பத்தில் பறக்க விடப்பட்டது. தொலைக்காட்சிப் பேட்டி ஒன்றில் டயானாவின் பெருமையைத்தான் முழுவதும் உணர்வதாக அறிவித்திருக்கிறார் அரசி.

எப்போது சார்லஸுக்கும் தனக்கும் இடையே உள்ள விரிசல்கள் பகிரங்கமாகத் தொடங்கியதோ, அப்போதிலிருந்தே டயானா தன் பேட்டிகளில் அணுகுண்டுகளை வீசத் தயங்கியதில்லை. "எங்கள் திருமண வாழ்வில் நாங்கள் மூன்று பேர் இருந்தோம்'' என்று டயானா கூறியது ஏதோ மந்திர வாசகம் போல உலகில் பரவியது. பதிந்தது. தன் கணவர் கமீலா என்ற பெண்மணியுடன் திருமணத்திற்கு முன்பே தொடர்பு வைத்திருந்ததைத் தான் டயானா இப்படிக் குறிப்பிட்டார் (இந்த மன அழுத்தத்தின் காரணமாக ஜேம்ஸ் கில்பி என்ற மோட்டார் ரேஸ் பந்தயக்காரரிடம் டயானா ஆதரவும் ஆறுதலும் தேடியது - நியாயமா அதுவும் விவாகரத்துக்கு முன்னமேயே - என்பது பிரச்னைக்குரிய ஒரு கேள்வி)

டயானா மணவாழ்விலிருந்து விடுதலை பெற்றது பற்றி இரு வேறு கருத்துகள். அன்னை தெரஸா சராசரி வாழ்விலிருந்து துறவு வாழ்க்கையை மேற்கொள்ளத் துணிந்த போது அவரது குடும்பத்திலிருந்து பலத்த எதிர்ப்பு.

தன் தங்கை அக்னஸ் (அதுதான் அன்னை தெரஸாவின் அப்போதைய பெயர்) மத போதகப் பள்ளியில் சேர்ந்து வாழ்நாள் முழுவதும் கிறித்தவத் தொண்டுக்கே அர்ப்பணிக்கப் போகிறாள் என்பதையறிந்ததும் மிகவும் வேதனை அடைந்தார் அவரது அண்ணன். அல்பேனிய ராணுவத்தில் உயர்பதவி வகித்த தான், தன் தங்கைக்கு சீரும் சிறப்புமாக திருமணம் செய்ய எண்ணிய கனவு கருகிவிட்டதே என்ற எண்ணத்தில் ஒரு நீண்ட கடிதமெழுதினார் தங்கைக்கு.

உடனே பதில் போட்டார் அந்தத் தங்கை. "சில லட்சம் குடிமக்களை ஆளும் அரசனின் ராணுவத்தில் வேலை செய்வதை நீ பெருமையாகக் கருதுகிறாய். நானோ இந்த உலகத்துக்கே அரசனான இறைவனுக்கு தீவிர சேவை செய்ய ஆசைப்படுகிறேன். நம்மில் யார் செய்வது சரி?"

வெள்ளைப் புடைவை அணிந்து, வங்காள மொழி பேசி அன்பே உருவாக தங்கள் நோய் தீர்த்த, பசி நீக்கிய, ஆதரவளித்த அந்த அன்பு உள்ளத்தை கல்கத்தாவாசிகளால் இனி மறக்கவே முடியாது. கல்கத்தாவில் உள்ள புனித மேரி உயர்நிலைப் பள்ளியில் ஆசிரியையாக தன் தொழிலைத் துவக்கிய அன்னை தெரஸா ஆசிரியர் தினமான செப்டெம்பர் 5 அன்று இறைவனடி சேர்ந்தார்.

எய்ட்ஸ் நோய்க்கு எதிரான பிரசாரத்திற்காக அடுத்த வருடம் இளவரசி டயானா இந்தியா வருவதாக திட்டமிட்டிருந்தார். அப்போது தவறாமல் அன்னை தெரஸாவை சந்திக்க வேண்டும் என்றும் விரும்பினார். இரண்டுமே நிறைவேறாத கனவுகளாகி விட்டன.

**- ஜி.எஸ்.எஸ்.**



## முப்பெருந்தேவியரின் கூட்டறிக்கை.

வருஷந்தோறும் நவராத்திரிக்கு பொங்கல், சுண்டல் சாப்பிட்டு அலுத்துவிட்டதா. ஆசையாய் இந்த வருஷம் நவராத்திரிக்கு சேவரிட் அல்வா, சேவரிட் கேசரி, சேவரிட் கிச்சடி, சேவரிட் பாயாசம் என்று ஒன்பது வகையான சேவரிட் நைவேத்தியங்களை தயார் செய்து ஒன்பது நாட்களும் எங்களுக்குப் படைத்தால் உங்களுக்கு அதிக பலன் கிட்டும்.



**Savorit**

Everyone's Favourite

• VERMICELLI • MACARONI • SPAGHETTI

RG/03/SAV/97

## மகத்தான தீபாவளி விற்பனை !

# மஞ்சுஷா

(மேற்கு வங்காள அரசு எம்போரியம்)

**20%** வரை தள்ளுபடி தருகிறது

பெங்கால் கைத்தறி காட்டன் & சில்க் புடவைகள்

| தசரா தள்ளுபடி | தீபாவளி தள்ளுபடி |
|---|---|
| 22-09-97 முதல் 7-10-97 வரை | 23-10-97 முதல் 29-10-97 வரை |



**MANJUSHA**

(West Bengal Govt. Emporium)

Raheja Complex (Basement) Opp. Anna Statue

834, Mount Road, Chennai - 600 002.

புதிய ஸ்டாக்குகள் வந்துள்ளன. ஞாயிற்றுக்கிழமையும் விற்பனை உண்டு



நவராத்திரி சுபராத்திரி என்று ஒன்பது நாட்களும் சுபமங்களமான நாட்களாகக் கொண்டாடப்படுகிறது. அந்த ஒன்பது நாட்களும் அம்பிகையை மகிழ்வித்து உலக நலனுக்காக அவளிடம் கர்ம சிரத்தையுடன் பிரார்த்திப்பதுதான் நவராத்திரியின் விசேஷம்.

கோயில்களில் செய்யப்படும் அம்மன் அலங்காரத்தைப் போல் நம் வீட்டிலும் அழகான, எளிமையான முறையில் நேர்த்தியுடன் செய்யலாம். அலங்காரம் செய்வது ஒன்றும் அவ்வளவு கடினமல்ல. நம் வீட்டிலிருக்கும் பொருட்களை கொண்டே கலைநயத்துடன் அழகு செய்யலாம்.

பலருடைய வீட்டில் வரலக்ஷ்மி முகம் இருக்கும். எங்கள் வீட்டில் 'பேப்பர் பல்ப்'பிலான கல்கத்தா துர்க்கையின் முகம் ஒன்று உள்ளது. இந்த முகத்தை அடிப்படையாக வைத்து அலங்காரம் செய்தோம்.

# அம்மன் அலங்காரம்

**தேவையான பொருட்கள் :**

கறுப்புத் துணி – ¼ மீட்டர்,
கறுப்பு நூல்கண்டு
சம்கி (தேவைக்கேற்ப),
முத்துச்சரம் – இரண்டு (அ) மூன்று,
சிறிய பிட் துணிகள்
வெல்வெட் துணி – ¼ மீட்டர்,
பாவாடைக்கு பட்டு (அ)
பாலியஸ்டர் துணி – 1 மீட்டர்.
பாவாடைக்கு ஜரிகையுடன் கூடிய பாலிகாட்டன் ரவிக்கை துண்டும் உபயோகிக்கலாம்.

கடைகளில் வெல்வெட்டினால் செய்யப்பட்ட head-band இரண்டு வாங்கவும். இரண்டும் ஒரே அளவில் நீளமாக இருத்தல் அவசியம்.



படம் - 1

***செய்முறை :***

முதலில் அம்மன் முகத்தை ஒரு மரச்சட்டத்தின் மீது பொருத்தி மகுட பாகத்திலும் கழுத்து பாகத்திலும் கயிற்றால் இறுக்கிக் கட்டவும். படம் ஒன்றில் காண்பித்தது போல்.



படம் - 2

2. வெல்வெட் பேண்ட்டை இரண்டு கைகளாக உபயோகிக்கலாம். இதற்குள் கம்பி இருப்பதால் வேண்டியபடி வடிவமைக்கலாம். கடையில் வாங்கும்போது இதன் நிறம் கறுத்த பச்சை, சிவப்பு, மற்றும் நீலமாக இருத்தல் அவசியம். முகத்தின் அளவுக்கு ஏற்ப கைகளின் நீளம் (1:4) இருக்க வேண்டும். வெல்வெட் பேண்ட்டின் ஒரு பாகத்தின் ஓரத்தை வெட்டி அதற்குள் வேண்டிய அளவு பஞ்சை அடைத்தால் பருமனான கைகள் தயார். இரண்டு மூலைகளிலும் கைவளை போல் வளையங்கள் இருக்கும். இதையே அம்மனுக்கு கைவளையாக உபயோகிக்கலாம். வெட்டிய கை பாகத்தை அம்மன் முகத்திற்கு இரண்டு பக்கமும் வைக்கலாம். கை விரலுக்கு மருந்து காகிதத்தின் மேல் வரும் தங்க ஜரிகை பேப்பர் ஒட்டி செய்து வளைபாகத்தின் கீழே பொருத்தி விடவும். படம் - இரண்டில் காண்பித்தது போல்.



படம் - 3

3. கைகள் தயார் செய்து அம்மன் முகத்தோடு பொருத்தி சட்டத்தின் மேல் இறுக்க நூலைக்



படம் - 4

கொண்டு கட்டவும். இது தெரியாமல் இருக்க சிறிய துண்டு ஜரி கையை கை ரவிக்கை போல் அமைத்து அதன் மீது வைத்து தைக்கலாம். மார்பு பாகத்திற்கு நிறைய பிட் துணிகளை திண்டு போல் அமைக்கவும்.

படம் 3-ல் காண்பித்தது போல்.

4. இதன் மேல் வெல்வெட் துணியால் மூடி விடவும். அணிவிக்கும் நகைகளுக்கு ஏற்ப துணியின் நீளம் இருக்க வேண்டும். மருந்து காகிதத்தின் மேல் ஜரிகை பேப்பர் ஒட்டி கற்கள் புதைத்து திருமாங்கல்யம் போல் செய்யலாம். நகைகளை அணிவிக்கும்போது துணியுடன் தைத்து விட்டால் கீழே பாவாடை அணிவித்து ஒவ்வொரு நாளும் மாற்றும் போது கலையாமல் இருக்கும்.

5. இஸ்திரி செய்யப்பட்ட அழகான பட்டு வஸ்திரத்தை வைத்து மார்பின் கீழ் பாவாடை போல் அணிவிக்கலாம். பாவாடையின் உள்ளே நிறைய துணிகளை வைத்தால் பாவாடை பரப்பி வைத்தது போல் அழகாக காட்சியளிக்கும்.



படம் - 5



படம் - 6

5. அம்மன் தலைமுடிக்கு கறுப்புத் துணியால் சுற்றி விடவும். கறுப்புத் துணியின் மேல் பதக்கம் உள்ள நெக்லெஸ் வைத்து நெற்றிச் சுட்டி போல் செய்யலாம். கைத்திறன் உடையவர்கள் தலைபாகத்தின் ஒரு பக்கத்தில் துணி அடைத்து கொண்டை செய்யலாம். (படம் 4). கொண்டையை அழகு செய்ய முத்து, சமிக்கி வேண்டிய இடத்தில் தைத்து மேலும் அழகு கூட்டலாம்.

தலை ஜடை, காதிற்கு தோடு, பூ மாலை கொண்டு அம்மன் அலங்காரம் செய்யலாம்.

அலங்காரம் செய்தபின் வீட்டில் மண்டபம் இருந்தால் அதில் அம்மனை அழகாக உட்காரச் செய்யலாம். பார்ப்பதற்கு மிகவும் கம்பீரமாகவும் அழகாகவும் இருக்கும். பார்க்க (படம் - 5)

ஆர்வம் உடையவர்கள் ஒன்பது நாளும் விதவிதமான பாவாடைகள் அணிவிக்கலாம். (படம் - 6)

இவ்வாறு நம் வீட்டில் அழகான முறையில் அம்பிகையை வழிபட்டு சகல சௌபாக்கியங்களையும் பெறுவோமாக!

- வசுமதி சுரேஷ்

---

நமது வரலாற்றுச் சின்னங்களான தாஜ்மஹால், சாஞ்சி ஸ்தூபி, தஞ்சை பெரிய கோயில் போன்ற பல நினைவுச் சின்னங்களின் போஸ்ட் கார்டு சைஸ் கலர் போட்டோக்கள் காலண்டரிலிருந்து எடுத்து வைத்திருந்தேன். அதை கொலுவில் பார்க்கில் ஒரு மினி இந்தியாவை வரைந்து கொண்டு அந்தந்த ஊர்களில் அந்தந்த நினைவுச் சின்னங்களை நிற்கவைத்தேன். கொலுவைப் பார்க்க வந்த பள்ளி மாணவ மாணவிகள் அதனை மிகவும் ரசித்தனர். நீங்களும் அதுபோல் பொன்விழா கொண்டாடும் இந்தியாவை ரங்கோலியில் வரைந்து அதன் என்றும் அழியா நினைவுச் சின்னங்களை கொலுவேற்றுங்களேன்.

- லலிதா முரளிதரன்.



# மழைக் காலத்தில் வரும் மஞ்சட்காமாலை



ஒரு மனிதனின் உடலில் மிகப் பெரிதும், நுண்ணியதும் ஆகிய உறுப்பு கல்லீரல். இன்றியமையாத உறுப்பான இதயத்தில் கூட பழுதேற்பட்டால், இதய மாற்று சிகிச்சை செய்து வெற்றியடைய முடிகிறது. ஆனால் கல்லீரல் மாற்று சிகிச்சை மிக மிக அவசியமேற்பட்டாலே செய்யப்படுகிறது. வெளிநாட்டில் இயல்பாக செய்யப்படும் இச்சிகிச்சை இப்போதுதான் இந்தியாவில் செய்யப்படுகிறது. இத்தனை மென்மையான இந்த கல்லீரல் உறுப்பைத் தாக்கும் நோய்தான் மஞ்சட்காமாலை. இந்த நோய் ஏற்படக் காரணங்கள், இந்நோயின் தீவிரம், அதற்கான சிகிச்சைகள் ஆகியவற்றைப் பற்றி விளக்கிக் கூறுகிறார் காஸ்ட்ரோ என்ட்ராலஜிஸ்ட், டாக்டர். ஜே. எஸ். ராஜ்குமார். இவர் அடையாறில் உள்ள மலர் மருத்துவமனையிலும், கீழ்ப்பாக்கத்தில் உள்ள ராஜரத்தினம் காஸ்ட்ரோ என்ட்ராலஜி மருத்துவமனையிலும் நோயாளிகளைக் கவனிக்கிறார்.

*மஞ்சட்காமாலை நோய் என்பது என்ன? அதன் அறிகுறிகள் என்ன?*

"உடலில் உள்ள கல்லீரல் (LIVER) என்ற உறுப்பு தன் வேலையைச் சரிவர செய்ய இயலாத நிலையையே மஞ்சட்காமாலை என்கிறோம். கல்லீரல் கையாள வேண்டிய ஹார்மோன்கள் சரிவர கையாளப்படாத காரணத்தால், மஞ்சள் நிற ரசாயனம் அளவில் அதிகரித்து இரத்தத்தில் அதிகமாகக் காணப்பட்டு, மஞ்சள் நிறமாக உடலில் படியத் தொடங்குகிறது. மஞ்சட்காமாலை என்பது தலைவலி போல. வருவதற்கு பல காரணங்கள் உண்டு. பல வகைகளும் உண்டு. பொதுவாக மஞ்சட் காமாலை நோய் ஏற்பட்டோருக்கு பசியின்மை, உடல் சோர்வு போன்ற அறிகுறிகள் ஏற்படும். சிறுநீர் மஞ்சளாகவும், மலம் வெண்மை நிறமாகவும் இருக்கும்.

*மஞ்சட் காமாலையில் பல வகைகள் இருக்கிறதா?*

"மஞ்சட் காமாலையை மருந்தளித்து குணப்படுத்தக்கூடிய வகை, அறுவை சிகிச்சை செய்து குணப்படுத்தும் வகை என இரு வகைப்படுத்தலாம். முதல் வகையில் கல்லீரல் சரியாக இயங்கும்போது, சுரக்கப்படும் பித்த நீரில் ஏற்படும் மாறுதல்களால் நோய் ஏற்படுகிறது. நம் உடலில் உள்ள மண்ணீரல் (SPLEEN). இரத்தத்தில் உள்ள சிவப்பு அணுக்களை கொன்றுவிடும். புதிய சிவப்பு அணுக்கள் உற்பத்தியாகும் போது, பழைய சிவப்பு அணுக்கள் அழிக்கப்பட்டு அதிலிருந்து சுரக்கும் பைலிருபின் (BILIRUBIN) என்ற பிக்மெண்ட் பித்தநீராக கல்லீரலில் வந்து சேர்கிறது.



இந்த மண்ணீரல் சில சமயம் திடீரென நன்றாக உள்ள சிவப்பு அணுக்களையும் அளவில்லாமல் அழிக்கத் தொடங்கும். அல்லது மண்ணீரல் சரியாக இருந்தாலும் சிவப்பு அணுக்களில் குறை ஏதாவது ஏற்படக்கூடும். இத்தகைய சமயங்களில் மருந்து அளித்தும் குணப்படுத்த முடியாத நிலையில்

மண்ணீரல் அறுவை சிகிச்சை மூலமாக உடலில் இருந்து நீக்கிவிடப்படுகிறது. ஒரு உறுப்பை எடுத்து விட்டால் உடல் எவ்வாறு சரிவர இயங்கும் என நீங்கள் வியக்கலாம்! ஒரு மனிதனுக்கு இருபத்தியோரு வயது வரை மட்டுமே சில தொற்றுநோய்களைத் தவிர்க்க மண்ணீரலின் அவசியம் ஏற்படுகிறது. அதன் பிறகு அந்த உறுப்பை எடுத்து விடுவதால் பாதிப்பேதும் ஏற்படுவதில்லை. இந்த அறுவை சிகிச்சையை உடனடியாக செய்வது நல்லது. நேரத்தை ஒத்திப் போடுவதில் உயிருக்கு ஆபத்தேற்படும்.

மற்றொரு வகை மஞ்சட் காமாலையில் பித்த நீர் சுரக்கும் குழாய்கள் பாதிக்கப்படுகின்றன. இந்தக் குழாய்களில் அடைப்பு, அவற்றைச் சுற்றி நெறி கட்டி கொண்டதைப் போல் ஏற்படும் புற்றுநோய், குழாயில் கற்கள் ஏற்படுவது போன்ற சமயங்களில் பித்தநீரின் ஓட்டம் பாதிக்கப்படுகிறது. பித்தப் பையில் சுரக்கும் பித்த நீர் கல்லீரலில் உள்ள குழாய்களின் வழியே சிறுகுடலை அடைகிறது. கணையம் (PANCREAS) சுரக்கும் நீருடன் பித்தநீர் இணைந்து, நம் உணவில் உள்ள கொழுப்புச் சத்தான பகுதியை செரிக்க உதவுகிறது. இந்த முறை பாதிக்கப்பட்டு பித்தநீர் குழாய்கள் பழுதடையும்போது, கீழ் நோக்கிச் செல்வதற்கு பதில் பித்த நீர் மேற்புறம் எதிர்நோக்கிச் செல்கிறது. பிறகு இரத்தத்தில் கலக்கத் தொடங்குகிறது. இவ்வகையை அறுவை சிகிச்சை செய்யப்பட வேண்டிய மஞ்சட் காமாலை (SURGICAL JAUNDICE) என அழைக்கிறோம்."

***இவ்வகை மஞ்சட் காமாலைகளுக்கு சிகிச்சை எவ்வாறு அளிக்கப்படுகிறது?***

"அனைத்து வகை மஞ்சட்காமாலைக்கும் முதலில் அல்ட்ரா சவுண்ட் ஸ்கான் செய்யப்படுகிறது. இதனால் பாதிப்பு ஏன் என்ற காரணம் தெரியவருகிறது. பிறகு அறுவை சிகிச்சை மூலம் அடைப்பு, கல், நெறி கட்டியிருப்பது ஆகியவை சரிசெய்யப்படுகிறது. சில நோயாளிகள் வயதாகி விட்ட காரணத்தால் அல்லது வேறு நோயுள்ள காரணத்தால் அறுவை சிகிச்சை செய்ய இயலாத நிலை ஏற்படலாம். இவர்களுக்கு எண்டோஸ்கோபி முறைப்படி ஒரு ப்ளாஸ்டிக் குழாயை (STENT) பித்தநீர்க் குழாயில் செலுத்தி அடைப்பைச் சரிசெய்கிறோம். இச் சிகிச்சை செய்வதால் நோயாளி பூரண குணமாகி விட மாட்டார். ஆனால் வலியின்றி, சிரமமின்றி வாழ்நாளில் எஞ்சிய நாட்களை நல்ல முறையில் நடத்த வழிவகுக்கிறோம். இந்த வகை மஞ்சட் காமாலையில் மற்ற அறிகுறிகளான பசியின்மை, மஞ்சள் படிதல், சோர்வு போன்றவற்றுடன் உடல் முழுவதும் தீவிரமான அரிப்பு ஏற்படும். இந்த முறையில் வைத்த பிளாஸ்டிக் குழாயிலும் குணமடையாவிடில் அறுவை சிகிச்சை செய்வதைத் தவிர வேறு வழியில்லை!

***இவ்வாறு கல்லீரல் பாதிக்கப்பட காரணமான வைரஸ் கிருமிகள் உடலில் புகுந்து கொள்வது எவ்வாறு?***

"பொதுவாக மக்களிடையே காணப்படும் மஞ்சட் காமாலை நோய் ஹெபடைடிஸ்-ஏ (HEPATITS - A) என்ற வைரஸ் கிருமியால் ஏற்படுகிறது. சுகாதாரமற்ற உணவு, நீர் உட்கொள்ளுதல் சூழ்நிலை, சுகாதாரமற்ற கழிவு அறையைப் பயன்படுத்தல் போன்றவற்றால் ஏற்படக்கூடும். குறிப்பாக மழைக் காலத்தில் அதிகமாகக் காணப்படும். ஆனால் இந்தக் கிருமி மருத்துவம் அளிக்கப்படாவிட்டால் கூட 4 – 6 வாரங்களில் உடலை விட்டுப் போய்விடும். இதனாலேயே மஞ்சட்காமாலைக்கு உடனடி மருத்துவம் என மந்திரித்தல், பச்சிலை மருந்து, சூடு போடுதல் போன்ற பல வழிகளை மேற்கொள்கின்றனர். இன்று ஹெபடைடிஸ் ஏ முதல் ஹெபடைடிஸ் ஹெச் வரை மருத்துவர்களால் கண்டுபிடிக்கப்பட்டுள்ள இந்த வைரஸ் கிருமிகளில் ஹெபடைடிஸ் பி மற்றும் சி ஆகியவை உயிருக்கு ஆபத்தானவை. இக்கிருமிகளை கொண்டவர்களுடன் உடலுறவு கொண்டாலோ, அவர்களது இரத்தம்



நவராத்திரியில் வெள்ளியன்று மாறுதலான புட்டு செய்யலாம். க. பருப்பு கால் கிலோ, ப. பருப்பு கால் கிலோ, து. பருப்பு கால் கிலோ மூன்றையும் ஊறவைத்து மிக்ஸியில் கரகரவென்று அரைத்து, குக்கரில் ஒரு தட்டில் வைத்து வேகவைக்கவும். பிறகு 1 கிலோ வெல்லம் நன்றாக முற்றிய பாகு வைத்து, வெந்த பருப்புக் கலவையை போட்டுக் கிளறவும். 100 கிராம் நெய் விடவும். மு. பருப்பு வறுத்துப் போடவும். தேங்காய் வேண்டாம். இந்தப் புட்டு வாய்க்கு நல்ல ருசி. நிறைய காண்கிறது.

– சித்ரா ஸ்ரீதர்.

# இல்லத்தரசிகளுக்கு **8 in 1** வெட்கிரைண்டர்



இணைப்புகள்: 1. வெட்கிரைண்டர், 2. சப்பாத்தி பூரி மாவு பிசைதல், 3. தேங்காய் துருவுதல், 4. பழரசம் பிழிதல், 5. காய்கறி வெட்டுதல், 6. சிப்ஸ் வெட்டுதல், 7. காய்கறி துருவுதல் (சிறியது), 8. காய்கறி துருவுதல் (பெரியது)

**சிறப்பம்சங்கள்:** மாவு டில்டிங் மற்றும் தானாகவே வெளியேறும் வசதி, **100% Stainless Steel** ஆல் ஆனது. **Nylo Tuf gear transmission.** குறைந்த இடத்தையே ஆக்கிரமிக்கிறது. இறக்குமதி செய்யப்பட்ட டபுள் பால் பேரிங்ஸ் அகன்ற பாகம் கொண்ட உருளைக் கற்கள், இயக்குவதும் பராமரிப்பதும் எளிது. விரைந்து செயலாற்ற வல்லது.

கொள்ளளவு: மாவு அரைத்தல் **2 ltr** சப்பாத்தி மாவு பிசைதல் **1 kg.**

**FITTED WITH**




**MOTOR**

## *Universal*

8 அற்புதங்கள்!

ஒரு வெட்கிரைண்டரின் விலைக்கே!!

---

Manufactures: **UNIVERSAL SHEET METALS,** 182, 100 Feet Road, Tatabad, Coimbatore - 641 012. Ph: 436925. Available at: **SANTHI ELECTRICALS,** Chennai. Ph: 5221634; **ANANTHA AGENCIES,** Madurai. Ph: 744281; **R.M.H.CORPORATION,** Trichy. Ph: 764792; **A. VENKATARAMAN,** Mayiladuthurai. Ph: 22153; **LAKSHMI AGENCIES,** Pondicherry. Ph: 34736. **RAMCO AGENCIES,** Salem. Ph: 447171; **VIJAYATHENU VILAS,** Karaikudi. Ph: 23266; **LAKSHMI AGENCIES,** Villupuram. Ph: 23057; **PRAKASH TRADERS,** Hosur. Ph: 22829; **MADRAS STORES,** Delhi. Ph:345703; **LAKSHMI AGENCIES.** Cuddalor. Ph: 23266; **MURTHY RADIO SERVICE,** Krishnagiri; **LAKSHIMI ENTERPRISES,** Karaikal. Ph: 32597; **BARATH AGENCIES,** Dharmapuri. Ph: 60244, **IYER INDUSTRIES,** Pune. Ph: 77991, **SRINIVASA AGENCIES,** Vellore. Ph: 27389; **HAPPY HOME,** Chidambaram. Ph: 22097; **MAHESH ENTERPRISES,** Bangalore. Ph: 2266871; **SS.MARKETING CO.,** Bangalore. Ph: 6694919.

# நாம் என்றென்றும் இப்படியே இருப்போமா, டார்லிங்?

கிரிஜாவின் சௌந்தர்யா கலெக்‌ஷன். பட்டு - புத்தொளி பெற்றபட்டு.

வகை வகையான டிஸைன் கலவையில். டிஸைனர் கைத்தறி புடவைகள். பழமையின் பெருமை மாறாத வகையில் பட்டோலா டிஸைன்கள். கவனத்துடன் உருவாக்கப்பட்ட அழகான பார்டர்கள். ஜக்கார்ட் இழைக்கப்பட்ட ரவிக்கை துணிகள். மிகுந்த கற்பனைத்திறன் படைத்தவை என்றால் அது மிகையில்லை. சௌந்தர்யாவின் ஒரு சிறந்த மாற்றத்தை உணரமுடிகிறது அல்லவா?

கிரிஜாவினர் ஏற்கனவே அளித்துள்ள சங்கமா, காஞ்சி 24 காரட், சிம்பனி, என்சான்டே, திவிதிகா போன்றவைகளின் வரிசையில் மற்றுமோர் மனம் மயக்கும் படைப்பு - சௌந்தர்யா.

SILKLINE




A UNIT OF PATHI BHASKARAIAH GROUP OF CONCERNS

Girija

*Trendsellers in beautiful silk sarees*

All the Logos are Registered Trademarks

• சேலம்: ரஞ்சனா சில்க்ஸ், சுபம் சில்க்ஸ் • ஈரோடு: பரணி பட்டு செண்டர் • திருநெல்வேலி: ஆர்.எம்.கே.வி.அண்டு சன்ஸ், டவுன். நல்லி சில்க்ஸ் சேல்ஸ் டிப்போ, போதிஸ், டவுன். • நாகர்கோவில்: பார்த்தாஸ் டெக்ஸ்டைல்ஸ். • பாண்டிச்சேரி: சாரதாஸ் • கும்பகோணம்: சீமாட்டி சேரிஸ், லட்சுமி சில்க்ஸ் (பி) லிட். • தஞ்சாவூர்: மஹாராஜா பட்டு மாளிகை • ஊட்டி: ஹெரைட்டி ஹால் • குன்னூர்: விமல் டெக்ஸ்டைல்ஸ் • வேலூர்: ஏ.வி.எம் சேரிஸ் • தூத்துக்குடி: தேவி சில்க்ஸ் • திண்டுக்கல்: பக்கிரன்ஸ் • அவினாசி: ஏ.வி.பார்த்தசாரதி • கோபிச்செட்டிபாளையம்: ஜி.ஆர்.பி.சில்க் சென்டர் • காஞ்சிபுரம்: ஸ்ரீனிவாசா சில்க் ஹவுஸ். • திருப்பூர்: வைசாலி சில்க்ஸ். • நாமக்கல்: ஸ்ரீனிவாஸ் சில்க் சேரிஸ்.

பரிசோதனை செய்யப்படாமல் பிறர் உடலுக்கு ஏற்றப்பட்டாலோ, அவர்களும் பாதிக்கப்படுவார்கள். இதன் தீவிரம் உடனடியாக தெரியாது. படிப்படியாக உடல்நலம் கெட்டு தீவிரமான தொற்றுநோய்களால் கல்லீரல் பாதிக்கப்பட்டு உயிரிழக்க நேரிடுகிறது. கடந்த பத்து வருடங்களில் இந்த வைரஸ் கிருமி அதிகரித்து உடல் ஆரோக்கியத்திற்கு பயங்கர எதிரியாக முளைக்க ஆரம்பித்துள்ளது. இக்கிருமி நம்மைத் தாக்காதிருக்க தடுப்பு ஊசிகள் போடப்படுகின்றன. அதை நல்ல மருத்துவரிடம் சரிவர போட்டுக் கொள்வதால் பேராபத்திலிருந்து நம்மை காப்பாற்றிக் கொள்ளலாம்."

***சிரோஸிஸ் என்ற நிலை என்ன? அதன் தீவிரம் எவ்வளவு?***

"சிரோஸிஸ் (CIRRHOSIS) என்பது கல்லீரல் கடுமையாக பாதிக்கப்படும் ஒரு நோய். வைரஸ் கிருமிகளால் அல்லது மது அருந்துதல் அல்லது வேறு காரணத்தால் கல்லீரல் பாதிக்கப்படும்போது, கல்லீரலில் உள்ள அணுக்கள் (CELLS) அழிகின்றன. அல்லது ஃபைப்ரோஸிஸாகவோ (FIBROSIS) அல்லது தேவையற்ற வளர்ச்சிகளாகவோ (NODULES) உருவெடுக்கின்றன. மொத்தத்தில் கல்லீரல் மிகக் கடுமையாக பாதிக்கப்பட்டு எந்த மருந்தாலும் குணப்படுத்த முடியாத நிலையை அடைகிறது. சில அறுவை சிகிச்சைகள் மூலம் ஓரளவிற்குக் குணம் அடைந்தாலும், கல்லீரல் உறுப்பை அகற்றி வேறு கல்லீரலை பொருத்தும் சிகிச்சையே இதற்குச் சரியானது. இச் சிகிச்சை வெளிநாடு அளவு பிரபலமாகாவிடிலும், இங்கும் செயல்பட தொடங்கி உள்ளது."

***உயிருக்கு ஆபத்து ஏற்படக்கூடிய நோய்கள் என்னென்ன கல்லீரலை தாக்குகிறது?***

"பொதுவாக மழைக் காலங்களில் அதிகமாக ஏற்படும் மஞ்சட்காமாலை நோயே தீவிரமாக ஏற்பட்டு உயிரிழப்போர் 1 முதல் 5 சதவிகிதத்தினரே. ஹெபடைடிஸ் பி, ஹெபடைடிஸ் சி வைரஸ் தாக்கி சிரோஸிஸ் ஏற்பட்டு உயிரிழப்போர் பலர். இதற்குக் குடிப் பழக்கமும், தவறான வாழ்க்கை முறைப் பழக்கங்களுமே முக்கிய காரணம்.

இவற்றைத் தவிர கடந்த ஒரு வருடத்தில் மிக விசித்திரமான நோயான வீல்ஸ் நோய் (WEIL'S DISEASE) என்பதால் பலர் இறந்துள்ளனர். இந்நோய் எலியின் சிறுநீர் மூலம் பரவும் நோயாகும். பொதுவாக சாக்கடைகளை சுத்தம் செய்யும் தொழிலாளிகளுக்கே இந்நோய் ஏற்பட அதிக வாய்ப்பு உண்டு. ஆனால் இன்று நகரில் பல அடுக்கு மாடிக் கட்டிடங்களுக்கும், தனி வீடுகளுக்கும் இணைப்பு தரப்பட்டுள்ள குடிநீர்க் குழாய்கள் பல, கழிவுநீர்க் குழாயின் அருகேயே அமைந்துள்ளதால் இரண்டு நீர்களும் கலந்து விடுகின்றன. இந்த நிலையினால் சுகாதாரமற்ற நீரைக் குடிப்பதால் இந்நோய் தாக்கப்பட்டு பலர் உயிரிழந்துள்ளனர்.

சுத்தமான மினரல் வாட்டர் என்று விற்கப்படும் நீரை மட்டுமே குடிக்க வேண்டும் என்று அவசியமில்லை. அதில் கூட கலப்படம் ஏற்படுகிறது. கல்லீரலை தாக்கக்கூடியவை இரண்டு வகை தண்ணீர் சுகாதாரமற்ற குடிநீர், 'தண்ணீர்' என்று செல்லமாக அழைக்கப்படும் மதுவகை. இவற்றை ஒதுக்கி நல்ல சுத்தமான உணவு, குடிநீர் ஆகியவற்றை உண்டு, வாழ்க்கையை சுகாதாரமான சூழ்நிலையில் வாழ்ந்தால் காமாலை நோய் வராமல் ஆரோக்கியமாய் வாழலாம்!

பேட்டி : ராஜ்யஸ்ரீ சந்திரசேகர்

நவராத்திரி பூஜை முடிந்து விஜயதசமியன்று வன்னிமரத்தை பிரதக்ஷணம் செய்ய வேண்டுமென்று புராணம் கூறுகிறது. வன்னிமரம் எல்லாப் புராணங்களிலும் போற்றப் படுகிறது. மஹாபாரதத்திலும் வன்னிமரப் பொந்தில்தான் பாண்டவர்கள் தங்கள் ஆயுதங்களை வைத்துவிட்டு ஒரு வருடம் அஞ்ஞாத வாசம் முடித்து திரும்பி வந்து விஜயதசமியன்று வன்னிமர பிரதக்ஷணம் செய்து வனவாசத்தை பூர்த்தி செய்து நாடு திரும்பினார்கள் என்று புராணம் கூறுகிறது. விநாயகர் புராணத்திலும் வன்னிமர பிரதக்ஷணம் பற்றிக் கூறப்படுகிறது அத்தகைய சிறப்புமிக்க வன்னிமர பிரதக்ஷணம் நாமும் செய்து நவராத்திரி பூஜையை நிறைவு செய்வோமாக.

– எஸ். ஆர். மீனாட்சி



# 10 வது ஆண்டு சிறப்பு வெளியீடு

# தினமலர் தீபாவளி மலர் '97

ஒரு மெகா சூப்பர் பம்பர் பரிசு



வழங்குவோர்:
காளீஸ்வரி குரூப்பின் கோல்டு வின்னர்

ஒரு மெகா பம்பர் பரிசு



வழங்குவோர்:
திருச்சி வெக்காளியம்மன் ரியல் எஸ்டேட் குரூப்பின் பேஞ்ஜோ குளிர்பானம்

ஒரு மெகா பரிசு



வழங்குவோர்:
மில்கா வொண்டர் கேக்

இன்னொரு மெகா பரிசு



வழங்குவோர்:
ராம் காஷ்யப் நிறுவனம்

- ★ சியலோ கார் 1
- ★ டாடா சுமோ கார் 1
- ★ மாருதி 800 கார் 2
- ★ கைனடிக் ஸ்பாசி மொபட் 8
- ★ பஜாஜ் சன்னி ஜிப் மொபட் 6
- ★ வீடியோகான் செலஞ்சர் கலர் டி.வி. 8
- ★ வீடியோகான் ரெப்ரிஜிரேட்டர் 8
- ★ வீடியோகான் வாஷிங்மெஷின் 8
- ★ ஹெச்.எம்.டி.. கைக்கடிகாரங்கள் 200
- ★ தங்கநாணயம் 108
- ★ சீலிங்பேன் 60
- ★ தலா 10 பவுனில் தங்க நகை செட் 3
- ★ வசந்த் மிக்ஸி 100
- ★ கோனிகா கேமரா 50
- ★ டிஸ்டிக் வெட்கிரைண்டர் 25
- ★ பட்டுப்புடவைகள் 225
- ★ எமர்ஜென்ஸி லைட் 50
- ★ பேமிலி பேக் 50

**விலை ரூ.55**

- ◆ 3 புத்தகம்
- ◆ 2 புளோ-அப்
- ◆ 8 சுவாமி படங்கள்
- ◆ கை நிறைய தரமான இலவச பொருட்கள்

**இத்துடன் உங்களில்**

# 934

**பேருக்கு ரூ.40 லட்சம் பரிசு**

அதோடு சிங்கப்பூர் டூர் செல்ல ஒரு ஜோடிக்கு வாய்ப்பு

*Not Only amusing Amazing too...*

# தினமலர் தீபாவளி மலர் '97

சென்னையில் ☎ 8523715, 8523695 தொடர்பு கொள்ளவும்.



கூவம் என்று சொன்னாலே சென்னையைத் தெரிந்தவர்கள் மூக்கைப்பிடித்துக் கொள்வார்கள். அந்த அளவு 'பேரு கெட்டுப்போன' நதி அது. ஆனால் பாவம், அது நல்ல ஒரு ஏரியாக இருந்தது. அது நிறைந்து வழிந்தபோது, வழியெல்லாம் செழிக்கச் செய்து, சென்னையிலேயே கடலோடு கலந்தது ஒரு காலம். ஆனால் இப்போதைய நிலைமையோ வேறு.

"அதனால்தான் நான் சென்னையில் படிக்கும்போது எங்க சொந்த ஊரு 'கூவம்'னே சொல்ல மாட்டேன். காலேஜ் பசங்க இண்டல் பண்ணித் தள்ளிடுவாங்க. மொதல் நாள் அப்படிச் சொல்லி மாட்டிக்கிட்டேன். அதற்கப்புறம்தான் சென்னையிலே கூவம் நாறும் நாற்றத்தைத் தெரிந்து கொண்டேன்....!"

என்றார் சிரித்துக் கொண்டே, தமிழ்நாடு கூட்டுறவு வீட்டு வசதி இணையத்தில் பணிபுரியும் திரு. இராஜேந்திரன். இவ்வூரின் நடுவே அற்புதமாகப் பொலியும் கோயிலுக்குத் தன்னால் இயன்ற தொண்டினைச் செய்து வரும் இவருடைய தகவலின் காரணமாகத்தான் அந்த ஊருக்குப் போனதே. அரக்கோணத்திலிருந்து 25 கி.மீ. தூரத்தில் உள்ளது.



சிவன் போர்க்கோலம் பூண்டு நின்றதாக இருக்கும் அரியதான இரண்டு மூன்று ஊர்களில் இதுவும் ஒன்று. 'திருவிற்கோலநாதர்' என அழகிய பெயர் தாங்கிய ஈஸ்வரன் உறையும் பழம்பெருமை வாய்ந்த கோயில் இன்றும் இங்கு மேன்மையுடன் பொலிந்து வருகிறது.

விஜய

இக்கோயிலில் பொது மக்கள் மிகுந்த பயபக்தியுடன் வணங்கி வருகிறார்கள். காரணம் ஈஸ்வரனின் சாந்நித்யமும், அம்பாளின் சௌந்தர்யமான சக்திவாய்ந்த சிறப்புமே ஆகும்.

இவ்வூரின் கிழக்கிலேதான் கூவம் அக்னித் தீர்த்தமாக உள்ளது. அசுரர்களை அழிக்க திரிபுராந்தகனாக இறைவன் தேரோட்டி வருகிறான். விநாயகரை மறந்து போர்க் கோலப்படை புறப்பட்டதால் விக்னமாகி தேரின் அச்சு முறிந்து இக்குளத்தில் விழுந்ததாகக் கூறப்படுகிறது. இதன் சிறப்பு கருதியே இதில் தவளைகள் இன்றளவும் இருப்பதில்லையாம். மக்கள் இங்கு தங்கள் கைகால்களைச் சுத்தம் செய்து கொண்டே கோயிலினுள் செல்கிறார்கள். இத்தீர்த்தத்திற்கு எதிரேயுள்ள விநாயகருக்குப் பொங்கல் தினத்தன்று சன்னிதித் தெருவிலுள்ளோர் சிறப்பு வழிபாடு செய்கிறார்கள்.

இக்கோயில் இறைவனுக்கு இங்கிருந்து 1½ கி.மீ. தூரம் சென்று கூவம் ஆற்றிலிருந்து குருக்கள் தலையில் சுமந்து நீர் எடுத்து வந்து அபிஷேகம் செய்வது வழக்கம். பிறகு மாட்டு வண்டியில் இன்றளவும் கொண்டு வரப்படுகிறது. அதே போல இறைவனுக்கு அபிஷேகம் செய்யும் பாலையும் இங்கிருந்து எட்டு கி.மீ. தூரத்திலுள்ள பிஞ்சிவாக்கம் என்ற ஊரிலிருந்தே ஒரு குடும்பத்தினர் பரம்பரையாகத் தந்து கொண்டு இருக்கின்றனர்.

இச்செய்திகளைக் கேட்டு வியந்த வண்ணம் முடிவு பெறா நிலையிலுள்ள கோபுரம் தாண்டி உள்ளே செல்கிறோம். கோயில் பிரகாரங்களில் கணபதி, தட்சிணாமூர்த்தி, லிங்கோத்பவர், கொற்றவையான துர்க்கை, நான்முகன் அழகுற அமர்ந்திருக்கிறார்கள்.

சோழர் காலச் சிற்பக்கலை எடுத்துக்காட்டாக மிக அற்புதமாக இச்சிலைகள் காணப்படுகின்றன. முதற் பிரகாரத்தில் அச்சிறுத்த விநாயகர் குறும்பாக அமர்ந்திருக்கிறார். தந்தையின் தேர் அச்சையே 'இறுத்த' விநாயகர் அல்லவா? இச்சன்னிதியிலேயே மகா



விஷ்ணுவும், பிரம்மாவும் வழிபட்டதாகச் சொல்லப்படும் விநாயகர்களும் இருக்கிறார்கள். பாலமுருகனும், சொக்க நாதர், மீனாட்சி, சண்டேசர், பைரவர் என அனைவரும் பாங்குற அமர்ந்திருக்கிறார்கள். பிரகாரம் சுற்றி வந்தால் கருவறைக்கு முன்பு அற்புதமான நடராஜர், சிவகாமி செப் புத்திருமேனிகளுடன் சந்நிதி அமைந்துள்ளது. உலகையே ஆட்டுவிக்கும் ஆடல் வல்லானின் நாட்டிய கோலம் மெய்சிலிர்க்க வைக்கிறது.

அதனைத் தாண்டி கருவறை அமைந்துள்ள மண்டபத் திற்குச் செல்கிறோம். இறைவன் திரிபுராந்தகர் லிங்கவடி வில் அமைந்துள்ளார். இவர் தீண்டாத் திருமேனி. அர்ச் சனை செய்யும் குருக்கள் பூஜை, அலங்காரம் அபிஷேகம் செய்வது எல்லாமே தீண்டாமலேதான். நெற்றியிலே வெள் ளைத் திட்டு காணப்படுகிறது. இது கோடை, மழை காலங் களுக்கு ஏற்ப மாறுபடுகிறது என்று கூறுகிறார்கள். மிகவும் சாந்நித்யத்துடன் அமைந்திருக்கும் ஈஸ்வரனை வழிபடு கிறோம்.

"இவரும் சரி, அம்பாளும் சரி மிகவும் சக்திவாய்ந்தவர்கள். இங்கு வந்து வணங்கும் பக்தர்களுக்கு நிச்சயம் அவர்கள் கோரிய வரம் கிடைக்கும். இதை அனுபவபூர்வமாக இன்று இருக்கும் பல பெரிய வர்கள் அறிவார்கள். இக்கோயில் கேட்டவரம் தரும் தலமே"

# துர்க்கை

என்கிறார் கோயில் அர்ச்சகர். அங்கிருக்கும் போது அந்தச் சாந் நித்யத்தை நன்றா கவே உணர முடி கிறது. இறைவனை வணங்கி அம்மன் சந்நிதியில் நுழைகி றோம். தேவி திரிபுராந்தகி அம்மனின் நின்ற திருக்கோலம் எழில் மிகுந்தது. வலது முன்கரம் அபய முத்திரையும், இடது முன்கரம் வரத முத்திரையும், மற்ற கைகளில் பாச அங்குசம் ஏந்தி குமிண் சிரிப்போடு, கண்களில் கருணையுடன் காட்சி தருகிறாள் அன்னை.



• துர்க்கை

இங்கு பள்ளியறை அம்மன், தனி அம்மன் பல மூர்த்தங்கள் சிறப்புப் பெற்றுள்ளன.

ஈஸ்வரன் திரிபுராந்தகனாக அசுரர்களை அழிக்கச் சென்றபோது விஷ்ணு பிரம்மா தேவாதி தேவர்களும் தாங் களும் ஈஸ்வரனுக்குப் பல்வேறு ரூபங்களில் உடன் செல் கிறார்கள். விஷ்ணுவே ரிஷபமாகச் சென்றதாகப் புராணம். எனவே அன்னை இங்கு சிம்மவாகனத்தில் அமர்ந்து வரு கிறாள். அனைத்துத் தெய்வங்களும் இங்கு உடனுறை வதாகவே ஐதீகம். அதனாலேயே மிகுந்த சக்தியுடன் இக் கோயில் இங்கு திகழ்கிறது.



கோயிலுக்குத் தவறாமல் பனிரெண்டாண்டுகளுக்கு ஒருமுறை குடமுழுக்கு நடைபெறுகிறது. ஊர் மக்கள் மிகுந்த பயபக்தியோடு இக்கோயிலை வலம் வருகிறார் கள். இந்த எளிய கிராம மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு இக்கோயிலின் மேல் பற்று வைத்துத் தங்கள் அன்பைக் காட்டுகிறார்களோ, அதற்கு நேர்மாறாக வெகு அருகா மையிலேயே வேறோர் உள்ளது. கலைச் சுரங்கமாக, பொக்கிஷமாகக் காட்சி அளிக்கும் அந்த ஊர்தான்

• முத்தேவியர்

(கூவம்)



• ராஜேந்திரன்



'தக்கோலம்'. கூவத்திற்குப் பக்கத்தில் 13 கி.மீ. தொலைவில் உள்ளது.

சோழர் காலத்தில் இராஜேந்திரன் எனும் இளவரசன் வட அரசர்களை எதிர்த்துப் போராடி யானை மேலேயே இறந்து மிகக் கோர யுத்தம் நடந்த இடம்தான் தக்கோலம். சரித்திரத்தில் அழியாபுகழ் பெற்றது.

ஆனால் இங்கு ஆன்மீக அன்பர்களுக்கு இருக்கும் பொக்கிஷங்கள் ஏராளம். செல்பவர்கள் பக்திப் பெருக்கில் கண்ணீர் விடுகிறார்களோ இல்லையோ, அவ்வளவு பெரிய ஊர் மக்களின் அக்கறையின்மையால் நம் முன்னோர்கள் அமைத்துச் சென்ற அற்புதங்கள் அழிந்து வருவதைக் கண்டு கண்ணீர் விடுவார்கள்.

தக்கோலத்தில் ஏழு சிவன் கோவில்கள். அதில் ஒன்று மட்டுமே பூஜை செய்யப்படுவதாக இருக் கிறது. மற்றொன்று கண்ணால் பார்க்கக் கூடிய அளவில் இருக்கிறது.



• பிள்ளையார் (தக்கோலம்)

தக்கோலம் - செருக்கடைந்த தக்கன் எனும் தட்சன் - தாட்சாயிணியின் தந்தை ஈஸ்வரனை அவமதித்து யாகம் செய்தான். அவனையும் அவன் யாகத்தையும் வீரபாகு அழிக்கிறார். வீழ்ந்த தக்கனின் வேண்டுதல்படி ஆட்டுத்தலை பொறுத்த தன் பழைய நிலை வேண்டி தக்கன் தவம் செய்த இடம் தக்கோலம். தாட்சாயிணியும் இங்கு வந்து தவம் செய்து இருவரும் ஈஸ்வரனின் அருள் பெற்ற இடமாகக் கூறப்படுகிறது.

இங்குள்ள ஜலநாதேஸ்வரர் திருக் கோயில் பெரியது. இக்கோயிலுள்ள ஒவ்வொரு சிற்பமும் கண்டு கவிபாடலாம். அத்தனை அழகுடன் விநாயகர், முருகர், சோமாஸ்கந்தர் போன்றோர் அமைந்துள்ளனர்.

அனைத்தையும் மிஞ்சியுள்ளவை கருவறையைச் சுற்றி கோஷ்ட தேவதைகளாக அமைந்துள்ள நால்வரும். விநாயகர், தட்சிணாமூர்த்தி, மகா விஷ்ணு, பிரம்மா நால் வரும் அமர்ந்த கோலத்தில் அற்புதமாகக் காட்சியளிக்க, விஷ்ணு துர்க்கை இங்கு விஜய துர்க்கையாக பக்தர்களுக்கு விரைந்து வழி காட்டும் வகையில் மிக அழகிய நிலையில் காட்சி அளிக்கிறாள்.

இவர்களின் எழில் கோலங்கள், சொல்லி மாளாது என்றாலும் தட்சிணாமூர்த்தி, விஜய துர்க்கை இருவரையும் சொல்லியே ஆக வேண்டும். பொதுவாக கல்லால மரத்தின் கீழ் நான்கு சீடர்கள் அமர்ந்திருக்க மௌன உபதேசம் செய்யும் வகையில் அமைந்திருக்கும் தட்சிணாமூர்த்தி இங்கு அவை எதுவும் இல்லாமல் வலக்காலைத் தொங்கவிட்டு இடக் காலை குத்துக்காலிட்டு உத்கடி ஆசன வகையில் அமர்ந்திருக்கிறார். இது நம்மை ஆசிரியர் கோலத்தில் பார்ப்பது போல உள்ளது. இந்த அமைப்பு வேறெங்குமே காணாத அமைப்பு.

''அதனால் தான் இந்தத் தட்சிணாமூர்த்தி மகா விசேஷம். வியாழக்கிழமைகளிலோ, குரு ப்ரீதிக்காகவோ இங்கு வந்து பரிகாரம் செய்யலாம். நம்மைக் கருணையுடன் விசாரிப்பது போல அமர்ந்திருக்கும் தட்சிணாமூர்த்தி

• பிரம்மா





• துர்க்கை



• தட்சிணாமூர்த்தி

வேண்டியவரம் தரக் கூடியவர். இந்த ஊரில் திருமணமாகாத பல பெண்கள் இங்கு வந்து எலுமிச்சை விளக்கேற்றி வழிபட்டு வேண்டுதல் நிறைவேற்றி இருக்கிறார்கள்" என்கிறார்கள்.

அதே போலத் தான் விஜயதுர்க்கையும். மகா பெரியவர் இத்துர்க்கையைப் பார்த்துவிட்டு மிகவும் சிலாகித்துப் பேசியதாகக் கூறுகிறார்கள். உடுத்திய உடைகள் பறக்க இடது காலை அழுத்தமாக எருமைத் தலையில் வைத்து வலது காலை சிறிதே உள்வாங்கி முன்வரும் கோலத்தில் கையில் சங்கு சக்கரம் தாங்கி விஷ்ணு துர்க்கையாகக் காட்சி அளிக்கிறாள். அதரத்திலே இருக்கும் புன் முறுவல் இவள் மகிஷனை ஜெயித்துவிட்ட விஜயச் செய்தியைக் கூறுகிறது. மிக விசேஷமாக அமைந்திருக்கும் இந்த விஜயதுர்க்கையை நிச்சயம் விஜயதசமியன்று வழிபட்டால் எண்ணிய பலன்கள் கைகூடும்.

அதே போல அமர்ந்த கோல மகாவிஷ்ணுவை இன்றெல்லாம் பார்த்துக் கொண்டே இருக்கலாம். சுற்றி வந்து இறைவனின் சந்நிதிக்குள் நுழைவதற்கு முன்னர் உததி முனிவர் வழிபட்ட லிங்கம் உள்ளது. உததி முனிவர் இங்கு நெடுங்காலம் இருந்து வழிபட்டதாகவும், அவரின் சமாதியின் மேலேயே இவ்லிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு இருக்கலாம் என்கிறார்கள்.

உள்ளே திருவூறல் மகாதேவர். பாலாற்றின் கரையில் அமர்ந்திருப்பதால் இப்பெயர் வந்திருக்கலாம் போலும். இறைவனை வழிபட்டுத் திரும்புகிறோம். கோயிலிலே உள்ள உற்சவ மூர்த்தங்கள் மகா சிறப்பு வாய்ந்தவை. லக்ஷ்மி, சரஸ்வதி சமேத பார்வதி தேவி இங்கு நவராத்திரிக்குப் பொருள் கூறும் வகையில் பாங்குற அமர்ந்திருக்கிறாள். தக்கமாதா காக்கும் கடவுளாக வீற்றிருக்கிறார். அங்கிருந்து தனியாக இருக்கும் அம்மன் சந்நிதிக்கு வருகிறோம். கிரிராஜ கன்னிகையின் அழகை என்னவென்று சொல்ல? லட்சுமியும், சரஸ்வதியும் உடன் வாசம் செய்ய இவள் கிரிராஜ கன்னிகையாகக் காட்சியளிக்கிறாள்.

சிற்பக் கலைக்கும், ஆன்மீகத்திற்கும் பொக்கிஷமாக விளங்கும் இக்கோயிலின் நிலையைப் பார்த்தபோது மிகவும் வருத்தமாக இருந்தது. அந்த ஊரில் ஆயிரக்கணக்கானவர்கள் வசிக்கிறார்கள். அவர்கள் தினமும் வந்து வணங்கிச் சென்றாலே போதுமே! இறைவனின் அருள் மணக்கும் அந்தக் கருவறையிலே பக்தியுடன் இருந்தாலே நம் கலிதீருமே! என்ற பெருமூச்சுடன் அக்கோயில் குருக்கள்களான இளைஞர்கள் அழைத்துச் சென்று காட்டிய மற்றொரு கோயிலைப் பார்த்தபோது கண்ணில் ரத்தமே வந்துவிடும் போலானது.

வறண்டு கிடக்கும் பாலாற்றங்கரையில் அமைந்துள்ள கங்காதரேஸ்வரர் கோயில் அது. வெளியே சுட்டெரிக்கும் வெயில். உள்ளே வௌவால்கள் தொங்கும் இருட்டில் வாசம் செய்கிறார் கங்காதரேஸ்வரர். அன்னை மோகன வல்லி. முருகனையும், பிள்ளை





• கங்காதரேஸ்வரர் கோயில்

யாரையும், சண்டேஸ்வரரையும் இருட்டில் தீக்குச்சி வெளிச்சத்தில் பார்த்தோம். அக்கோயிலைப் பற்றிச் சொன்ன சிறப்புமிக்க புராணக் கதைகளை காதுகள் ஏற்க மறுத்தன. தண்ணீர் அளவினை அறிந்து எங்கு அமைத்தால் எப்போதும் தண்ணீர் விழும் வகையில் அங்கு நந்தியினை அமைத்துள்ள அக்கால பொறியியல் நிபுணத்துவத்தை வியப்பதா? அதையே பக்தி நெறியுடன் நந்தியினை அமைத்து அந்த நந்தியின் வாயிலிருந்து விழுவது போலவும், அந்நீர் இறைவனின் பிரகாரத்தைச் சுற்றி மற்றொரு நந்தி வாயின் வழியாக குளத்தில் விழுவது போலவும் அமைத்துள்ளார்கள். இங்கு நீராடியே உததிமுனிவர் தன்நோய் நீங்கப் பெற்று இறைவனைத் தொழுதார் என்கிறார்கள்.

ஆனால் பாழடைந்து, சுற்றிலும் மனித அழுக்குகள் சேர வறண்டு கிடக்கும் பாலாற்றங்கரையில் அமைந்திருக்கும் அக்கோயிலைப் பார்த்தபோது நெஞ்சத்தில் கோபமும், துக்கமும்தான் எழுந்தது. நம்மால் இப்படியெல்லாம் படைக்க முடியாது. ஆனால் படைத்தவற்றைக் காக்கவாவது செய்யலாமே! முன்னோர்கள் தந்து சென்றிருக்கும் கலைப் பொக்கிஷங்களை இப்படியா குப்பையில் விட்டு வைத்திருப்பது?

வரும்போது மனத்தில் ஒரு நினைவு உறுத்திக் கொண்டே வந்தது. நாமெல்லாம் தீர்த்தயாத்திரை எனவும், ஸ்தல விஜயம் எனவும் நிறைய பிரசித்தி பெற்ற ஸ்தலங்களுக்குப் போகிறோம். சரிதான். ஆனால் அவரவர் ஊரிலிருக்கும் கோவிலையும் பராமரிக்கலாமே! ஒன்றுமில்லை, முடிந்தபோதெல்லாம் கோயிலுக்குப் போய் விளக்கேற்றி வணங்கிவிட்டு வரலாமே!

நம்மூரில் உள்ள நம் கோயில்களும் வேறெந்தக் கோயில்களுக்கும் குறைந்தவை அல்ல. ஒவ்வொன்றும் எத்தனையோ சிறப்புக்களைப் பெற்றவைதான். நாம் வீட்டில் இருக்கும் தாயைப் போன்றவை அவை. அவளை முதலில் தொழுது பிறகு ஊர்வலம் வரலாமே! அதைச் செய்தாலே போதும், இந்தத் திருநாட்டில் பல கோயில்களும் மீண்டும் ஒளி பெற ஆரம்பித்துவிடும்.



• விஷ்ணு

சரி, எல்லோருக்கும் போவானேன், அந்தந்த ஊரில் இருக்கும் பெண்கள் ஒன்று சேர்ந்து இப்படி உழவாரப் பணி ஆரம்பிக்கலாமே! செய்யுங்களேன். எனக்கும் சொல்லுங்கள். எல்லோருடனும் பகிர்ந்து கொள்ளலாம்.

— மஞ்சுளா ரமேஷ்

படங்கள் : ஜி. சுரேஷ்




என் பையனை "எழுது, படி" என்று நச்சரிக்காமல் அவனுக்கே அதில் டேஸ்ட் ஏற்பட இந்த வழியைக் கையாண்டேன். ப்ளேக் போர்ட் ஒன்று, ஒரு டப்பா வெவ்வேறு கலர்களிலுள்ள சாக்பீஸ்கள், ஒரு ஸ்கேல் இவற்றை வாங்கி, ப்ளேக் போர்டை ஜன்னலில் ஆணி அடித்து அவனுக்கு எட்டும் உயரத்தில் மாட்டி வைத்தேன். பின் தினமும் அவனுக்கு டீச்சர் விளையாட்டு தான். கீழே பாயில் நான் மாணவியாக உட்கார்ந்து கொள்ளுவேன். அவன் சேரில் உட்கார்ந்து அன்று அவனுக்கு நடந்த பாடங்களை விடாமல் அவனுடைய டீச்சர் சொல்லிக் கொடுப்பது போலவே சொல்லிக் கொடுப்பான். எனக்கும் குழந்தையுடன் பொழுதை உபயோகமாகக் கழிப்பது சந்தோஷமாக இருக்கின்றது.

— விசாலாட்க்ஷி வரதராஜன்

# நவக்கிரகக் கோட்டை



* சுயம்பு விநாயகர் கோயில்

வேலூரிலிருந்து மங்கையர் மலர் விற்பனை ஏஜெண்ட் கணேசன் பேசும்போதெல்லாம் கண்டிப்பாக ஒன்றைச் சொல்லாமல் போனையே வைக்க மாட்டார். அது தான், "வேலூர் பக்கத்துல இருக்கற நவக்கிரகக் கோட்டையை நீங்கள் கண்டிப்பா பார்க்கணும், மேடம்!" சொல்லிச் சொல்லி அந்தப் பெயர் மனதில் பதிந்தே போய் விட்டது. மறக்க முடியாத இரு மண அனுபவங்களுக்காக பரிசு பெற்ற வேலூர்ப் பெண்மணிக்காகப் பரிசினைக் கொடுக்க ஜெய்மாதி ஜெயராமனுடன் எல்லோரும் புறப்பட்டோம். அதோடு இக்'கோட்டை'யைப் பார்க்கவும் தீர்மானித்தோம்.

ராணிப்பேட்டையிலிருந்து பொன்னை சென்று அங்கிருந்து சோளிங்கர் செல்லும் சந்திப்பிற்கு முன்னால் திரும்பினால் அதுவே ஒட்டநேரி. பொன்னையிலிருந்து மூன்று கிலோமீட்டர் ஒட்டநேரி. இன்று விநாயகபுரம் என அழைக்கப்படுகிறது.

அந்தப் பெயர் வரக் காரணமாக இருக்கும் விநாயகர் கோவில் முன் போய் இறங்கினோம். அப்போதிலிருந்து நவக்கிரகக் கோட்டையைத் தரிசித்து விட்டுத் திரும்பும்வரை எங்கள் பிரமிப்பு நீங்கவில்லை. இங்கு எத்தனை விசேஷமான செய்திகள்! சென்னைக்கு அருகில் இப்படி ஓர் இடமா? பிரமிப்பு மாறாமல் அசந்து போனோம்.



* மூலவர்

விநாயகர் கோயில் முன் மண்டபம் தாண்டி கருவறை.

அங்கு விநாயகர் தான் தோன்றி விநாயகராகக் காட்சி தருகிறார். ஸ்ரீ வரசித்தி விநாயகர் என்பது திருநாமம். அருகிலிருக்கும் பெரிய மரத்தின் அடியில் தானே உருவான விநாயகரை சுமார் நாற்பது வருடங்களுக்கு முன் இங்கு எடுத்து வந்து பிரதிஷ்டை செய்து கோயில் கட்டியிருக்கிறார்கள். மூலவர் மிகவும் விசேஷம். விநாயகரின் தும்பிக்கை, நாகத்தினைப் போன்ற முக அமைப்பு, லிங்கத்தினைப் போன்ற மொத்த வடிவம் என மூன்று விதமாகக் காட்சி தருவதால் சுயம்புவின் இருபுறமும் ராகு கேதுவை பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். மேலே விநாயகர் மூர்த்தம் பிரதிஷ்டை.

கேட்ட வரம் தரும் விநாயகராக இந்த ஊரில் எல்லோருக்கும் அருள் பாலித்து வந்திருக்கிறாராம் இந்த ஓம்கார வடிவினர். அதனால்தான் இந்த ஊரிலிருந்து பெங்களூருக்குச் சென்ற வேலு



* வேலு முதலியார் தம்பதி



• நவக்கிரகக் கோட்டை

முதலியாருக்குத் தொட்டதெல்லாம் பொன்னானது. தோட்டக்கலை, மரம் வளர்ப்பு வியாபாரத்தில் கொழிக்க ஆரம்பித்தார். தன் கண்கண்ட விநாயகருக்கு நன்றிக் கடன் செலுத்த வேண்டி 'புல்லில் சம்பாதிப்பது பிள்ளையாருக்கு' என இன்று வரை அந்த வகையில் வருகின்ற பணத்தையெல்லாம் இக்கோயிலின் மேம்பாட்டிற்காகவே செலவழித்து வருகிறார். கருவறையைச் சுற்றி தட்சிணா மூர்த்தியும், முருகனும், துர்க்கையும் அத்தனை திருத்தம், நவக்கிரகங்கள் எழிலுடன். பூஜை செய்யும் ரமேஷ், விஜயன் அர்ச்சகர்களுக்கு அனைத்து வசதிகளையும் வேலு முதலியார் செய்து தந்திருப்பதால் அத்தனை ஆர்வத்துடன் அலங்காரம் முதல் அர்ச்சனை வரை சிறப் பாகச் செய்கிறார்கள்.

நமக்கு இவற்றையெல்லாம் விளக்குவதற்காகவே வேலூர் ஜலகண்டேஸ்வரர் தலைமை குருக்கள் திரு. சத்தியநாத சிவாச்சார்யாரையும், அமர்நாத்தையும் அழைத்து வந்திருந்தார் கணேசன். ஒவ்வொரு இடத்தையும் சுற்றிக் காட்டி அதன் மகிமைகளைத் திருத்தமாகச் சொன்னார் சத்தியநாதன்.

கோயிலை ஒட்டி தன் பெற்றோர் கோவிந்தஸ்வாமி - தனம்மாள் பெயரில் ஒரு பெரிய விருந்தினர் விடுதியைக் கட்டி இருக்கிறார் வேலு முதலியார். அங்கு யாத்ரீகர்கள் வந்து தங்கி கோயிலில் தங்கள் பிரார்த்தனையைச் செலுத்திச் செல்லலாம். தங்கும் இடம், சாப்பாடு அத்தனையும் இலவசம். இடமோ படுசுத்தம். ஊரிலிருந்து இருபத்தைந்து பெண்களைத் தேர்ந்தெடுத்துப் பராமரிக்கும் பணிகளை அவர்களிடம் தந்திருப்பதுடன், பக்திப் பாடல்களை அவர்கள் பாடவும் அவரே சொல்லிக் கொடுத்திருக்கிறார். கணேச ஸ்லோகங்களை அந்தக் கிராமப் பெண்கள் அவ்வளவு திருத்தமாகச் சொல்லி ஓம்காரத்துடன் முடிக்கிறார்கள்! விருந்தினர் விடுதியில் தங்கிச் செல்ல விரும்புபவர்கள் ஒருநாள் முன்னதாகச் சொன்னால் சாப்பாடு தயாரிக்க வசதி யாக இருக்கும் என்கிறார் சத்திய நாதன்.

பிறகு கோயிலை அடுத்துள்ள நவக்



• சனீஸ்வரனுக்கு எதிரே விநாயகர்

கிரகக் கோட்டைக்குப் போனோம். கோட்டையைப் போன்ற அமைப்பினுள் நவக்கிரக சந்நிதிகள் நடுவில் அமைந்திருக்கும். சூரியன் சந்நிதியின் அருகில் நின்று கொண்டு அர்ச்சகர் ரமேஷ் விவரித்தார்.

"நவக்கிரகங்கள் இன்று உலகை ஆளுகின்றன எனச் சொல்லலாம். ஒவ்வொரு மனிதனும் பிறந்தவுடனே அவனுடைய வாழ்க்கை நவக்கிரகங்களினால் நிர்ணயிக்கப்பட்டு விடுகிறது. எத்தனை திறமை இருந்தாலும் சாதாரணமாக இருப்பவனும் இருக்கிறான். ஒன்றுமே இல்லாமல் பிரமாதமாக வந்துவிடுபவனும் உண்டு. இதெல்லாம் நவக்கிரகங்களினால் ஏற்படுவை.



• பிரார்த்தனை பாடல்கள் பாடும் பெண்கள்



• ஒன்பது கிரகங்களின் கோயில்கள்

அதனால்தான் உலக மக்களுக்கு ஆதாரமாக இருக்கும் நவக்கிரகங்களுக்கு இங்கே சந்நிதிகளை அமைச்சிருக்கார் வேலு முதலியார். இங்க இருக்கிறது போல வேறு எந்த இடத்திலேயும் இல்லைன்னு சொல்லலாம். ஒவ்வொரு கிரகத்திற்கும் வர்ணம், மனைவி, வாகனம், தானியங்கள், குறியீடு, விருட்சம் உண்டு. அந்த வகையிலே அந்தந்த கிரகத்திற்குரிய வர்ணம், மனைவி, வாகனம், மிருகம், மரம் என அனைத்தையும் கொண்ட சந்நிதி உலகத்திலே வேற எங்கேயும் கிடையாது. இங்கே மேலே பார்க்கிற ஒவ்வொரு கிரகத்தினுடைய கோபுர வடிவிலும் முழுக்க முழுக்க அந்த கிரகத்தினுடைய தானியங்கள் நிரப்பப்பட்டு இருக்கு.

உதாரணத்துக்கு சூரியன்னா மனைவிகள் உஷா, சாயா. நிறம் சிவப்பு, வாகனம் ரதம். சாரதி - அருணன், தான்யம் - கோதுமை மேலே முழுமையாக நிரப்பப்பட்டுள்ளது. சமித்து - எருக்கு - ரத்னம் - மாணிக்கம். (மூலவருக்குக் கீழே வைக்கப்பட்டுள்ளது.) வஸ்திரம் - செம்பட்டு- திசை - கிழக்கு. இப்படி ஒன்று விடாமல் அனைத்துச் சிறப்புக்களுடனும் இந்த சந்நிதி அமைக்கப்பட்டுள்ளது. அதே போல சந்நிதி சுவர்களில் இவருக்குண்டான அட்சரம், மிருகம் இவையும் உள்ளன. இப்படி ஒன்பது கிரகங்களுக்கும் அமைந்துள்ளன. எனவே இக் கோயிலின் மகிமையைப் போல வேறெங்குமே காண முடியாது"

என்றவர் ஒவ்வொரு கிரகத்தின் சந்நிதியிலும் காயத்ரி சொல்லி கற்பூர ஆராதனை செய்கிறார். சனீஸ்வரன் சந்நிதிக்கு வந்ததும் நம்மை மறந்து 'ஆஹா' என்கிறோம். காரணம் சந்நிதிக்கு நேரெதிரே சிறிய குன்று போன்ற வடிவின் மேலே விநாயகரின் அழகிய திருவுருவம் அதற்கும் மேலிருந்து விநாயகரின் மேல் அருவி போல நீர் கொட்டிக் கொண்டே இருக்கிறது. விநாயகர் சனீஸ்வரரைப் பார்த்துக்



• சூரியன்



• சுக்கிரன்



• சந்திரன்



• செவ்வாய்





• ராகு

ஸ்வாமிகளுக்கும், ஸ்ரீ விஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகளுக்கும் தனித்தனி குடில்களை அமைத்திருக்கிறார். சுவாமிகள் இருவரும் இந்தப் பக்கம் விஜயம் செய்யும் போது இங்கு வருவார்களாம். தென்னைகளாகக் காய்த்துக் கிடக்கின்றன. குளிர்ச்சியான சோலையும், 'மெத்'தென புல் வரிசையுமாக 'நாம் எங்கே இருக்கிறோம்' என நம்மைத் தடுமாற வைக்கிறது. கிராமப் பெண்கள் புல் தரைக்கு நீர் விட்டுக் கொண்டிருக்கும் காட்சியில்தான் 'அடடா, நாம் இருப்பது ஒட்டநேரி' என நினைவு வருகிறது. இந்த மாபெரும் தோட்டத்தில் தன் தாயார் தனம்மாளின் சமாதியை அமைத்து அதனை பவித்ரமாக பராமரித்து வரவும் செய்திருக்கிறார் வேலு முதலியார்.

இப்படி பல சிறப்புக்களுடன் இந்தக் கொண்டிருப்பதால் இங்கு வரும் பக்தர்களுக்கு சனி பகவானால் தொல்லையே இல்லையாம். இப்படியாக என் திசைகளில் ஒன்பது கிரகங்களையும் ஒருவித குறைவுமின்றி மிகவும் அழகாக அமைத்து அனைத்துச் சிறப்புக்களுடனும் நவக்கிரகங்களை வீற்றிருக்கச் செய்திருக்கிறார்.

அதனையடுத்து மிகப் பரந்த தோட்டம். பெங்களூரின் மிக அரிய செடிகளை யெல்லாம் அங்கு கொணர்ந்து வைத்து அற்புதமாகப் பராமரித்து வருகிறார். 'தண்'ணென்ற அமைதியான சூழ்நிலை. இங்கு ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி



• சனீஸ்வரர்



• கேது

• வியாழன்





கோயில் விளங்கி வருகிறது. தான் தோன்றி சுயம்புவாக அங்கு எழுந்தருளியிருக்கும் விநாயகரின் திருவிளையாடலாகவே இவையனைத்தும் நடக்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். மிகவும் 'வரப்ரசாதி'யாக இவர் விளங்குவதால் நாளுக்கு நாள் இங்கு வரும் பக்தர்களின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டே வருகிறது.

— மஞ்சுளா ரமேஷ்,

படங்கள்: ஜி. சுரேஷ்

• புதன்



1

# அழகோடு ஆரோக்கியமும் தரும் கலை!

எத்தனை முறை எழுதினாலும் படித்தாலும் பெண்களுடைய தீராத பிரச்சனை- முடி உதிர்தல்.

''என் கூந்தல் ரொம்ப அடர்த்தியாக இருக்கும். ஆனால் ஏனோ இப்போ ரொம்பவும் கொட்டியே போய் விட்டது''- என அலுத்துக் கொள்ளும் பெண்கள் நிறைய பேர் உள்ளார்கள் முடி உதிர்வு என்பதே பெரும்பாலும் சத்துக்குறைவினால் வருவதுதான். இதற்கு தனிப்பட்ட சிகிச்சைகள் தரப்படும். வைட்டமின் கால்ஷியம், இரும்புச் சத்து போன்ற சத்துக்கள் சேர்க்கப்பட்ட fortified எண்ணெயினால் மஸாஜ் செய்கிறோம். மஸாஜ் செய்வதற்கு சில நவீன கருவிகளைப் பயன்படுத்தி, அதன் பின் முடிக்கு ozone treatment அளித்து pack தடவப்படுகிறது. Fortified oil எனப்படும் இந்த எண்ணெயை வாங்கி தடவி முடி உதிருவதிலிருந்து மீளலாம்.

Spirulina என்ற sea-weed ஆல் செய்யப்படும் pack முடிக்கு மிகுந்த அளவில் சத்தினை அளிக்கிறது. இதில் நிறைய புரதச்சத்து இருப்பதால் முடிக்கு நல்ல பலத்தினை அளிக்க முடிகிறது. இதனால் பொடுகுத் தொல்லையும் நீங்கி, இளநரை வராமல் தடுக்க முடிகிறது. இந்த சிகிச்சையை வாரம் ஒருமுறை அல்ல 10 நாட்களுக்கு ஒருமுறை செய்யலாம்.

சத்துக் குறைவதால்



2

3





4



5

7

பாதிக்கப்படுபவைகளில் அடுத்து வருவது கைகால் நகங்கள். நிறைய பேர் கைகளையும் கால்களையும் சரிவர கவ னிப்பதேயில்லை. சிலருக்கு நகங்களில் குழியிருக்கும். வேறு சிலருக்கு வெள் புள்ளிகள், கோடுகள் விழுந்திருக்கும். நகச்சுத்திகளும் சிலருக்கு வேதனை அளிக்கும். நகத்தைக் கடிக்கும் பழக்கம் உள்ளவர் களின் நகத்தின் அழகு குன்றி காட்சியளிக்கும். நகத்தின் அழகு கெட முக்கிய காரணம் உணவில் சத்துக்குறைவு. மேலும் மிகவும் ஸ்ட்ராங்கான டிடர்ஜெண்ட்(சோப்பு) உபயோகிப்பதனால்தான்.

இதனை சரி செய்ய பார்லர்களில் மெனிக்யூர், மற்றும் பெடிக்யூர் செய்து கொள்ளலாம். மெனிக்யூர் செய்வதனால் கை நகங்கள் மட்டுமில்லாமல் கைகள் முழுவதுமே அழகு பெறும், நவீன முறையில் நகங்களை 'file' செய்து, சுத்திகரித்து, ஆலிவ் எண்ணெயில் நகங்களை நனைத்து, கைகளுக்கு pack தடவி என்று பலவகை செய்முறைகள் இந்த மெனிக் யூரில் உள்ளன. இதனால் கைகள் பூரண அழகு பெற முடிகிறது. இதேபோல கால்களுக்கு பெடிக்யூர் செய்யப்படுகிறது. இதற்கும் பலவிதமாக சிகிச்சைகள் செய்து, கால்கள் மற்றும் கால் நகங்களின் அழகை மேம்படுத்துகிறோம்.

மெனிக்யூர், பெடிக்யூர்- இவைகள் அழகை மட்டுமில்லாமல், ஆரோக்கியமும் தரவல்லது. கை, கால்களில் மஸாஜ் செய்யும் போது குறிப்பிட்ட புள்ளிகளில் அழுத்தம் தரப்படுவதால் சக்தி உடல் முழுவதும் பரவுவதுடன், பலவித நோய்களையும் தவிர்க்கலாம். இதற்குப் பெயர்தான் reflexology. உடலுக்கும் மனதுக்கும் நல்ல ஓய்வு தரும் இந்த முறையினால் மன அமைதியும் கிடைக்கிறது. Stress-ஐ அகற்றும் சிகிச்சை இந்த பெடிக்யூரி என்றும் சொல்லலாம்.

6

இந்தக் காலத்தில் பெண்களுக்கு ஏற்படும் மற்றுமொரு உபாதை "Harmonal imbalance" மற்றும் அதனால் வளரும் வேண்டாத ரோமங்களும். இந்த ரோமங்களை Waxing மூலமாகவும் hair epilators மூலமாகவும் எடுத்து கை, கால்களை அழகுறச் செய்து கொள்ளலாம்" என்கிறார் சன் டி.வி.யில் பல நிகழ்ச்சிகளை நடத்துவதன் மூலம் புகழ்பெற்றவரும், அழகுக் கலை வல்லுநருமான **திருமதி வசுந்தரா**. இவர் 'தி விஸ்பின் டிஃபெரன்ஸ்' என்ற பெயரில் தி. நகர் வித்யோதயா எதிரில் பார்லர் (தொ. 8254079) வைத்திருக்கிறார்.



8



வழக்கமாக பார்க், மணமக்கள் ஊர்வலம், திருமண செட், சிறு மலைக் குன்றுகள் இவைதானே கொலுவில் இடம் பெறும். இந்த தடவை அமையுங்களேன் 'தூத்துக்குடி சந்தை'. வீட்டில் உள்ள பொருள்களே போதுமானது.

1. குல்பி சாப்பிட்ட சின்னச் சின்ன மண்பானைகள் 6,7 அடுக்கி (தேவையானால் காவி பூசுங்கள்) வைத்தால் பானைக் கடை.



2. சிறிய தட்டுகளில் வண்ண வண்ண கலர்ப்பொடியை கும்பலாக வையுங்கள். குங்கமக் கடை.

3. பழைய துணிகளை நீளவாக்கில் 2 இன்ச் அகலத்தில் 6, 7 செ.மீ நீளமாக வெட்டி ஒரு கம்பியில் ஒரு முனையைக் கட்டித் தொங்க விடுங்கள். துணிக்கடை.

4. வீட்டில் உள்ள சிறிய வளையல்கள் மணி மாலைகள், ஸ்டிக்கர் என சிறிய ட்ரேயில் வையுங்கள். வளையல் கடை.

5. குழந்தைகள் விளையாடும் சின்னச் சின்ன சாமான்களை நேர்த்தியாக அடுக்கினால் பாத்திரக் கடை.

6. வீட்டில் உள்ள தானிய வகைகளை ஒரு சிறிய கப்பில், கோபுர குவியல் போல் வைத்தால் மளிகைக்கடை.

# கொலுசந்தை



7. மெழுகினால் விற்கும் பழ, காய்கறி பொம்மைகளை அழகாக, சின்ன தட்டில் வைத்தால் பழக்கடை + காய்கறிக் கடை.



8. பூக் கடைக்கு மட்டும் அன்றன்று புதிய பூக்களை மாற்றி வைக்கலாம்.

9. மீன் கடை இல்லாமல் சந்தையா? மெல்லிய அட்டைகளை மீன் ஷேப்பில் வெட்டி, விதவிதமான வர்ணம் கொண்டு மீன் டிசைன் போடுங்கள். அட்டையில் சிறிய துளையிட்டு, நூலில் கோர்த்துத் தொங்க விடலாம்.

10. களி மண்ணால் பட்சண வகைகள் (லட்டு, முறுக்கு போன்று செய்து) பெயிண்ட் பண்ணினால் பலகாரக் கடை.

11. இரண்டு சிறிய குல்பி மண் பானையில் நீர் விட்டு, கொஞ்சம் அரிசி மாவைக் கரைத்தால் நீர் மோர்க் கடை ரெடி.

ஒவ்வொரு கடைக்கும் வியாபாரம் செய்ய பெண் அல்லது ஆண் பொம்மைகள். சந்தையின் முன்பும் பின்பும் தீப்பெட்டியின் அடிப்பாகம் கொண்டு மாட்டு வண்டி, பெண்கள், குழந்தை, ஆண் என வாங்கும் பொம்மைகள். கொலு சந்தை ரெடி.



— மஹிமா



# விரைவில் உயர்வடைய வைக்கும் ஸ்போர்ட்ஸ்



முன்பெல்லாம் 'படிப்பு' என்பார்கள். இப்போது விளையாட்டை பெற்றோர்கள் அங்கீகரிக்கிறார்களா....

வெகு காலத்திற்கு முன்பு பெற்றோர் செய்யும் தொழிலையே குழந்தைகள் செய்து வந்தார்கள். அது குலத் தொழில் என அழைக்கப்பட்டது. பின்பு காலங்கள் உருள பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளுக்குக் கல்வி அறிவு தரத் தொடங்கினார்கள். இந்தியப் பெருந்தலைவர்கள் வக்கீல்களாகவும், டாக்டர்களாகவும், இஞ்சினியர்களாகவும் இருந்தது கண்டு தங்கள் குழந்தைகளும் அவ்வாறே வர வேண்டும் என் எண்ணி, அதற்காக குழந்தைகளின் படிப்பில் அதிக கவனம் செலுத்த ஆரம்பித்தார்கள்.

அந்த சமயத்தில் விளையாட்டுப் பந்தயங்களில் கலந்து கொள்ளும் குழந்தைகள் படிப்பில் சற்று பின் தங்கியவர்கள் என்றும் அவர்கள்தான் விளையாட்டிற்குச் சரி என்ற எண்ணம் பரவிக் கிடந்தது. முன்பு பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் ஆசிரியர்கள் குழந்தைகளைப் பார்த்து "நீ படித்து என்னவாக ஆக ஆசைப்படுகிறாய்?" என்ற கேள்விக்கு, டாக்டர், இஞ்சினியர், வக்கீல் என்ற பதிலே சொல்லப்பட்டு வந்தது.

ஆனால் கடந்த 10 வருடங்களில் பல துறைகளில் குழந்தைகளின் எதிர்காலத்தை, தங்களைவிட சிறப்பாக அமைத்துத் தர பெற்றோர்கள் செய்யும் முயற்சிகள் பிரமிக்கத்தக்கவை. இதை இந்நூற்றாண்டின் இளம் சமுதாயத்தினரின் வாழ்வில் ஒரு மறுமலர்ச்சி அல்லது புரட்சி என்றே கூறலாம். வக்கீலின் குழந்தை கம்ப்யூட்டர் இஞ்சினியராயும், விவசாயியின் குழந்தை ஐ.ஏ.எஸ் ஆபீசராயும், டாக்டரின் குழந்தை கல்லூரிப் பேராசிரியாகவும், அன்றாடம் கூலி பெறும் எளிய தொழிலாளி















யின் குழந்தை விஞ்ஞானியாகவும், ஸ்கூல் டீச்சரின் குழந்தை பைலட்டாகவும், மற்றும் இவர்கள் அனைவரின் குழந்தைகளும் சிறந்த விளையாட்டு வீரர்களாகவும் இன்று ஆகியுள்ளது நம் கண்கள் முன்பே நடக்கும் ஒரு மாபெரும் வித்தியாசம். அதைவிட ஆச்சரியம் இந்நாளின் விளையாட்டு வீரர் கள் படிப்பிலும் மிகவும் கெட்டிக் காரர்களாக விளங்குகிறார்கள்.

தற்போது பெற்றோர்கள் தங்கள் குழந்தைகளின் உடல் நலத்தில் விஞ்ஞான பூர்வமாக ஆர்வம் செலுத்த ஆரம்பித்துள்ளனர். படிப்போடு விளையாட்டும் ஒரு அங்க மாக வேண்டும் என்ற ஆவல் பெற்றோர் மத்தியில் மிகவும் அதிகரித்துள்ளது. விளையாட்டை அங்கீகரிப்பதால் தங்கள் குழந்தைகளின் வாழ்க்கை பலவிதங்களில் பயனுள்ளதாக அமையும் என உணரத் தொடங்கி யுள்ளார்கள். இதன் விளைவாக பெற்றோர் களில் பலரும் தங்கள் குழந்தைகளை ஸ்போர்ட்ஸில் கலந்து கொள்ளுமாறு அதற்கான எல்லாவித உதவிகளையும் செய்து குழந்தைகளை உற்சாகப் படுத்த ஆரம்பித்துள்ளனர்.



நம் நாட்டைப் பொறுத்தவரை, குழந்தைகள் படித்து முடித்து பெரியவர்களாகி வேலைக்குச் செல்லும் சமயங்களில், தாங்கள் மற்றும் தங்கள் பெற்றோர்கள் விரும்பி யபடி, தங்கள் கனவு கண்டதுபோல, வேண்டிப் படித்த படிப்பிற்கேற்ப வேலைக்குச் செல்கின்றவர்கள் 10% (பத்து சதவீதத்தினர்) மட்டும்தான். மீதமுள்ள 90% குழந்தைகள், படிப்பு முடிந்தவுடன் கட்டாயத்தின் பேரில் வேறு வழியில்லாமல் கிடைக்கும் வேலையில் சேர்ந்து தங்கள் வாழ் வின் மறுபாதியை கடக்க வைக்கப் படு கின்றார்கள். ஆனால் படித்துக் கொண்டே விளையாட்டுப் போட்டிகளில் பங்கு பெறும் குழந்தைகள் அவர்களின் விளையாட்டுத் தகுதிகளுக்கு ஏற்ப, (உதாரணமாக: பல்கலைக் கழக அளவில், மாநில அளவில், தேசிய அளவில், ஆசிய அளவில் மற்றும் உலக அளவில்) நல்ல வேலைகளை, அழைப்பின் பேரில் தேர்ந்தெடுக்கவும் வாய்ப்பு உள்ளது. விளையாட்டோடு படிப்புத் தகுதியும் சிறப்பாக இருக்கும் பட்சத்தில் மிக உயர்ந்த



உத்தியோகம் அவர்களுக்காகக் காத்திருக்கிறது.

உத்தியோகத்தில் சேர்ந்த பிறகு, அடுத்த பதவி உயர்வுக்காக 5 அல்லது 10 ஆண்டுகள் காத்துக் கிடக்கும் மற்றவர்கள் நிலையில் இருந்து விளையாட்டு வீரர்கள் மாறு படுகிறார்கள். ஒவ்வொரு போட்டியிலும் வெற்றி பெறும் போதும் சம்பள உயர்வு, மற் றும் பதவி உயர்வு என்று வேலை செய்யும் இடத்தில் முன்னேற்றமும் அதுமட்டுமல்லாது அரசாங்கத்தின் சார் பாகவும், பிரபல கம் பெனிகளின் சார் பாகவும் விளை யாட்டு வீரர்களை ஊக்குவிக்க வீட்டு மனைகளும், கார்கள், இது போன்ற





விலையுயர்ந்த பரிசுப் பொருள்களும், பல லட்சங்கள் என அளித்து விளையாட்டு வீரர்கள் கௌரவப்படுத்தப் படுகிறார்கள்.

முன்பு விளையாட்டை, விளையாட்டுப் போட்டிகளை நல் உறவுக்காகவும், உடற்பயிற்சிக்காக மட்டுமே என்றிருந்த காலம் மாறி, ஸ்போர்ட்ஸ் இப்போது ஒரு முழு நேர தொழிலாக மாறியுள்ளது. தங்கள் இளம் வயதினிலேயே விளையாட்டு வீரர்கள், பத்து ஆண்டுகளுக்குள்ளாக தங்களின் இரண்டு, மூன்று தலை முறையினருக்கான பணத்தைச் சேர்த்து விடும் நிலை இன்று வந்துள்ளது. டென்னிஸ், கால்ஃப், கால்பந்து, கிரிக்கெட், பாக்ஸிங், ஓட்டப் பந்தயம், பில்லியார்ட்ஸ், செஸ் என இது போன்ற விளையாட்டுகளில் ஈடுபடும் இக்கால இளைஞர்கள் கோடிக்கணக்காக சம்பாதிப்பதை நாம் கண்டு கொண்டிருக்கிறோம்.

விளையாட்டு முழு நேர தொழிலாக மாறிய காரணத்தினால், முன்பு ஒரு ஆண்டிற்கு இரண்டு அல்லது மூன்று போட்டிகள் என்றிருந்த காலம் போய், எல்லா விளையாட்டிலும் வருடம் முழுவதும் போட்டிகள் நடந்து கொண்டே இருக்கின்றன. இதன் காரணமாக விளையாட்டு வீரர்கள் தங்கள் நாட்டிலும், உலகின் பல இடங்களுக்கும் சென்று போட்டிகளில் கலந்து, பரிசுகளை வென்று, புகழும் அடைந்து, உலகினையும் கண்டு களித்து பிறவிப் பயனை அடை கிறார்கள். விளையாட்டு வீரர்கள் போகு மிடங்களில் எல்லாம் மாலைகளும், மலர் விரிப்பும் வரவேற்பும், மரியாதையும், மக்களின் அமோக ஆதரவும், அன்பும் அவர்கள் விளையாட்டுத் திறமைக்கும் அதன் பின் உள்ள கடின உழைப்புக்கும் தரப்படுகிறது. இதை ஆள் பலம் கொண்டோ, பதவி பலம் கொண்டோ, பண பலம் கொண்டோ ஒரு பொழுதும் பெற முடியாது.

தான் பெற்ற குழந்தையின் படமும், பெயரும் அடிக்கடி பத்திரிகைகளில் பிரசுரமாவதும், அவர்கள் விளையாடுவதை சுற்றமும் நட்பும் சூழ டி.வி.யில் காண்பதும் மற்றும் பரிசுகளும், புகழும் பணமும் குவிவதையும் பற்றி எந்தப் பெற்றோர்தான் மகிழ்ந்து பெருமைப்படாமல் இருக்கப் போகிறார்கள். எனவே படி, படி என்று சொல்லிக் கொண்டிருந்த பெற்றோர்கள், தங்கள் குழந்தைகள் விளையாட்டுத் துறையிலும் சிறந்து விளங்கினால் அவர்கள் எதிர்காலத்திற்கு நல்லது என்பதை உணர்ந்து, தங்களின் கவனத்தை ஸ்போர்ட்ஸின் மீது திருப்பி இருப்பது ஒன்றும் ஆச்சரியப்பட வேண்டிய விஷயம் இல்லை!

— உமா நாகராஜன்



**காய்கறி சாப்பிடாத குழந்தைகளுக்கு...**

காலையில் செய்யும் சமையலிலிருந்து பொறியல், பருப்பு, இரண்டு கரண்டி சாதம் ஆகியவற்றைக் கலந்து 'போண்டோ'' அளவு உருண்டை செய்து வைத்துக் கொள்ளுவேன். ரொட்டி ஸ்லைஸை தண்ணீரில் நினைத்து பிழிந்து விட்டு அதற்குள் இந்த உருண்டையை வைத்து மூடி நீள வாக்கில் உருட்டிப் பிடித்து எண்ணெயில் பொறித்து ''ப்ரட் ரோல்ஸ்'' என்று வைத்து விடுவேன்.

— விசாலாட்சி



**குழந்தையின் மத்தியான டிபன்பாக்ஸில்...**

சில நாட்களில் ''கார்ன் ப்ளேக்ஸை மிக்ஸியில் பொடித்து அதில் இந்தக் காய்கறி உருண்டை களை உருட்டி எடுத்து சிறிது வடை போல் தட்டி தோசைக்கல்லில் போட்டு கொஞ்சமாக எண்ணை ஊற்றி பொன்னிறமாக வேக வைத்துக் கொடுப்பேன்.

— விசாலாட்சி



# "இணைந்து செயல்பட்டோம். இன்னலுக்கு தீர்வு கண்டோம்."

**உங்கள் அனுபவத்தைச் சொல்லுங்கள்**
**பரிசுகளை வெல்லுங்கள்!**

## ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு

யாருமே தனித்து வாழ முடியாது. மற்றவர்களுடன் பகிர்ந்து கொள்ளும் போதுதான் எந்தவொரு பிரச்சினைக்கும் தீர்வுகாண வழிகிடைக்கிறது. வர்க்கம், சாதி, மதம் என்கிறபேதங்கள் சமூகத்தைப் 'பிளவுபடுத்த முயலும் இன்றைய சூழ்நிலையில், அவற்றைக் கடந்து அடுத்தவர் வாழ்வில் அக்கறை செலுத்துவதும் அவர்களுக்கு உதவுவதும் அரிதாகிவிட்ட விஷயங்கள். எனினும், உறவுகள் மூலமாகத்தான் சமூக மாற்றங்கள் ஏற்படுகின்றன என்பதை மறுக்க முடியாது.

உங்கள் வாழ்க்கையில் இத்தகைய அனுபவம் ஏற்பட்டிருக்கிறதா? கல்லூரி வாழ்க்கையில், அலுவலகத்தில், அல்லது நீங்கள் வாழும் வட்டாரத்தில்... எங்கேவேண்டுமானாலும் நிகழ்ந்திருக்கலாம். பலரும் ஒன்று சேர்ந்து உங்கள் பிரச்சினைக்குத் தீர்வுகண்டு உங்கள் வாழ்க்கையை மலரச் செய்திருக்கிறார்களா?

அத்தகைய மறக்க முடியாத அனுபவத்தை சுவையான கட்டுரையாக எங்களுக்கு எழுதி அனுப்புங்கள். சிறந்த கட்டுரைகளுக்குப் பரிசுகள் உண்டு. இக்கட்டுரைகள் பின்னர் சிறுபுத்தகமாகத் தொகுக்கப்படவுள்ளன. இன்றே எழுதி அனுப்புங்கள். பரிசுகளை வெல்லுங்கள். அனைவரும் இப்போட்டியில் பங்கேற்கலாம்.

**1-ம் பரிசு** (ஒரு நபருக்கு)
ரூ. 25,000 மதிப்புள்ள தங்க நகைகள்

**2-ம் பரிசு** (இரண்டு நபருக்கு)
ரூ. 5,000 மதிப்புள்ள தங்க நகைகள்

**3-ம் பரிசு** (மூன்று நபருக்கு)
ரூ. 2,500 மதிப்புள்ள தங்க நகைகள்

**100 ஆறுதல் பரிசுகள்**
4-கிராம் மதிப்புள்ள வெள்ளி நாணயங்கள்



கட்டுரைகள் வந்து சேர வேண்டிய கடைசி நாள் அக்டோபர் 15, 1997

கட்டுரைகள் அனுப்ப வேண்டிய முகவரி :

**Ram Kaashyap Chits**
ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தீர்வு
Member Ram Kaashyap Group
14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017.
போன் : 4341513, 4330034

Insight-3798/97

நம்பிக்கை பொருளாதார சுதந்திரத்திற்கு அமைத்திடும் பாதை

வீட்டுக்குள் தோட்டம்...

# கொலுவில் சில ஸ்பெஷல் எஃபெக்ட்ஸ்

-தண்மதி திருவேங்கடம்..

**இந்த வருஷ நவராத்திரி கொலுவுல உங்க கார்டனிங் திறமையைக்காட்டி எல்லாருடைய கண்ணையும் கருத்தையும் கவர :**

● வழக்கமா கொலுல பார்க் அல்லது மலை செஞ்சு அதுல செடிகள் வளர்ந்து நிக்கறா மாதிரி செய்வீங்க. இந்த முறை இதை ட்ரை பண்ணிப் பாருங்க -

அகலமான பிளாஸ்டிக் தட்டு எடுத்து அதுல மண்ணை பரப்பி வைங்க. நடுவுல விரலால நட்சத்திரம் டிஸைன் வரைஞ்சு அதைச் சுத்தி மட்டும் வெளிப்பக்கம் விதை விதைங்க. வழக்கம் போல தண்ணி தெளிச்சு விதையை வளர விடுங்க. ஒரே உயரத்துல செடிகள் வளர்ந்து நிக்கும்போது நட்சத்திரடிசைன் துல்லியமாகத் தெரியும். நடுவுல உள்ள நட்சத்திர டிசைன்ல கோலம் போட்டு, பூ வைக்கலாம். இதே மாதிரி ஒன்பது விதமான தட்டுக்களில், ஒன்பது விதமான டிசைன்கள் - இதயம், வட்டம், சதுரம், மாங் காய், டைமண்ட் - இப்படி ரெடி பண்ணுங்க. தினம் ஒரு தட்டு வச்சு பாராட்டு வாங்குங்க.

இதுலயே இன்னொரு ட்விஸ்ட். உள்ளே மட்டும் விதைகள் போட்டு, வெளியே சும்மா விடுங்க. உங்க கற்பனை வளத்தைக் காட்டுங்க.

● பார்க் நடுவுல குளம் வருமே, அதுல ரோஜா அல்லது பட்டுரோஜா பூ ஒண்ணை நட்ட நடுநாயகமாக மிதக்க விடுங்க. தாமரை மாதிரி தோற்றமளிக்கும். பக்கத்தில் சின்னஞ்சிறு இலைகளை மிதக்க விடுங்கள். வட்டமாக இலைகள் கிடைத்தால் நல்லது. அல்லது கிடைக்கிற இலையை வட்டமாக வெட்டிக் கொள்ளுங்கள்.

● கள்ளிச் செடிகள் வளர்ப்பவரா நீங்கள்? இந்த முறை உங்கள் கொலுவில், மலைகள் உருவாக்கும்போது கொஞ்சம் வித்தியாசமா பண்ணலாமே. மண்ணைக் கொட்டி, அது மேல பெரிய பெரிய கூழாங்கற்களையும் கருங்கற்களையும் பதிச்சு ஒரு கரடு முர டான, வறண்ட மலைப்பகுதியை செட்டப் பண்ணுங்க. ஆங்காங்கே சின்ன உருண்டை கள்ளிச் செடிகளை நட்டு வையுங்க. தண்ணீர் தெளிக்காதீங்க. சிங்கம், புலி,



பொம்மைகளை நடுநடு வுல வையுங்க. ஒரு பயங்கரமான மலைப் பிரதேச லுக் கிடைக்கும்.

● இன்டோர் செடிகள் நிறைய இருந்தா கொலுப்படிகள் இரண்டு பக்கமும் அழகா அடுக்கி வையுங்க. செடிகள் சின்னத் தொட்டி கள்ல bushyயா இருந்தா நல்லா இருக்கும். தினமும் அரேன்ஜ்மண்ட்டை மாத்துங்க. வித்தி யாசமா இருக்கும்.

**இனி உங்கள் கேள்விகளுக்கு தோட்டக்கலை நிபுணர் தன்மதி திரு வேங்கடம் பதிலளிக்கிறார் :**

**? எங்க வீட்டுல ரோஜா பூக்கவே மாட் டேங்குது. செடி வாங்கினப்போ இரண்டு பூ விட்டதோட சரி. ஆனா செடி பாக்க நல்ல ஆரோக்கியமா கொப்பும் கிளையுமா இருக்கு. முட்டைத் தோல், சாம்பல்னு நிறைய போட றேன். ரோஜா பூக்க ஒரு வழி சொல்லுங் களேன்.**

! செடிகளுக்குத் தண்ணி ஊத்தினா மட்டும் போதாது. சத்தான உணவும் வேணும். இதுக்கு நாம எருவோ, உரமோ போடணும். முட்டைத் தோல் போடறதால செடிக்கு நல்ல உரம் கிடைக்குதுன்னு நினைக்கிறோம். ஆனா இது சரியில்லை. முட்டைத் தோலால் செடிக்கு அதிக நன்மை இல்லை. எல்லாரும் செய்யறாங் களேன்னு நாமும் அப்படிச் செய்யறோம். அறி வியல் பூர்வமா பாத்தா முட்டைத்தோல்ல கால் ஷியம் சத்து மட்டும்தான் இருக்கு. ஆனா செடி களுக்குத் தேவை தழை, மணி, சாம்பல் சத்துக் கள். (விளம்பரங்களில் கேட்டிருப்பீங்களே!) இந்த சத்துக்கள் கிடைச்சாத்தான், செடிகள் ஆரோக்கியமா வளர்ந்து, பூ விட்டு, காய் காய்க் கும்.

சாம்பல் போடறதால சாம்பல் சத்து கிடைக்குது: இது ஓ.கே. சாம்பல் சத்து செடி களுக்கு நோய் எதிர்ப்பு சக்தி மற்றும் வேர் களுக்கு நல்ல வளர்ச்சியைக் கொடுக்குது.

உங்க ரோஜா பூக்கணும்னா இந்தத் தழை, மணி, சாம்பல் சத்து சரியான விகிதத்துல வேணும். செயற்கை உரங்கள் நர்ஸரிகளில், உரம் பூச்சி மருந்துக் கடைகளில் நிறைய கிடைக்குது. வாங்கி உபயோகிங்க. ஆனா கெமிக்கல் உரங்கள்ல ஜாக்கிரதையா இருக்கணும். கொஞ்சம் அளவு அதிகமாப் போனா செடி க்ளோஸ். நீங்கள் கூட இயற்கை உரம் தயா ரிச்சுப் போடலாமே.

**? இயற்கை உரம் தயாரிப்பது எப்படி?**

! இயற்கை உரம் (Organic manure) என் றால் பெரிய அதிசயம் இல்லை. பெரிய பெரிய பாக்டரிகளில், ரசாயனங்கள் சேர்த்து விஞ் ஞான முறைப்படி தயாரிக்கப்படும் உரங்களை செயற்கை உரம்னு சொல்றோம். இயற்கையா கவே நமக்குக் கிடைக்கிற தாவர மற்றும் மிரு கங்களின் கழிவுகள்ல இருந்து கிடைக்கிற எருவை இயற்கை உரம்னு சொல்றோம்.

மாடு, ஆடு இதுங்களோட சாணம் நல்ல இயற்கை உரம்தான். சமையலுக்குக் காய்கறி அரிஞ்சிப்புறம் தூக்கிப் போடற தோல்கள், காம்புகள் அப்புறம் தோட்டத்துல கொட்டும் இலைச் சருகுகள், குச்சிகள் இவற்றைக் கொண் டும் நல்ல இயற்கை உரம் தயாரிக்கலாம்.

நீங்க உங்க வீட்டுலயே இயற்கை உரம் தயா ரிக்க இதோ எளிய வழி. உங்க தோட்டத்துல சின்னதா எருக்குழி ஒண்ணு தயார் பண்ணுங்க. ரொம்பப் பெரிசா இருக்கணும்னு அவசிய மில்லே. 1'' X 1'' X 1'' அளவுல இருந்தாக்கூட போதும். அல்லது பழைய உடைஞ்ச பக்கெட் எடுத்துக்குங்க. இதுல டெய்லி உங்க கிச்சன் வேஸ்டைக் கொட்டி வையுங்க. 10 அல்லது 20 நாளுக்கொருமுறை மண் போட்டு மூடி வாங்க. கொட்டி வைச்ச தோலெல்லாம் மண்ணுக்கடி யில புழுங்கி சீக்கிரம் மக்க ஆரம்பிச்சுடும். ரெண்டு மூணு மாசத்துக்கப்புறம் நல்ல இயற்கை உரம் ரெடி.... ஒரு கைப்பிடி எடுத்து எல்லாச் செடிகளுக்கும் போடுங்க, அப்புறம் பாருங்க ரிசல்டை! இப்ப கடைங்கள்ல கூட ரெடிமேட் இயற்கை உரம் பாக்கெட் விற்ப னைக்கு வந்து விட்டது. எஃபக்ட்டும் நல்லா இருக்கு!

**? நாங்க புது வீடு கட்டிக்கிட்டு வந்தப்ப வச்ச தென்னை மரம். இப்ப வருஷம் ஆறேழு ஆனப்புறமும் காய்க்க மாட்டேங் குது. மரம் மட்டும் உயரமா வளர்ந்து நிக்குது. காய்க்குமா, காய்க்குமான்னு அண்ணாந்து பாத்து சலிச்சு போச்சு. இதுக்கு என்ன மருந்து அடிக்கணும்?**

! தென்னை மரம் காய்க்காம இருக்க பல காரணங்கள் இருக்கு. நோய் வந்திருக்கலாம். பூச்சி அடிச்சிருக்கலாம். அல்லது மண்ல சத்துக் குறைவு ஏற்பட்டு இருக்கலாம். மரத்தைப் பாக் காம, முழுசா விவரம் தெரிஞ்சுக்காம மருந்து சொல்றதுங்கறது டாக்டர் பேஷண்டையே பாக்காம போன்லயே வைத்தியம் பாக்கறது மாதிரி ஆபத்தானது. உங்க மரம் பார்க்க எப்படி இருக்கு, பூச்சி அடிச்சிருக்கா, தென்னங்கீத்து காய்ஞ்சு போனா மாதிரி கலர் மாறி இருக்கா, ஒட்டைகள் நிறைய விழுந்து இருக்கா? இதெல் லாம் கொஞ்சம் தெளிவா எழுதி அனுப்பினீங் கன்னா சரியா மருந்து சொல்லலாம். மனசைத் தளர விடாதீங்க. தென்னைல வர்ற எல்லாப் பிரச்னைகளுக்கும் தீர்வு இருக்கு.

உங்களுக்குத் தெரியுமா? இந்தியாவில 10 மில்லியன் பேர் வருமானத்துக்கு தென்னையை நம்பி இருக்காங்க. 250 மில்லியன் ரூபாய் தென்னை மூலம் அந்நியச் செலாவணி நம்ம நாட்டுக்குக் கிடைக்குது. இந்தியாவுல தென்னை வளரும் பகுதிகள்னு பாத்தா 90% தென்னிந்தி யாவுலதான் இருக்கு. மணிலா, எள் இது இரண் டிலயும் இருப்பதை விடவும் அதிகமான என் ணெய்ச்சத்து தேங்காய்லதான் இருக்கு - 65%!

**மங்கையர்மலர் & ஜெய்மாஹி மேரேஜ் சர்வீஸஸ் இணைந்து வழங்கும்...**

வேலூரில் பரிசு கிடைத்த திருமதி ராமசேகர் வீட்டிற்கு ஜெய்மாஹி ஜெயராமன் மற்றும் அவரது உறவினர்களும், நாமும் சென்றிருந்தோம். மேரேஜ் சர்வீஸ் நடத்துபவர்களில் அதிக 'பிஸி'யாக இருப்பவர்களில் ஒருவராக இருந்தாலும்கூட ஒவ்வொரு முறையும் தானே வந்து பரிசளிக்க விரும்பும் ஜெயராமனின் (84/5. லேக்வியூ ரோடு, மேற்கு மாம்பலம், சென்னை - 33) தொ.4890222) ஆர்வம் போற்றத் தகுந்தது. வழக்கம் போல பழம், பூவுடன் ஒரு சவரன் தங்கக் காசினையும் வைத்து வழங்கினோம். சேகர் முன்பு விசிட்டரில் எழுதிக் கொண்டிருந்தவராம். இப்போது தன் மனைவி எழுதி பரிசு வாங்குவதில் ஏக மகிழ்ச்சி...



• ஜூலை மாதம் பரிசு பெற்ற மதுரையைச் சார்ந்த திருமதி. அழகம்மாள் முருகன் மற்றும் அவர் குடும்பத்தினர். உடன் ஜெயராமனின் சகோதரர் மற்றும் மதுரை மங்கையர்மலர் ஏஜெண்ட் ஸ்ரீநிவாஸன்.



• பரிசு கொடுப்பவர் : ஜெயராமன், உடன் வேலூர் மங்கையர்மலர் ஏஜெண்ட் கணேசன்.

# மறக்க முடியாத திருமணம்

**ஒரு சவரன் தங்கக்காக பரிசு பெற்ற கட்டுரை**

என் மாமா பையன் திருமணம் 20 ஆண்டுகளுக்கு முன் நடந்த போது நிகழ்ந்த சம்பவம் இது. மேற்கு மாம்பலத்தில் உள்ள சத்திரத்தில் திருமணம். நலங்கு நடை பெற்றுக் கொண்டிருந்தது. கேலியும் கும்மாளமுமாய் ஜாலியாய் நடந்து முடிந்தது நலங்கு. என் அம்மா திடீரென ஞாபகம் வந்து பார்த்தால் என் தங்கையைக் காணவில்லை. (வயது 4) கழுத்தில் செயின், காலில் கொலுசு, புதுப்பாவாடை வேறு! சத்திரம் முழுக்கத் தேடியும் காணவில்லை.

என் அம்மாவோ ஒரே அழுகை. அப்பா வரவில்லை. என் மாமா அம்மாவை சமாதானப்படுத்தி விட்டு வெளியில் சென்று பார்த்தார். தெருமுனையில் நரிக்குறவர்கள் கையில் என் தங்கை. மாமா போய்க் கேட்டார். அவர்கள் எல்லாம் சூழ்ந்து கொண்டு ஒரே கத்தல். "நூறு ரூபாய்க் கொடு... இல்லேன்னாத் தர முடியாது. குழந்தையை பஸ்காரன் அடிச்சிட்டு போயிருந்தா என்ன பண்ணுவே.. கால் செயின்.. கழுத்துச் செயினைத் திருடியிருந்தா என்னா பண்ணியிருப்பே.." என்று ஒரே கூச்சல்.

குழந்தையைத் தரவே முடியாது என்று கூறி விட்டனர். நூறு ரூபாய் என்பது 20 வருடங்களுக்கு முன் பெரிய விஷயம்! என் அம்மா.. மற்றும் மாமா எல்லோரும் போலீஸுக்குப் போவேன் என்றதும் பயந்து கொடுத்து விட்டனர். கையில் ஐந்து ரூபாய் கொடுத்து விட்டு குழந்தையை வாங்கி வந்து விட்டனர். அது முதல் வீட்டில் அனைவரும் குறத்தியிடம் வாங்கிய பெண் என என் தங்கையைக் கேலி செய்து வந்தோம். என் தங்கை உடனே அழ ஆரம்பிப்பாள்.

என் அம்மா எங்களை எல்லாம் திட்டுவார். ஆனால் எங்களை எல்லாரையும் அழ வைத்து விட்டு அவள் மறைந்து விட்டாள் 22 வயதிலேயே. முதல் குழந்தை பிறந்ததும் சிஸேரியன் ஆபரேஷனில் ஜன்னி கண்டு இறந்து விட்டாள். இனி யாரைக் கிண்டல் செய்ய? என் தங்கையை மறக்க முடியுமா?

— ராமா சேகர், வேலூர் - 6.

பொருள் : சுண்டல்

## முதல் பரிசு ரூ. 300/-

## த்ரிபலா சுண்டல்



*தேவையான பொருட்கள் :*

தரமான ராஜ்மா, சோயா பீன்ஸ், நல்ல வரகரிசி அல்லது கைக்குத்தல் அரிசி என்று மூன்று வகைகளிலும் தலா ஒரு கப்.

தேங்காய்ப் பூ - ½ கப்,
மிளகாய் வற்றல் - 4,
பச்சை மிளகாய் - 4,
கருவேப்பிலை - 1 கொத்து,
தனியா, கடலைப் பருப்பு - தலா 1 டீஸ்பூன்,
உப்பு - தேவையான அளவு,
ரீபைண்ட் ஆயில் - 50 கிராம்,
நெய் அல்லது தேங்காய் எண்ணெய் - 1 டீஸ்பூன்,
பெருங்காயப் பொடி - சிறிதளவு,
மாங்காய் துருவியது - 3 டீஸ்பூன் (அ) எலுமிச்சம் பழ ஜூஸ் - 2 டீஸ்பூன்.



• விமலா

இம்மாத



இவ்வசுதராசி



• லதா

*செய்முறை :*

ராஜ்மா, சோயாபீன்ஸ் அல்லது கொள்ளு இவ்வாறு உள்ள முழு தானிய வகைகளை சுமார் 8 மணி நேரம் வரை நீரில் ஊறவிடவும். சுண்டல் செய்யத் தொடங்குவதற்கு சுமார் 2 மணி நேரம் முன்பு வரகரிசியை சுத்தப்படுத்தி, அதைத் தனியே குளிர்ந்த நீரில் ஊறவிடவும். பிறகு இவை எல்லாவற்றையும் நன்கு கழுவிக் கொண்டு ஒன்றாகக் குக்கரில் 1½ பங்கு அளவில் நீர் + உப்பும் சேர்த்து நன்றாக தீயில் 4 விசில் வருமாறு வேகவிட்டு வடிபாத்திரத்தில் போட்டு வடிய விட்டு விடவும்.

அந்த நேரத்தில் வாணலியில் துளி எண்ணெய் விட்டு கருவேப்பிலை, தனியா, கடலைப் பருப்பு, கடைசியாகத் தேங்காய்த் துருவல், பெருங்காயப் பொடி சேர்த்து வறுத்து இதை மிக்ஸியில் நறநறப்பாகப் பொடித்து எடுத்து விடவும். எலுமிச்சம் பழ ஜூஸ் இல்லாதவர்கள் மாங்காய்த் துருவலையும் சேர்த்துப் பொடித்துக் கொள்ள வேண்டும்.

பிறகு அதே வாணலியில் மொத்த எண்ணெயை விட்டு முதலில் கடுகு தாளித்துக் கொண்டு, கருவேப்பிலை வறுபட்டவுடன் பச்சை மிளகாய் கீறியதையும் வதக்கிக் கொண்டு வடிய விட்ட வரகரசி எக்ஸ்ட்ரா வகைகளையும் சேர்த்துக் கலக்கி நன்கு சேர்ந்து கொள்ளும்படி புரட்டிக் கொண்டு மேலாக நாம் பொடித்து வைத்த காரப் பொடியையும், பிறகு 1 டீஸ்பூன் நெய் அல்லது பச்சையான தேங்காய் எண்ணெய் விட்டு அப்படியே எல்லாமாக நன்கு கலந்து விட்டு சூடாக (1 நிமிடம் கனமான பிளேட்டினால் மூடிவைத்த பின் திறந்து) பரிமாறினால் சுடச்சுட மல்லிகைப்பூ போன்ற மிருதுவான கமகமக்கும் ''த்ரிபலா சுண்டல்'' விருந்தினர்களின் பாராட்டை உங்களுக்கு ஏகமாக அள்ளிக் கொடுக்கும்.

– பி. எஸ். கமலம்,
பெங்களூர்.

## இரண்டாம் பரிசு ரூ. 200/-

## கொழுக்கட்டை உசிலி சுண்டல்



*தேவையான பொருட்கள் :*

பச்சரிசி மாவு - 2 கப்,
தேங்காய்த் துருவல் - 1 கப்,
துவரம் பருப்பு - ½ கப்,
கடலை பருப்பு - ½ கப்,
காய்ந்த மிளகாய் வற்றல் - 10,
உப்பு - தேவையான அளவு,
பெருங்காயத்தூள் - ½ டீஸ்பூன்,
கருவேப்பிலை - 1 ஆர்க்,
எண்ணெய் - 1 கரண்டி.

*செய்முறை :*

கடலை பருப்பு, துவரம் பருப்பை 2 மணி நேரம் ஊறவைத்து மிளகாய் வற்றலுடன் உப்பு சேர்த்து கரகரப்பாக மிக்ஸியில் அரைத்து இட்லி தட்டில் வைத்து வேகவைத்துக் கொள்ளவும். வெந்தவுடன் தட்டில் ஆறவிட்டு உதிர்த்து வைத்துக் கொள்ளவும். அடுப்பில் வாணலி வைத்து தேவையான எண்ணெய் விட்டு கடுகு, கருவேப்பிலை போட்டு தாளித்து உதிர்த்ததையும் அதில் போட்டு சிறிது நேரம் கிளறி வைத்துக் கொள்ளவும். இப்பொழுது நமக்குத் தேவையான உசிலி தயார்.

அரிசி மாவையும், தேங்காய்த் துருவலையும் உப்புப் போட்டு வெந்நீர் விட்டு உருண்டை உருட்டும் பதத்தில் கிளறிக் கொள்ளவும். பிறகு சிறு சிறு உருண்டைகளாக உருட்டிக் கொள்ளவும். பிறகு உருண்டைகளை இட்லித் தட்டில் வேகவைத்துக் கொள்ளவும்.

வேகவைத்த உருண்டைகளை உசிலியில் போட்டு பெருங்காயத்தூள் போட்டு கிளறி இறக்கவும். இந்தக் கொழுக்கட்டை உசிலி சுண்டல் மிகவும் சுவையாக இருப்பதுடன் உடலுக்கும் நல்லது.

– விமலா கோவிந்தன்,
சென்னை – 78.




**சட்னிக்கு அரைக்கும்பொழுது புளிக்குப் பதிலாக அன்னாசிப்பழத் துண்டுகளைப் போட்டு அரைத்தால் இனிப்பும் புளிப்புமாக புதுவித ருசியுடன் இருக்கும்.**

**– ஸ்ரீமதி த்வாரகநாத்**

# மூன்றாம் பரிசு ரூ. 300/-

## மூலிகை சுண்டல் :

*தேவையான பொருட்கள் :*

கொள்ளு - ¼ கிலோ,
வல்லாரைக் கீரை (அ) தூதுவளைக் கீரை நறுக்கியது - ½ கப்,
தேங்காய்த் துருவல் - ½ மூடி,
இஞ்சி, பச்சை மிளகாய் விழுது - 2 ஸ்பூன்,
(கரம்) மசாலாப் பவுடர் - 1 ஸ்பூன்,
பனை வெல்லப் பொடி - 2 ஸ்பூன்,
தாளிப்பு சாமான்கள், தேங்காய் எண்ணெய் - சிறிது,
தேவையான அளவு உப்பு,
பச்சை கொத்துமல்லி நறுக்கியது - 4 ஸ்பூன்.

*செய்முறை :*

முதல் நாளே கொள்ளை ஊறவைத்து கல் நீக்கி களைந்து, மறுநாள் வேகவிடவும். வாணலியில் தேங்காய் எண்ணெய் ஊற்றி கடுகு, உ. பருப்பு, பெருங்காயம் போன்ற தாளிப்பு சாமான்கள் சிவக்க வறுத்ததும் வல்லாரை அல்லது தூதுவளை கீரையைப் போட்டு நன்கு வதக்கி, (தண்ணீர் தெளிக்கலாம்) வேகவைத்த கொள்ளைப் போட்டு அத்துடன் இஞ்சி பச்சை மிளகாய் விழுது கரம் மசாலா பவுடர், தேங்காய்த் துருவல், உப்பு, பனைவெல்லப் பொடி தூவி நன்கு கலந்து கிளறி விட்டு 5 நிமிடம் தட்டால் மூடி வெந்ததும் கீழே இறக்கினால் ஆவி பறக்கும் மூலிகை சுண்டல் அபார ருசியுடன் இருக்கும். கொத்துமல்லி தூவி அலங்கரிக்கலாம்.

– சாந்தா நாராயண், ஸ்ரீரங்கம்.

# ஆறுதல் பரிசு ரூ. 50/-

## மக்காச்சோளம் சுண்டல்

*தேவையான பொருட்கள் :*

சோளம் - 3,
தேங்காய் - ½ மூடி,
பச்சை மிளகாய் - 4,
மசாலாப் பொடி - 2 டீஸ்பூன்,
தக்காளி - 2,
வெங்காயம் - 2 பெரியது,
எலுமிச்சம் பழம் - 1,
உப்பு - தேவையான அளவு,
கொத்துமல்லி - சிறிது.

*செய்முறை :*

இப்பொழுது அதிகம் சோளக் கொண்டை கிடைக்கும் சீசன். இதில் புரோட்டீன் அதிக

அளவில் உள்ளதால் குழந்தைகளுக்கும் உடம்பிற்கும் நல்லது.

சோளத்தை அதன் மணியை எடுக்காமல் அப்படியே குக்கரில் வேகவிடவும். நான்கு சத்தம் குக்கரில் வந்ததும் அது வெந்திருக்கும். பிறகு சோள மணியை உரித்தெடுத்து விடவும். தேங்காய், உப்பு, பச்சை மிளகாய், மசாலா, தக்காளி, கொத்துமல்லி எல்லாவற்றையும் நன்கு மிக்ஸியில் அரைக்கவும். பிறகு அந்த சோளமணி, அரைத்த விழுது எல்லாவற்றையும் நன்கு கொதிக்க விடவும். கொதித்ததும் பெரிய வெங்காயம் நறுக்கியதையும், அதனுடன் சேர்க்கவும். எலுமிச்சம் பழத்தைப் பிழியவும்.

இது சப்பாத்தி, பூரிக்கு தொட்டுக் கொள்ள நன்றாக இருக்கும். பட்டாணி, கொத்துக் கடலை, ராஜ்மா போன்ற சுண்டலை விட சுவை அதிகமாகவும், மாறுபட்ட சுவையிலும் இருக்கும்.

– லதா பத்மனாபன், ஹைதராபாத் – 34.

## ஆறுதல் பரிசு ரூ. 50/-

## முக்கூடல் சுண்டல்

*தேவையான பொருட்கள் :*

புழுங்கலரிசி, ஜவ்வரிசி, நிலக்கடலை ஆகிய மூன்றும் தலா – 25 கிராம், (அல்லது) ஏதாவதொரு சிறிய கப்பிலும் அளந்து, சம அளவாக எடுக்கவும்.)

சிறிய வெங்காயம் ஒன்றை சீராக, பொடியாக நறுக்கி – ¼ கப்,
தேங்காயைத் துருவியது – ¼ கப்,
பச்சை மிளகாய் – 1,
வற்றல் மிளகாய் – 1,
உப்பு – தேவையான அளவு,
எலுமிச்சைச் சாறு – ருசிக்கேற்ப.
பொடிதாக நறுக்கிய கொத்துமல்லி (அ) புதினாக்கீரை – ¼ கப்,
கரம் மசாலா பவுடர் (விரும்பினால்) சிறிதளவு,
தாளிக்க தே. எண்ணெய் – 2 ஸ்பூன்,
கடுகு, சீரகம், கடலை பருப்பு, பெருங்காயம் – தலா ½ டீஸ்பூன்.

*செய்முறை :*

வாணலியை நன்கு காயவைத்து, அடுப்புத் தீயைச் சிறிதாக்கி, எண்ணெய் விடாமல் புழுங்கலரிசி, ஜவ்வரிசியைத் தனித்தனியாக கருகாமல், காந்தாமல் பொறுமையாய் நன்கு பொரியும்படி பதமாக வறுக்கவும். வறுக்கும் பதம், வாசனைக்கும், ருசிக்கும் முக்கியம். ஆதலால் கவனமாக, பதமாக வறுக்கவும்.




நன்கு பொரியா விட்டால், சுண்டல் கல்லுப் போல் இருக்கும். தீய்ந்து விட்டால், மணம் இராது. வேர்க்கடலையைத் தனியாக லேசாக வறுத்து, மூன்றையும் சேர்த்து ஒரு புரட்டுப் புரட்டி, தானியம் மூழ்கும் அளவு மட்டுமே கொதிக்கும் வெந்நீர் ஊற்றி திட்டமாக உப்பு சேர்த்துக் கலந்து 10 அல்லது 15 நிமிடம் ஊறவிடவும்.

பிறகு, வேறு பாத்திரத்தில் ஊறிய நீருடன் மாற்றி, பிரஷர் குக்கரில் ஒரு விசில் வரும் வரை வேகவிடவும். ஆறிய பிறகு, குழையாமல் பதமாக வெந்திருக்கும். ஊறிய நீரைத் தவிர, வேறு நீர் சேர்க்கத் தேவையே இல்லை. நான்ஸ்டிக் வாணலி ஒட்டாது. எனவே, நான் ஸ்டிக் பானில், தேங்காய் எண்ணெய் ஊற்றி, காய்ந்தபின் மிளகாய் வற்றல், கடுகு, சீரகம், பெருங்காயம், பச்சை மிளகாய் தாளித்து, ஊறி, குக்கரில் உதிர் உதிராக வெந்த மூன்று தானியங்களையும் சேர்த்து ஜலப்பசையில்லாமல் 2, 3 நிமிடம் மிகக் குறைவான தீயில் புரட்டிக் கலக்கவும். அடுப்பை அணைத்து விடவும்.

இப்போது, பொடியாக நறுக்கிய வெங்காயம், தே. துருவல், கொத்துமல்லி அல்லது புதினா கீரைப் பொடி விரும்பினால் கரம் மசாலாப் பவுடர் சேர்த்து, நன்கு புரட்டவும். புளிப்பு வேண்டுவோர், சிறிதளவு, ருசிக்கேற்ப எலுமிச்சைச் சாறு கலக்கலாம். இதை அகலத் தட்டில் நடுவில் குவித்து, சுற்றிலும் மெல்லிய வட்டங்களாய் நறுக்கிய காரட், தக்காளி, வெள்ளரி, இளம் முள்ளங்கி ஆகியவற்றை கலர்புல்லாக அடுக்கி, தின்னக் கொடுக்கலாம்.

– இந்திரா ராமதுரை, பெங்களூர் – 3.

# 14 இலட்சம்
## சந்தாதாரர்கள் தங்கள் தேவைகளை தாங்களே நிறைவேற்றிக் கொள்கிறார்கள்

### நீங்களும் பயன் பெற இந்த
# உறவுத்தொடரில் உறுப்பினராகுங்கள்

திருமணம், கல்வி, மருத்துவம் அல்லது தொழிலுக்கு என ஸ்ரீராம் சிட்ஸில் 7 இலட்சம் சந்தாதாரர்கள் தங்களது பணத்தையே கடனாகப் பெற்று பயனடைந்துள்ளார்கள். இந்த இனிய 25 ஆண்டு கால உறவுத்தொடரில் நீங்களும் உறுப்பினராகி வளம் பெறுங்கள்.

தற்போதைய சந்தாதாரர்கள் தங்கள் நண்பர், உறவினரை ஸ்ரீராம் சிட்ஸிற்கு அறிமுகம் செய்யும் போது SS பௌல் முதல் தங்க நெக்லஸ் வரையிலான பரிசுகள் காத்திருக்கிறது.





## ஸ்ரீராம் சிட்ஸ்

ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட் • ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்
'சுப்ரமணியன் பில்டிங்', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.

**இழப்பற்ற, அதிக லாபம் தரும், என்றும் ஏற்புடைய முதலீடு.**

| | சீட்டுத் தொகை | | சந்தாதாரர் பரிசுகள் |
|---|---|---|---|
| 1. | 250 x 40 | 10,000 | SS பௌல் (மூடியுடன்) |
| 2. | 500 x 30 | 15,000 | செல்லோ கிப்பிங் கேஸ் |
| 3. | 625 x 40 | 25,000 | கும்பகோணம் SS ஃபான்ஸி கன்டெய்னர் |
| 4. | 500 x 60 | 30,000 | SS உருளி செட் (இரண்டு) |
| 5. | 1000 x 50 | 50,000 | SS CB டிப் ஃப்ரை பேன் |
| 6. | 2500 x 30 | 75,000 | செல்லோ ப்ளாஸ்க் (மூடியுடன்) |
| 7. | 2500 x 40 | 1,00,000 | கானி SS CB (மூடியுடன்) |
| 8. | 5000 x 30 | 1,50,000 | பிக்னிக் செட் |
| 9. | 5000 x 40 | 2,00,000 | ஹாகின்ஸ் பிரஷர் குக்கர் |
| 10. | 10,000 x 30 | 3,00,000 | ஜெமினி கிஃப்ட் செட் |
| 11. | 20,000 x 25 | 5,00,000 | 4 கிராம் தங்க நாணயம் |

ஆண்டு வர்த்தகம் ரூ.1000 கோடியை அடைந்ததன் பொருட்டு, புதிய சீட்டு சேரும் சந்தாதாரர் அனைவருக்கும் ஓர் அழகிய பரிசு உண்டு!

*அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரருக்கு மட்டுமே.
*நுழைவுக்கட்டணம் தனி *முன் அனுமதி பெறப்பட்டது

DATTARAM 55297

# போரடிக்காமல் பொருளாதாரம் படிக்கலாமா?

பொருளாதாரம் இயங்குவதே பணத்தில்தான்; பணத்தால்தான்; பணத்திற்காகத்தான்; இந்தச் சூழலில் நல்ல நிதி நிர்வாகம் மிக மிக அவசியம். அதாவது நம்மிடம் இருக்கும் நிதி வளத்தை நல்ல முறையில், திறம்பட செலவு செய்வதும், கூடுமானவரை தேவையற்ற செலவுகளைத் தவிர்ப்பதும் நல்ல நிதி நிர்வாகமாகும். இவை இரண்டுமில்லாமல் செய்யும் செலவு பணப் புழக்கத்தை ஊக்குவிப்பதாகவும் பெருக்குவதாகவும் இருக்க வேண்டும். இவையனைத்தையும் திறம்பட செய்வது நிதியமைச்சரவையின் கட்டுப்பாட்டிற்குள் வருகிறது.

அரசாங்கம் வரும் வருமானத்தை பலதரப்பட்ட, செலவுகளுக்கு ஒதுக்கப்படும் பணத்தை புத்திசாலித்தனமாகவும் மிகவும் விழிப்போடும் செய்கிறதா என்று கேட்டால் உண்மையில் இல்லை என்பதுதான் பதில். அதற்கு வெறும் அரசாங்கத்தையே குறைகூறிவிட முடியாது. வெறும் பொருளாதாரம் வேறு; அரசியல் வேறு. நாம் எல்லா நாடுகளிலும் காண்பது அரசியல் கலந்த பொருளாதார நிர்வாகம்தான். அதுவும் நம் நாட்டைப் பொறுத்தமட்டில் எந்த நிதிக் கொள்கையும் வெறும் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் எடுக்கப்பட்டவை அல்ல. அதில் அரசியல் காரணமும் நிச்சயம் கலந்திருக்கும். இது ஒட்டுமொத்தமாக தவறு என்று கூறிவிட முடியாது.

நமது வருடாந்திர பட்ஜெட்டில் ஒரு பெரும் பகுதியை ஆக்கிரமிக்கும் 'மானியத்தை' இந்தத் தொடர் கட்டுரையின் ஆரம்பத்தில் மேலோட்டமாகக் குறிப்பிட்டிருந்தேன். அதைப் பற்றிச் சற்று விரிவாகப் பார்ப்போம். இதைப் புரிந்து கொள்வதற்காகத்தான் 'அரசியல் கலந்த பொருளாதாரப் பின்னணியை' மேலே குறிப்பிட்டிருக்கிறேன்.

உண்மையில் Subsidy என்றழைக்கப்படும் மானியம் என்றால் என்ன? அதாவது "பொருட்களின் விலைகளையும்/சேவையின் விலைகளையும் குறைப்பதற்கென்றே அரசாங்கம் வழங்கும் நன்கொடை." அதாவது ஒரு தரப்பட்ட மக்களின் தேவைக்காக பொருட்களின் விலைக் குறைப்பு.

உதாரணத்திற்குச் சொல்லுவதென்றால் ரேஷன் கார்டு உள்ளவர்களுக்கு சர்க்கரை ரூ. 9.10க்குக் கிடைக்கிறது. அதன் விலை வெளிக் கடையில் அதாவது வெளி மார்க்கெட்டில் ரூ 13 அல்லது ரூ 14. இதுதான் அதன் உண்மையான விலை. அரசாங்கம் மக்களின் ஏழ்மையை முன்னிட்டு அந்த அதிகபட்ச ரூ 4 அல்லது ரூ 5 வழங்குகிறது. அதே போல் ஏழை மாணவர்களுக்குக் கிராமங்களில் ஆரம்பப் பள்ளிகளில் இலவசமாகப் பாடம் சொல்லித் தருவது கூட ஒரு வகை மானியம்தான். இந்த இலவச 'சேவைக்கு' ஒரு வகை விலையுண்டு.

மானியம் உலகளவில் ஒப்புக் கொள்ளப்பட்ட பொருளாதாரச் சலுகை. ஆனால் அதனை வழங்கும் விதத்திலும், வழங்கும் அளவிலும்; மானியம் அளிக்கப்பட வேண்டிய பொருட்களிலும் கருத்து வேறுபாடு தொடர்ந்து வருகிறது. 1994 – 95-ல் மாநில அரசு மற்றும் மத்திய அரசு அளித்த மானியத்தின் மொத்த மதிப்பு ரூ. 1,37,338 கோடி. 1995-96-ல் சுமார் ரூ. 1,63,000 கோடி குறையாமல் இருக்கிறது. இப்படி ஆண்டுதோறும் செலவு செய்

யும் இந்தப் பெருந் தொகையை வேறு உற்பத்தி பெருக்குவதற்காகவோ அல்லது வேறு மேம்பாட்டு திட்டத்திற்காகவோ செலவு செய்யலாமே என்று வெறும் பொருளாதாரக் கண்ணோட்டத்தோடு சொல்ல முடியாது. ஏனென்றால் எல்லாப் பொருட்களும் எல்லாத்தரப்பட்ட மக்களுக்கும் மார்க்கெட் நிர்ணயிக்கும் விலையில்தான் கிடைக்கும் என்கிற நிலை வந்து விடும். இந்தியாவில் 75% மக்கட் தொகை வறுமை கோட்டின் கீழே இருக்கிறது. மேற்கூறிய 'பொருளாதார' முடிவு அவர்களது அன்றாட வாழ்க்கையையே பாதிக்கும் இல்லையா!

எந்தெந்த பொருட்களுக்கு எந்தளவு மானியம் வழங்கப்பட்டிருக்கிறது என்று பார்ப்போம். 1995-96 ஆம் ஆண்டில் உர வகைக்கு மட்டும் 6,235 கோடி ரூபாய் மானியம் வழங்கப்பட்டது. 1996 – 97 பட்ஜெட்டில் இந்த உர வகைக்கு மட்டும் ரூ 8,372 கோடியாக மானியம் அதிகரித்திருக்கிறது. அதே போல உணவு வகைக்கு என்று 1995-96 ஆண்டில் ரூ. 5,500 கோடி வழங்கப்பட்ட மானியம் 1996 – 97 ஆண்டு சற்று கூடுதலாக ரூ 5,884 கோடியாக உயர்த்தப்பட்டிருக்கிறது.

இந்தப் பெரும் சலுகை உண்மையிலேயே ஏழை விவசாயிக்குச் சென்று அடைந்ததா? அப்படி வருடா வருடம் விவசாயிக்கு உருப்படியாக போய்ச் சேருகிறதென்றால் ஏன் அவர்களின் வாழ்க்கைத் தரத்தில் அது பிரதிபலிக்கவில்லை? அதில்லாமல் உலக வங்கியின் புள்ளி விவரப்படி பார்த்தால் ஏழை எளியவர்களின் ஏழ்மை இன்னும் அதிகரித்துக் கொண்டே போகிறதல்லவா!

1994-95- ஆம் ஆண்டில் விவசாயிகளுக்கு கடன் நிவாரணம் என்ற பெயரில் ரூ 1,111 கோடி ஒதுக்கப்பட்டது. இதனால் உண்மையில் யாருக்கு நன்மை? ஏழைகளுக்கென்று இலக்கு வைத்துக் கொண்டு, பணவசதி/நிலபுலன் உள்ள விவசாயிகள் இந்தச் சலுகைகளை அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள் என்று பல இந்திய பொருளாதார வல்லுனர்கள் கருத்து தெரிவித்துள்ளனர். இந்தத் தருணத்தில் மற்றொரு விஷயத்தையும் நாம் நினைவுகூர வேண்டும். இந்தியாவில் மற்ற எல்லா வகை வருமானத்திற்கும் வரி உண்டு. ஆனால் விவசாயத்திலிருந்து கிடைக்கும் வருமானம் மட்டும் அதற்கு விதிவிலக்கு.

அதனால் மானியம் மற்றும் வரிச்சலுகை, கடன் நிவாரணம் அடைய வேண்டியவர்களைச் சென்று சேருவதில்லை. மேலும் செல்லும் வழியிலேயே அதாவது அரசாங்கத்திலிருந்து வந்து மக்களைச் சேரும் இடையிலேயே இந்த நிதி உதவி பல பேர் கைகளுக்கும் போய் விடுகிறது என்கிற கருத்தும் நிலவுகிறது.

நடுத்தர மக்களால் உணரக்கூடிய சலுகைகளும் மானியத்தில் இடம்பெறுகின்றன. உதாரணமாக நாம் உபயோகிக்கும் சமையல் எரிவாயு சென்னையில் ரூ. 127க்குக் கிடைக்கிறது (இப்போது ஏற்றி விட்டார்கள்). உண்மையில் அதன் விலை சுமார் ரூ. 200/- தனியார் வழங்கும் சமையல் எரிவாயுவின் சிலிண்டர் விலையோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நமக்கு அது கூடுதல் விலைபோன்று தோன்றும். உண்மையில் அது தான் சரியான விலை. அரசாங்கம் குறைச்சல் விலையில் மக்களுக்கு எரிவாயு அளித்துக் கொண்டிருக்கிறது.

கெரசின் ஏழைகள் உபயோகிக்கும் எரிவாயு என்பதாலும், டீசல் சாதாரண லாரி இதர வண்டிகள் உபயோகிக்கும் எரிபொருள் என்பதாலும் அதற்கும் மானியம் உண்டு. 1994-95 ஆம் ஆண்டில் ரூ 3,740 கோடி (கெரசினுக்கு இருந்த) மானியம் 1996 – 97ஆம் ஆண்டில் ரூ 6,350 ஆக உயர்ந்திருக்கிறது.

அடுத்தாற்போல் தவிர்க்க முடியாத ஓரளவு தவிர்க்கக்கூடாத செலவுகளும் நிறையவே இருக்கின்றன. நாட்டு நிர்வாகத்திற்காக செய்யப்படும் செலவுகள் அப்படிப்பட்டவை. எல்லைப் பாதுகாப்பிற்கு, மற்றும் நாட்டுப் பாதுகாப்பிற்கு, பெரிய தொகை செலவழிக்கப் படுகிறது. ஒவ்வொரு நாடும் ஆயுதங்களுக்காகச் செலவழிக்கும் தொகையைக் குறைக்க வேண்டும் என்று கூறிவிட்டு, நடைமுறையில் கூடுதலாகத்தான் செலவழித்துக் கொண்டிருக்கின்றன.

1980-81 ஆம் ஆண்டு ரூ 2,604 கோடியாக இருந்த நமது பாதுகாப்பு செலவு 1996-97 பட்ஜெட்டில் ரூ 27,798 கோடியாக உயர்ந்திருக்கிறது.

இதில்லாமல் இதர நிர்வாகச் செலவு ஆண்டாண்டிற்கு ஏறிக் கொண்டே செல்கிறது. பண வீக்கத்தினாலும், காலப்போக்கில் இந்தச் செலவுகள் அதிகமாக்கப்பட்டிருக்கின்றன என்று வைத்துக் கொண்டாலும் நாம் தொலை நோக்குப் பொருளாதாரப் பார்வையோடு இந்தச் செலவுகளை கட்டிற்குள் வைக்க முயற்சிக்க வேண்டும்.

அவ்வாறு கடைபிடித்தால்தான், நாம் செய்ய நினைக்கும் நல்ல காரியங்களுக்காக நிதி வசதி இருக்கும். வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால் தாராளக் கொள்கைக் காரணமாக மட்டும் நாம் தனியார் துறைக்கு அளிக்கவில்லை. நம்மிடம் infrastructrue எனப்படும் இதர வசதி செய்யும் பணியில் தனியார் துறையை அழைக்கும் நோக்கமே நம்மிடம் நிதிப் பற்றாக்குறைதான். அதே போல் மின்சார உற்பத்தித் துறையிலும் முன்னேறுவதற்கு நிதிப் பற்றாக்குறைதான் தடையாக உள்ளது.

அதனால்தான் பொருளாதார வல்லுனர்கள், காலப்போக்கில், ஒவ்வொரு பொருளுக்கு வழங்கப்படும் மானியத்தையும் குறைத்துக் கொண்டே வரவேண்டும் என்கிற கட்டுப்பாட்டுக் கொள்கையை வலியுறுத்துகின்றனர்.

**- ஜெயந்தி ஸ்ரீநிவாசன்**



சீதாவும், கீதாவும் குழம்பிய நிலையில் திகைப்புடன் சாம்ப சிவனைப் பார்த்தார்கள். அவர் கூறிய விஷயம் உண்மை தானா என்ற பிரமிப்பு. இப்படிக் கூட ஒரு மனிதன் இருப்பாரா என்று வியப்பு.

ஒரு சில நிமிட மௌனத்தை உடைத்தவள் கீதா... "ஸாம், ஆர் யூ சீரியஸ்!?"

"சீரியஸ்ஸாக இல்லாமல் பேசுவேனா? இந்த எண்ணம் அம்மா உடம்பு முடியாம படுத்தபோதே எனக்குத் தோணினதுதான். கலியாணம் கற விஷயத்தைப் பற்றிக் கனவு, கற்பனை எல்லாம் இருக்கிற வயசை நான் எப்பவோ கடந்தாச்சு. இனிமேல கலியாணம்கறது எனக்கு ஒரு நட்பு, தோழமை, சேர்ந்து வாழறது என்கிற ப்ராக்டிகல் விஷயங்கள்தான். சீதா வளர்ந்திருக்கும் விதம் எனக்குப் புரிஞ்சு போச்சு. அதனால நான் அவங்க கிட்ட தனியே பேசி அவங்களை அதிர்ச்சிக்கு உள்ளாக்கக் கூடாதுன்னுதான் பேசலை. நீங்க ரெண்டு பேருமாப் பேசி முடிவெடுங்க. நான் ஏற்கெனவே லோகு கிட்ட போனில் என் ப்ரபோஸலைப் பற்றி சொல்லி விட்டேன்..."

கீதா சீதாவைப் பார்த்தாள். அவள் விட்டத்தை வெறித்துப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள். அதிர்ச்சியா... சீதாவின் வாழ்க்கைப் பிரச்னைக்கு இதைவிடச் சுலபமான ஒரு முடிவு இருக்க முடியாதுதான். ஆனால், அம்மா மறைந்து காரியம் முடியக் காத்திருந்தாற்போல கலியாணத்தைப் பற்றிப் பேசுவதாவது... ஆபாசமாக இல்லை... சீதா கடந்த ஒரு வருடமாக அனுபவத்திருந்த துன்பத்திலிருந்தும் சுலபத்தில் விடுபட முடியுமா...

"ஸாம் கிவ் ஹெர் ஸம் டைம்."

சாம்பசிவன் சிரித்தார். "என்னோட ப்ரபோஸலை முன் வெச்சுட்டேன். கீதா, நீங்களும் சீதாவுமா டிஸ்கஸ் பண்ணி முடிவெடுங்க. வேணுமானா ஒரு வருஷம், ரெண்டு வருஷம் கூட டயம் எடுத்துக்கலாம். நாற்பத்திரெண்டு வயசு வரை கலியாணத்தைப் பற்றி நான் எந்த முடிவும் எடுக்கவில்லை. திடீர்னு அவசரம் எதுவுமில்லை... டேக் யுவர் ஓன் டைம்..." சாம்பசிவன் அந்த விஷயத்தை அதோடு விட்டு விட்டுப் பொதுவான விஷயங்களைப் பேசி விட்டு விடைபெற்றார்.

அவர் கிளம்பியவுடன் சீதா, "கீதா, எனக்கு வீடு, வாசல், பணம், படிப்பு எதுவுமில்லாம இருக்கலாம்... ஆனா, கட்டாயம் இன்னொரு புருஷன் மட்டும் வேணாம்." முகத்தைக் கவிழ்த்துக் கொண்டு விம்மினாள். "நான், இந்த ஆளு இவ்வளவு நெருக்கமாப் பழகறபோதே இவர் கெட்ட எண்ணத்தைப் புரிஞ்சிட்டு இருக்கணும். மனசுலே இப்படிப் பட்ட வெஷத்தை வச்சுக்கிட்டா இவர் நல்லவர் மாதிரி வேஷம் போட்டார்?"

"சீதா, சும்மாக் கத்தாதே... தமிழ் சினிமா





## 4 உஷா சுப்ரமணியன்

பார்த்து, தமிழ்க் கதை படிச்சு உனக்கு புத்தியே கெட்டுப் போச்சு. கலியாணங்கறது கெட்ட எண்ணமா... என்னமோ வெஷம், வேஷம்னெல்லாம் பேசறே... ஒருத்தரைக் கலியாணம் செய்துக்கறேன்னு சொல்றதுல என்ன தப்பு? உன்னை அவர் என்ன கட்டாயப்படுத்தினாரா இல்லை உன் மாஜி புருஷன் போல... கண்ணியமாக் கேட்கிறார். இஷ்டமில்லைன்னா "ஸாரி எனக்கு இஷ்டமில்லைன்னு" சொல்லிட்டுப் போறது. சாதாரண விஷயங்களுக்கெல்லாம் இமோஷனல் ட்ராமா ஆடி ஆடியே நீங்கள்ளாம் கெட்டுட்டீங்க. சே... என்ன மெலோட்ராமா."

சீதா தன் தவற்றை உணர்ந்தவளாகத் தலையைக் குனிந்து கொண்டாள். "சீதா, ஸாம் நன்கு படித்தவர். உலகம் முழுவதும் பல நாடுகளிலும் வசித்தவர். வாழ்க்கையைப் பற்றி, உறவுகளைப் பற்றியெல்லாம் நன்கு புரிந்து கொண்டவர். பலதரப்பட்ட பெண்களுடன் பழகும் வாய்ப்புப் பெற்றவர். பொம்பளை என்றால் வாயைப் பிளந்து நிற்கும் பக்குவமில்லாதவர் இல்லை. அவர் யோசிக்காம எதையும் பேசமாட்டார். இவ்வளவு புரிஞ்சிக்கோ."

முழங்காலில் முகத்தைப் புதைத்துக் கொண்ட சீதா குற்ற உணர்வுடன் சீதாவை நிமிர்ந்து பார்த்தாள். "அக்கா, அவர் நல்லவராகவே இருந்துட்டுப் போகட்டும். எனக்குக் கலியாணம் வேண்டாங்கா. போன ஜன்மத்துலே என்னல்லாம் பாபம் செஞ்சேனோ, இந்த ஜன்மத்துலே இப்படி அலைக்கழியறேன். இந்த ஜன்மத்திலே இன்னும் பாவமா..."

"பாவமா. எது?"

"ஆமா. ஏற்கெனவே ஒரு முறை தாலி கட்டி, அதை அவிழ்த்தும் எறிஞ்சாச்சு. மறுபடியும் தாலி கட்டிக்கச் சொல்றியா... அந்த ஆளு காலால உதைச்சு உதறி அடிச்சபோது சுலபமாத் தாலியைக் கழட்டி எறிஞ்சிட்டேன். ஆனால், அத்தனை சுலபமா இன்னொரு

தாலி கட்டிக்க முடியுமா கீதா?"

"தாலி கட்டிக்கறதுதான் பிரச்னைன்னா அதைக் கட்டிக்காதே. பேசாம ரெஜிஸ்தர் மேரேஜ் செய்துக்கோ..."

"இல்லை கீதா, எனக்கு கலியாணம் வேணாம். ஒரு கலியாணத்துலேயே நொந்து போயிருக்கேன். உடம்பு, மனசு எல்லாம் சல்லடைக் கண்ணாத் துளைச்சிருக்கு. ஆண் பிள்ளை என்றாலே எனக்கு குமட்டிட்டு வர்றது. வேணாம். நான் எங்கேயாவது பிச்சை யெடுத்தாவது பிழைச்சுக்கறேன். கலியாணம் வேணாம்."

கீதாவுக்குப் புரிந்தது, தங்கையின் ரணம் இன்னும் ஆறவில்லை. வலி சற்றும் குறைய வில்லை. பேசி, விவாதிக்கக் கூடிய பக்குவத்தை அவள் அடையவில்லை. சாம்பசிவனிடம் முதலில் தனியே பேசிப்பார்க்கலாம்.

**ஸ்**பென்ஸர் பில்டிங்கின் பிரம்மாண்ட அழகு கீதாவுக்குப் புதிதாக இருந்தது. "ஸாம், இந்த இடத்தைப் பார்த்தால் ஏதோ கானடாவிலோ, அமெரிக்காவிலோ இருப்பது போலில்லை? அங்கெல்லாம்தான் இப்படி ஸாண்ட்விச்சை கடித்துக் கொண்டு, பெப்ஸி குடித்தவாறு ஷாப்பிங் செய்வார்கள். நம்ம தமிழ் நாட்டிலே நடை, உடை, பாவனை எல்லாமே ரொம்ப மாறிடிச்சு..."

"ஆமாங்க. இந்த முறை நானே அசந்துட்டேன். வாட் எ சேஞ்ச்."

"ம்... இந்த மாறுபட்ட உலகிலேயும், என் ஸிஸ்டர் மாறலை."

"அது எப்படி அவங்களால மாற முடியும்? எண்ணங்கள் மாறணும்னா, மாறுபட்டு சிந்திக்கிற அறிவு வேணும். அந்த அறிவு வரப் படிப்பு தேவை இல்லை, உலக அறிவு தேவை... இந்த இரண்டுமே இல்லையென்றால் கூட, மாறுபட்ட சூழலில் பழகியிருக்கணும். கிணற்றுத் தவளைன்னு சொல்றதில்லையா, நம்ம குடும்பம், நம்ம ஜாதி, நம்ம இனம், பழக்க வழக்கங்கள் என்று சின்ன வட்டத்திலே உழண்டுட்டு இருக்கிறவங்களால வித்தியாசமா நினைக்க முடியாது. கானடா வந்த புதிசுல நீங்களும் உங்க தங்கை மாதிரித்தானே இருந்தீங்க. ஏன் நானும் அப்படித்தான் இருந்தேன்."

பண்டிகை தினத்தில் உபயோகிக்கும் மணைப் பலகைகள் பழையனவாக இருக்கிறதே என கலங்க வேண்டாம்! அவற்றின் மீது ரெக்ஸின் (அ) தடிமனான ப்ளாஸ்டிக் ஷீட்டை அளவாக வெட்டி ஒட்டி விடுங்கள். பிரமாதமாக இருக்கும்.

— ஜெயா



"யெஸ் ஸாம். ஆனா, சொல்லுங்க, திடீர்ன்னு சீதாவைக் கலியாணம் பண்ணிக்கணும்கற எண்ணம் உங்களுக்கு எப்படி வந்தது?"

"பெரிய ரகசியம் ஒன்றுமில்லை. கடந்த இரண்டு மாசமா உங்க தங்கைங்கற முறையிலே தான் அவங்க கிட்ட பழகிட்டு இருந்தேன். ஷி ஈஸ் எ வெரி இன்னொஸென்ட் வுமன். எனக்கு அவங்க நேச்சர் ரொம்பப் பிடிச்சுருக்கு. அதோட தீபாவையும் ரொம்பப் பிடிச்சிருக்கு. நான் இத்தனை வயதுக்கப்புறம் கலியாணம் செய்து கொண்டு, குடும்பம் உண்டாக்கறதை விட, ஒரு குடும்பமா அவங்களை ஏத்துக்கிடலாமே என்று தோன்றியது. இத்தனை வருஷத்துலே எத்தனையோ முறை கலியாணம் பண்ணிக்க வேணும்னு நினைச்சுருக்கேன். ஒவ்வொரு தரமும் ஏதோ ஒரு காரணத்தாலே முடிவைத் தள்ளிப் போடுவேன். இந்த முறை, சீதாவிடம் தோன்றிய பாச உணர்வு என் முடிவைத் தீவிரமாக்கியிருக்கிறது. தட்ஸ் ஆல். அவங்களுக்கு இஷ்டமில்லைன்னா, விட்டுடலாம்."

"அதெல்லாம் ஒண்ணுமில்லை. அடுக்கடுக்காய் வந்த அதிர்ச்சிகளிலிருந்து அவ மீளல்லை இன்னும். ஆனா ஸாம், ஒண்ணு தெரியணும் எனக்கு. சீதா இன்னிக்கு நிராதரவா நிக்கிறா, அவளை நாம காப்பாத்தணும்கற தியாக உணர்வோட அவளை ஏத்துக்கல்லை இல்லையா?"

"கட்டாயம் இல்லை... தமிழ் சினிமா மாதிரி, விதவைக்கு வாழ்வு தர்றேன், விவாகரத்தான பெண்ணுக்கு வாழ்வு தர்றேன் அப்படின்னு வீர வசனம் பேசற கேவலமான ஆண் இல்லை நான். யூ நோ இட்... நம்ம வாழ்க்கை நமக்கு சொந்தமானது. அதை யாரும் யாருக்கும் தர முடியாது. இந்த மேல் சாவினிஷத்தை நான் வெறுக்கிறேன்."

"ஸாம், ஆயிரமிருந்தாலும் நீங்க இந்தியர். சீதா ஏற்கெனவே ஒரு ஆணோட வாழ்ந்து, அவனுக்குக் குழந்தை பெத்துக் கொண்டவள் என்ற எண்ணம் உங்களுக்கு வராமல் இருக்குமா?"

"கீதா, சீதா ஏற்கெனவே ஒருத்தனின் மனைவியா இருந்தவள் என்ற விஷயத்தை நான் ஏற்றுக் கொண்ட பிறகுதானே இந்த விருப்பத்தைத் தெரிவித்தேன். அது ஒரு அத்யாயம். இனி

நவராத்திரிக்கு கொலுப் படிக்கட்டுகள் அமைக்கும் போது ஒவ்வொரு பொம்மை படிகளுக்கும் நடுவில் அழகான கலர் ஜிகினாக்களை ஒட்டி விட்டால் படிக்கட்டுகள் பளபளப்பாக மின்னும்.

— ஆர். மீனாட்சி



மேல தொடங்கப் போறது வேற அத்யாயம். அவ வாழ்வுல மட்டுமில்லை, என் வாழ்விலும் எத்தனையோ அனுபவங்கள் இருக்கு. ஆண், பெண் உறவு என்பது இயற்கையான ஒன்று. அதை களையாக்க வேணாம்."

"ஸாம்.. எங்களுக்கு நெருங்கிய உறவினர் அதிகமில்லை. ஆனால் உங்களுக்கு அம்மா, அக்கா, தங்கை, அவங்க வாரிசுகள் என்று பெரிய குடும்பமே இருக்கு. உங்களை மாதிரி மற்றவங்க இந்தக் கலியாணத்தைச் சுலபமா ஏத்துப்பாங்களா? இதனால உங்க குடும்பத்துலே குழப்பம் வரக்கூடாதில்லையா?"

"குழப்பம், கோபம், இதெல்லாம் தவிர்க்க முடியாது. நான் கலியாணம் செய்து கொள்வதையே அவங்க விரும்பாம போகலாம். எனக்கென்று குடும்பம் இல்லாததால, நான் அவங்களுக்கு நிறைய செலவழிக்கிறேன். அது கட்டாயம் முடியாம போகலாம். ஆனால் பிறருடைய சுயநலத்திற்காக, என் விருப்பத்தை எந்த அளவு விட்டுக் கொடுக்க வேண்டும் என்று நான்தானே முடிவெடுக்க வேண்டும். எந்த மனிதரும் வாழ்நாள் முழுவதும் பிறருக்காக வாழ முடியாது! தான், தனக்கு என்று வாழ்ந்தாக வேண்டும்."

"இந்தக் கலியாணத்தை தீபா ஏற்றுக் கொள்ளுவாளா?"

"கட்டாயமாக. கடந்த இரண்டு மாதத்தில் நான் தீபாவிடம் மிகவும் நெருங்கியே பழகியிருக்கிறேன். அவளுக்கு அவள் சொந்த அப்பாவைப் பற்றிய நினைவு கூட இல்லை. அதோடு அவரும் தன் மகளுடன் எந்தத் தொடர்பையும் வைத்துக் கொள்ள விரும்பவில்லை. மனைவியை விவாகரத்து செய்த பிறகும், தன் குழந்தைகளுடன் எவ்வளவு நெருக்கமான உறவு வைத்துக் கொள்ளும் அப்பாக்கள் இருக்கிறார்கள். இந்த அப்பாவுக்கு மகள் ஸ்கூலில் சேர்ந்தாளா, உடம்பு சௌகரியமாக இருக்கிறாளா, அவளுக்கு ஒழுங்காய் சாப்பாடு போட பெற்றவளுக்கு வழியிருக்கா என்ற கவலை கூட இல்லை. ஆனால், ஐ கேன் பி எ வெரிகுட் பாதர் டு தீபா. அன்பு, புத்திசாலித்தனம் இரண்டும் நிரம்பிய குழந்தை அவள். அவளுக்கு சீதா அன்பையும், நல்ல பழக்கங்களையும் தரலாம். ஆனால் என்னால் அறிவையும், நல்ல கல்வியையும் தர முடியும். அவள் இன்னும் பத்து வயது பெரியவளாக இருந்தால், அவளிடமும் பேசிச் சம்மதம் வாங்கியிருக்கலாம். இந்த வயதில் தானாக ஏற்றுக் கொண்டு விடுவாள்."

"உங்கம்மா நீங்க வேற ஜாதியிலே கட்டிக்க சம்மதிப்பாங்களா?"

"ஜாதி அடித்துக் கொள்வதற்குத்தான் மனிதர்களுக்குத் தேவையே தவிர, அன்புடன் சேர்ந்து வாழ இல்லை. நமக்குள்ள என்ன பெரிய வித்யாசம். எங்களுக்கிடையிலே வித்யாசம் இருக்குன்னா அது அறிவாலும், அனுபத்தாலும் இருக்குமே தவிர, ஜாதியால இல்லை. நான் மொதல்ல சொன்னாப்பல, இந்தக் கலியாணத்தை நிறுத்த பலவிதத் தடைகளைக் கட்டாயம் என் குடும்பத்தினர் முன் வைப்பாங்க. அதுல ஜாதியும் ஒண்ணாயிருக்கும். ஆனால், என் வாழ்க்கை முடிவுகளை நான்தான் எடுப்பேன்."

"சீதாவின் சம்மதம் கிடைத்துவிடும்.. மேலே எப்படி ப்ரொஸீட் செய்யறது? உங்க வீட்டுலே எப்படிப் பேசறது. எப்படிக் கலியாணம் செய்யறது. இதெல்லாமே பிரச்னையா இருக்கும் போலிருக்கே. இன்னும் ஒரு வாரத்தில் நானும் கிளம்பியாகணும்."

"நான் இதைப் பற்றியெல்லாம் யோசித்துத்தான் வைத்திருக்கிறேன். சீதாவின் சம்மதம் கிடைத்தவுடன் நீங்க ஊருக்குப் போறத்துக்குள்ள ஒரு கோவில்ல நாலு சாட்சி முன்னால தாலியோ, மோதிரமோ, வேற என்ன விருப்பமோ அதன்படி நான் அவங்களை மனைவியா ஏத்துக்கிடறேன். அதே சமயம் ரெஜிஸ்தரார் ஆபீஸிலும் தெரிவித்து விட்டால் முப்பது நாளில் ரெஜிஸ்தர் செய்து விடலாம். ரெஜிஸ்த்ரேஷன் முடிந்த பிறகு தீபாவும், சீதாவும் எங்க வீட்டுக்கு வாழ வரட்டும். என் ஒரே கவலை இப்போதைய நிலையில், நாங்கள் அம்மாவுடன்தான் குடும்பம் நடத்தியாக வேண்டும். அதனால் சில சலனங்கள் இருக்கலாம். ஆனால் பெரிய பிரச்னை எதுவும் வராமல் நான் சீதாவை 'ஸப்போர்ட்' செய்வேன் என்று உங்க கிட்ட சத்யம் செய்து தர்றேன்."

"உங்கம்மாவை நான் பார்த்து பேச வரட்

டுமா?"

"வேண்டாம் கீதா, ஒரு நாப்பத்தி இரண்டு வயசு ஆணுக்குக் கலியாணம் பேச என்று நீங்கள் வரவேண்டாம். எங்க வீட்டுக்கு வாங்க, அம்மாவை சந்தியுங்க, இந்த சூழலில் என் தங்கை சந்தோஷமாக இருப்பாளா என்று முடிவு பண்ணுங்க. நானே உங்களை என் நெருங்கிய நண்பரின் மனைவி, நான் கலியாணம் பண்ணிக்கப் போற பெண்ணோட அக்கான்னு அறிமுகப்படுத்தறேன்."

"சாம், வீட்டையும் வரதராசனுக்கு கொடுத்துட்டா, அம்மா பணம் என்று பெரிசா எதுவும் இருக்காது. சீதாவின் நகைகள், பாத்திரம், பண்டம் எதையும் அவ புருஷன் திருப்பித்தரவில்லை. அதையெல்லாம் சண்டை போட்டு வாங்கற தைரியமும் அவளுக்கில்லை."

"அதெல்லாம் அவ மறந்து போகட்டும். கழுத்திலும், காதிலும் தங்கம் மின்னற பெண்களைப் பார்த்தாலே ஆபாசமாக இல்லை? நம்ம ஊர்ல ஏனோ கலியாணம்னாலே ஆண், பெண் உறவை எப்படி அமைக்கிறதுன்னு பார்க்காம, தங்கத்தை நிறுக்க ஆரம்பிச்சுடறாங்க. அவசியமான விஷயங்களை நான் ஒவ்வொன்றாக வாங்கறேன். குடும்பம் நடத்தப் போறது அவ மட்டும் இல்லை. நானும்தான். அப்படியிருக்க பொம்பளை மட்டும் ஏன் சாமான் எடுத்திட்டு வரணும்? உங்க குடும்ப பொருளாதார நிலை எனக்குத் தெரியும்..."

"ஸாம், கடைசியாக ஒரு கேள்வி, உங்க தகுதி, வசதிக்கு நம்ம ஊர்ல பெண்ணைப் பெத்தவங்க தேடி ஓடி வருவாங்க. அப்படியிருக்க ஏன் நீங்க சீதாவை...?"

ஸாம் சிரித்தார். "There is no logic in love and hate... எனக்கு சீதாவைப் பிடிச்சிருக்கு. அவளை மனைவியாகவும், தீபாவை மகளாகவும் ஏத்துக்கணும்னு தோணிச்சு. அவ்வளவுதான்"

ஸாமும், கீதாவும் லோகநாதனுக்கு பெல்ட், கீதாவின் மகன்களுக்கு ஸல்வார் கமீஸ் என்று வாங்கிக் கொண்டு கிளம்பினார்கள். வீட்டில் இறங்கும் போது கீதா... "ஸாம், நான் இன்னிக்கு ராத்திரியே சீதாகிட்ட பேசிடறேன், வீ வில் மீட் டுமாரோ" என்று விடை பெற்றாள்.

இரவு தீபாவுக்கு சாதம் ஊட்டி, மடியில் தூங்கச் செய்த பிறகு, அக்காவும், தங்கையும் தனிமையில் அமர்ந்தனர். கீதா மதியம் தனக்கும், சாம்பசிவனுக்கும் நடந்த பேச்சு வார்த்தையை சீதாவிடம் வரி விடாமல் ஒப்பித்தாள்.

தலை குனிந்து கேட்டுக் கொண்டிருந்த சீதா திடீரெனத் திரும்பினாள். "கீதாக்கா, உலகத்துலே எந்த ஆண்பிள்ளையாவது இவ்வளவு நல்லவரா இருப்பார்னு நீ நம்பறியா?"

கீதா திடுக்கிட்டாள். "ஏன் அப்படிச் சொல்றே சீதா?"

"நான் சொல்லல்லை அக்கா, அனுபவம் சொல்லுது. ஆரம்பத்தில் ரமேஷ் அவங்கம்மா உசிரோட இருந்த ஒரு வருஷத்திலே எப்படியெல்லாம் வேஷம் ஆடினார் தெரியுமா. அது ஏன், என் கலியாணத்தும் போதே பெரிய மனுஷத்தனமாத்தானே இருந்தாங்க. தனியா ஒரு பொம்பளை அவங்க தயவுல வர்ற போதுதான் சுயரூபம் தெரியும்."

"சீதா, நான் அறிந்த வரையிலும் ஸாம் அந்த மாதிரியானவர் இல்லை. அவர் மாறிவிடுவாரோ என்று பயந்து, இன்னிக்கு வாய்ப்பை உதறணுமா? அதோட யோசித்துப் பாரு... ஒரு வாரத்திலே நான் ஊருக்குப் போயிடுவேன். ஆறு மாசத்திலே வரதராசு வீட்டைக் கேட்டுட்டு வந்திடுவான். நீ எங்கே போவே... சாப்பாட்டுக்கு என்ன செய்வே. உன் பொண்ணை எப்படி வளர்ப்பே. எல்லாத்துக்கும் மேலே, உலகமறியாத உனக்கும், உன் பெண்ணுக்கும் பாதுகாப்பு ஏது? நாம நல்லதையே நினைப்போம். நடக்கறபடி நடக்கட்டும். நான் உன்னைப் பத்திய கவலையாவது இல்லாமல் ஊருக்குப் போவேன்."

தயக்கத்துக்குப்பின்னே சீதா சம்மதித்தாள். மறுநாள் கீதாவையும், சீதாவையும் தன் தாயைச் சந்திக்க சாம்பசிவன் அழைத்துச் சென்றார்.

மந்தவெளியில் சிறிய வீடு. வெளிநாட்டு டீ.வி. டேப்ரிகார்டர், வாஷிங்மெஷின் என்று எல்லா சௌகரியமும் இருந்தது. எண்பதை எட்டும் சாம்பசிவனின் தாய் படுத்தபடியே சீதாவை மேலுங்கீழுமாய்ப் பார்த்தார். "எம்

---

**எந்த ஒரு குண்டலுக்கும் இறக்கும் போது சிறிது வெள்ளை எள்ளையும் ஒரு கொத்து கறிவேப்பிலையையும் வறுத்து, பொடித்துத் தூவினால் சுவையும், மணமும் கூடுதலாக இருக்கும்.**

**— ஜெயா**



பின்னை எல்லோருக்கும் எல்லாம் செய்துட்டான். இப்போ எனக்கு சமைத்துப் போட்டுக் கவனிச்சுக்குறான். அவனுக்குன்னு பொண்டாட்டி, குடும்பம் வேணுந்தான். அதுக்காக எவனோ தொட்ட பொம்பளையும், பெத்த கொழந்தையும் வரணுமா. எல்லாம் அவன் தலைவிதி. எம் பொண்ணு மலர்விழி காலையிலே விஷயம் கேட்டு அழுதா... "நம்ம குடும்பத்திலே இப்படி அசிங்கமான"னு. என்னத்த சொல்ல? என் காலம் இன்னும் ஒரு மாசமோ ஒரு வருஷமோ. அதுக்குப் பின்னால அக்கா, தங்கையில்லாம ஆயுடும்மா..."

சாம்பசிவன் கனைத்தார். "அம்மா, நான் யாரையும் விடப் போவதில்லை. அவங்களுக்கு நான் வேணாம்னா அது அவங்க இஷ்டம். சீதாவும், தீபாவும் ஒரு மாசத்துல இங்கே வரப் போறாங்க. அதுக்குள்ள மனசை சமாதானப் படுத்திக்குங்க." கோபமின்றி அன்பு, கண்டிப்பு இரண்டும் கலந்த குரலில் அவர் பேசியபோது, அந்த மூதாட்டி அடங்கிப் போனாள்.

சாம்பசிவன் அவர்களுக்கு காப்பி கலந்து தந்தார். பிரமை பிடித்தாற் போலிருந்த சீதாவை "ரிலாக்ஸ் சீதா, எல்லாம் சரியாகிவிடும்" என்று தைரியம் அளித்தார்.

மூன்றாவது நாள் சீதாவுக்குப் பட்டுப் புடைவை, குழந்தைக்கு பாவாடை வாங்கி வந்தார். கிதா ஊருக்குக் கிளம்பு முன் பத்திரிகை அடித்து, ரிஜிஸ்தர் ஆபீஸில் எழுதினார், சீதா கழுத்தில் தாலி கட்டி, மோதிரம் அணிவித்தார்.

கிதா மன நிம்மதியுடன் இருவரையும் வாழ்த்திவிட்டு ஊருக்குக் கிளம்பினாள்.

திருமணம் ரிஜிஸ்தரான தினம், "சீதா, எங்க உறவினர்களை இன்று விருந்துக்கு அழைத்திருக்கிறேன். உறவு எப்படியிருக்குமோ, உன்னை வேடிக்கை பார்க்கவாவது இன்று வருவார்கள்" என்று சிரித்தார்.

ரிஜிஸ்தரார் ஆபீஸிலிருந்து நேரே டாக்ஸியில் சாம்பசிவனின் வீட்டில் சென்று இறங்கினார்கள். சற்றும் எதிர்பாராத வண்ணம் தெரு வடைத்துக் கோலம். வாசலில் மாவிலை, வாழைமரம். டேப் ரிகார்டரில் நாதஸ்வரம்.

"நில்லுங்க, நில்லுங்க. ஆரத்தி எடுக்கறேன்." ஒரு பெண்மணி அவசர அவசரமா ஆரத்தி எடுத்தாள். "சீதா, இது பெரிய அக்கா பாக்யா."

"அட மாலை கூட போடல்லியா. ரோசா மாலை எடுத்துவாங்க. மாலை மாத்துங்க, என்னடீ பொண்ணு... உங்கம்மா கலியாணத்துக்கு நீ மாலை எடுத்துத் தர்றயா?" மாலையை தீபாவிடம் தந்தவளை, "ரெண்டாவது அக்கா மலர்விழி" என்று அறிமுகம் செய்து வைத்தார்.

"வாங்க. வலது காலை எடுத்து வச்சு உள்ள வாங்க..." இவள் தங்கையாக இருக்கணும்.

"மொதமுறை என்ன இடக்காலையா எடுத்து வச்சுப் போனாங்க." பெரிய 'ஜோக்' சொன்னதாக நினைத்துக் கொண்டு இடி, இடியென்று சிரித்தவள் அடுத்த தங்கையாக இருக்க வேண்டும்.

பயத்தில் சீதாவின் உடலில் வியர்வை பெருகியது. மறுபடியும் பயம். கோர்ட்டில் தனியாக நின்ற போது ஏற்பட்ட அதே பயம். அம்மா கடைசி மூச்சு விட்ட போது எழுந்த அதே பயம்.

"அக்கா, அக்கா..." திருவான்மியூரில் எதிர் வீட்டிலிருக்கும் கோபு அவசரமாக ஓடி வந்தான். மூச்சிரைத்தது. "அக்கா, உங்களைத் தேடிட்டு வந்திருக்காங்க. தீபாவோட அப்பா பாக்டரியிலே ஆக்ஸிடெண்டிலே இறந்து போயிட்டாராம். அவங்க பேக்டரிக்காரங்க கூட்டமா வந்திருக்காங்க." ஒரு நிமிட மௌனத்துக்குப் பிறகு, ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்தார்கள்.

"என்னது, இவ கலியாணத்தன்னிக்கே மொதப் புருஷன் செத்துட்டானா..."

"ஏண்டிம்மா, புதுத் தாலிக்கு சிரிப்பியா இல்லே தாலி அறுத்ததற்கு ஒப்பாரி வப்பியா?"

"பூவும் பொட்டும் கெடச்சதுன்னு சந்தோஷப்படுவியா இல்லே பொட்டழிஞ்சதுக்கு அழுவியா?"

"வெள்ளைப் புடைவை எடுப்பியா, இல்லை புதுப்புருஷனுக்கு பட்டு முந்தானை விரிப்பியா?"

வலுவற்ற ஒருத்தியை, அதே இனப் பெண் கழுகுகள் எக்காளத்துடன் வட்டமிட்டுக் கொத்த, சீதா நிலைகுலைந்து சரிந்தாள்.

(தொடரும்)

பழைய பவுடர் டப்பாக்களின் மேல் கலர் பேப்பரை ஒட்டி அதன் மேல் அழகிய பூக்களை நட்டு படிகளின் இரண்டு பக்கமும் வைக்கலாம். புதிய ப்ளவர்வாஸ் கிடைக்கும்.

— ஆர். மீனாட்சி

# இந்த மாதம் எப்படி?



## மேஷ ராசி :

*அசுவினி, பரணி, கிருத்திகை 1–ஆம் பாதம்.*

மாதத்தின் முற்பகுதியில் சூரியனால் சில இனங்களில் தனலாபம் வரும். அது அரசுத் துறையில் பணி புரிபவருக்குப் பதவி உயர்வு காரணமாகவும் வரலாம். அல்லது நிலுவைத் தொகையாகவும் இருக்கலாம். அது போலவே புதனும் பண வரவிற்கு உதவுவார். வியாபாரிகளுக்கு இலாபம் கூடுதலாக இருக்கும். ராகுவால் சில பிரச்சனைகள் தோன்றலாம். பிரயாணத்தின் போதும், வீட்டில் தூங்கும் போதும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. கைப்பொருள் இழப்பிற்கு ராகு, சனி ஆகியவர்கள் மட்டுமல்ல 10ல் உள்ள குருவும் ஒரு காரணமாகலாம். எட்டில் உள்ள சுக்கிரன் கணவன் மனைவி மக்களிடையே மகிழ்ச்சியையும் அன்பையும் அதிகமாக உண்டுபண்ணலாம். ஆட்சியில் உள்ள செவ்வாய் அனுகூலம் செய்யாவிடினும் பிரதிகூலம் செய்ய மாட்டார். புதிய கடன் ஒன்றை வாங்கி பழைய கடனை அடைப்பதற்கு செவ்வாய் உதவலாம். கேதுவால் எதிர்பாராத தனலாபம் ஒன்றை நீங்கள் அடையலாம். சனீஸ்வரப்ரீதிக்காக சாஸ்தாவுக்கு அர்ச்சனை செய்வது நல்லது. நமது நம்பிக்கைக்கு ஏற்ப கடவுளை எங்கும், எதனுள்ளும் காணலாம். பரிகாரங்களும் அத்தகைய ஆழ்ந்த நம்பிக்கை யுள்ளவர்களுக்கே பலன் தரும் என்பதை அனுபவபூர்வமாக அறியலாம்.



## ரிஷப ராசி :

*கிருத்திகை 2, 3, 4 –ஆம் பாதங்கள், ரோகிணி, மிருகசீரிஷம் 1, 2 – ஆம் பாதங்கள்.*

களஸ்திர ஸ்தானத்தில் உள்ள சுக்கிரன் செவ்வாயுடன் சேர்ந்து தாம்பத்திய உறவிற்கும் குடும்ப அமைதிக்கும் பங்கம் தரும் வகையில் சஞ்சரித்தாலும், விருச்சிகத்தில் செவ்வாய் ஆட்சி பெற்றதன் காரணமாக, 7மிடத்து தோஷம் நீங்கி குடும்பத்தில் மகிழ்ச்சி நிறைந்திருக்கும்படியான சூழ்நிலையே காணப்படும். ஆயினும் சுகஸ்தானத்தில் ராகு இருப்பதால் சில நேரங்களில் சிறு சிறு பிரச்சனை கூட பெரிதாக மாறி மனச் சஞ்சலத்தை உண்டாக்கலாம். எனவே துர்க்கைக்கு அர்ச்சனை செய்வது நல்லது. மற்றபடி உங்கள் ராசியை குரு பார்ப்பதாலும், ராசிக்கு யோககாரனாகிய சனி இலாபத்தில் குருவுடன் பரிவர்த்தனை பெறுவதாலும் உங்கள் முயற்சியில் அலுவலகப் பணிகளில் மற்றும் எந்தத் துறையில் எந்நிலையில் இருப்பினும் நன்மைகளை அதிகம் எதிர்பார்க்கலாம். பாம்புக் கிரகங்களின் சஞ்சாரம் சரியில்லை என்பதால் ஸ்ரீகணபதி, மற்றும் துர்க்கை இவர்களுக்கு அர்ச்சனை செய்வது நல்லது. மற்றபடி இந்த

**1997 October 1997**

| ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|
| | | | 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 |
| 26 | 27 | 28 | 29 | 30 | 31 | |



**வெற்றிலை பாக்கில் வைத்துக் கொடுப்பதற்கு சிறிய சுவாமி உருவங்கள் பேப்பர் மோல்டில் பத்து ரூபாயிலிருந்து கிடைக்கிறது. உங்கள் பட்ஜெட்டிற்கு ஏற்ப வாங்கிக் கொடுக்கலாம்.**

**— மஹிமா**

மாதத்தில் நீண்ட நாட்களாக முடிவடையாத இனத்தில் வெற்றி ஏற்பட்டு அதனால் தனலாபம் வரலாம். எல்லா கிரகங்களுமே பெரும்பாலும் சாதகமாக இருந்தாலும், உள்ளத்தாலும் உடலாலும் ஓய்வின்றி உழைக்க வேண்டிய மாதமாக அமையும். மண்காரகனும், கட்டிடக்காரகனும் சேர்ந்தே இராசியைப் பார்ப்பதால் சுட்டாயம் நிலமோ, வீடோ வாங்கும் வாய்ப்பு உண்டாகும்.

## மிதுன ராசி :



*மிருகசீரிஷம் 3, 4 – ஆம் பாதங்கள், திருவாதிரை, புனர் பூசம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.*

சுக்கிரனும், செவ்வாயும் மாதம் பூராவும் உதவும் நிலை. எனவே வீடு வாங்கவும் அல்லது வீடு கட்டவும் வாய்ப்பு உண்டு. 3-வது இடத்தில் உள்ள ராகுவால் குடும்பத்தில் சுகமும், செய்யும் தொழிலில் வெற்றியும் கிடைக்கும். எட்டில் உள்ள குருவால் உள்ளமும், உடலும் சற்று பாதிக்கப்படலாம். எனினும் மாதத்தின் முற்பகுதியில் இராசிநாதனாகிய புதன் உச்சம் பெற்று சூரியனுடன் இருப்பதால் மேற்படி சங்கடங்கள் குறைய வாய்ப்பு இருப்பினும் மாதத்தின் பிற்பகுதியில் சிரமத்தைத் தரலாம். சத்துரு, யோகஸ்தானத்தில் உள்ள சுக்கிரனும் செவ்வாயும் நல்லதையே அதிகம் செய்ய வேண்டும். செவ்வாயின் பார்வை ராசிக்கு இருப்பதால் கவலைப்படும்படி ஏதும் நடந்திடாது. இடீர் இடமாற்றத்திற்கோ, வேலை மாற்றத்திற்கோ குரு வழிகோலலாம். அதைத் தடுப்பது சற்று சிரமம். 10–ல் உள்ள சனியும் 9ல் உள்ள கேதுவும், பணவிரயத்தை உண்டுபண்ணலாம். எனவே சிக்கனத்துடன் இருப்பதுடன் நீங்களும் குருவை வணங்குதல் நல்லது. அல் லது சிவயோகிகள், சித்த புருஷர்கள் ஆகியவர்களை நாடி ஆசி பெறுதல் நல்லது எனத் தோன்றுகிறது. அத்துடன் மஞ்சள் வஸ்திரம் ஒன்றை வாங்கி அதை வேதவித்து அல்லது கோயிலில் உள்ள குருக்கள் போன்ற ஒருவருக்கு வியாழக்கிழமை தானம் செய்யலாம்.

## கடக ராசி :



*புனர்பூசம் 4-ஆம் பாதம், பூசம், ஆயில்யம்.*

இந்த மாதத்தில் முதல் இரண்டு வாரங்களில் சூரியனாலும், உச்ச புதனாலும் உங்களது அனைத்து செயல்களிலும் வெற்றியும், தனலாபமும் இருக்கும். புதன் மாதம் பூராவும் நன்கு சஞ்சரிப்பதால் இந்த இராசியில் பிறந்துள்ள குழந்தைகளுக்குக் கல்வியில் நல்லதொரு முன்னேற்றமுண்டு. தேர்வுகளில் நல்ல மதிப்பெண்களைப் பெற முடியும். குருவின் பார்வையும் இராசிக்கு இருப்பதால் குழந்தைகளால் பிரச்சினைகள் ஏற்படாது. 5-ல் உள்ள சுக்கிரனும் செவ்வாயும் மாதம் பூராவும் சுக்கிர மங்கள யோகத்தைத் தர இருப்பதால் சுபகாரியங்களும், தடைப்பட்ட திருமணம் அல்லது உத்தியோக உயர்வு எதிர்பார்த்தபடியே நடக்கும். கேதுவும், இராகுவும் சேர்ந்தே சில பிரச்னைகளை உருவாக்கலாம். அது வாகன சம்பந்தமாகவும் இருக்கும், அல்லது உடலில் ரத்தக் கட்டி, பித்த மயக்கம் போன்ற பாதிப்புகளும் ஏற்படலாம். எனினும் குருவின் பார்வையால் எத்தகைய பிரச்னையானாலும் எதன் மூலம் ஏற்பட்டாலும் கவலைப்படத் தேவையில்லை. எல்லாமே சரியாகி விடும். ராகு கேதுக்களுக்காக முறையே ஸ்ரீ துர்க்கை, ஸ்ரீ கணபதி இவர்களைத் துதிக்கலாம். சனிக்கும் அர்ச்சனை செய்யவும்.

## சிம்ம ராசி :



*மகம், பூரம், உத்திரம் 1 – ஆம் பாதம்.*

சுக்கிரனைத் தவிர மற்றவர்கள் உதவும் நிலையில் இல்லை என்றாலும் செவ்வாய் ஆட்சியில் இருப்பதாலும், புதன் மாத ஆரம்பத்தில் 2-ல் உச்சம் பெறுவதாலும் பிரச்சனைகள் அதிகம் ஏற்படாது. எனினும் சனி, கேது, ராகு ஆகியவர்களால் சிறு சிறு நச்சுத் தொந்தரவுகள்

ஏற்பட்டு மன அமைதியை இழக்க வேண்டி யிருக்கும். விரயஸ்தானத்தையும், 10, 12ம் இடங் களையும் குரு பார்ப்பதால் சுப விரயங்கள் ஏற்படலாம். கோர்ட் விவகாரங்களிலிருந்து சில வெற்றிகள் கிடைக்கலாம். மாதத்தின் பிற்பகுதியில் சூரியனால் சில நன்மைகள் அரசுத் துறையினர்க்கும், அரசியல் துறையி னருக்கும் ஏற்படும். பதவி உயர்வோ, வழக்கு களில் வெற்றியோ ஏற்படுவதற்குச் சூரியன் காரணமாகலாம். எட்டில் உள்ள சனியோ, ஆறில் உள்ள குருவோ உங்களுக்குப் பாதிப்பை ஏற்படுத்தாத நிலையில் அவர்கள் பரிவர்த் தனை பெற்றிருக்கிறார்கள். அத்துடன் தசா புத்தி நன்கு அமைந்தவர்களுக்கு எந்தக் கவ லையும் தேவையில்லை. நவக்கிரக சாந்தியோ, அல்லது வழிபாடோ செய்வது நல்லது. நீல நிறம், அல்லது மஞ்சள் நிறம் கொண்ட வஸ்திரம் தானம் செய்யலாம். மதாச்சாரி யார்கள், அல்லது ஜாதிமதம் பாராது தொண்டுகளைச் செய்து வரும் மகான்களைச் சந்தித்து ஆசி பெறலாம். ஏனெனில் இந்த மாதம் நவக்கிரக சஞ்சாரம் அப்படி அமைந் துள்ளது.



## கன்னி ராசி :

***உத்திரம் 2, 3, 4 – ஆம் பாதங்கள், ஹஸ்தம், சித்திரை 1, 2 – ஆம் பாதங்கள்.***

மாத ஆரம்பத்தில் இராசி நாதனாகிய புதன் உச்சம் பெற்று நன்கு சூரிய னுடன் சஞ்சரிக்கும் நிலை. அதனால் நினைத்தபடி காரியங்கள் அனுகூலமாக முடி யும். மாணவர்களுக்கு மகோன்னதமான மாதம். குருவின் பார்வை கோடி லாபத்தைத் தரும். கவலை வேண்டாம். சுக்கிரனும், செவ் வாயும் வெகு நேர்த்தியாகச் சஞ்சாரம் செய்வ தாலும் கேது, 6ல் இருப்பதாலும் சுபநிகழ்ச்சி கள் தடையின்றி நடக்கும். புத்திர பாக்கியம் உண்டாகும். குழந்தைக்காக எதிர்பார்ப்பவர் கள், அல்லது பிரார்த்தனை செய்து கொண் டிருப்பவர்கள், ஸ்ரீ சந்தான கோபாலகிருஷ்ண ஹோமத்தை மாத ஆரம்பத்தில் செய்யுங்கள். கட்டாயம் அருள் பெறுவீர்கள். அப்படிச் செய்ய முடியாதவர்கள் ஸ்ரீ சந்தான கோபால கிருஷ்ணயந்திரம் அணிந்து, மூலமந்திரத்தை 11 முறை சொல்லி வாருங்கள். கைமேல் பலன் கிடைக்கும். இந்த மாதத்தில் எழுதியுள்ள இந்த மந்திரத்தையே ஆத்மார்த்தமான, ஆழ்ந்த நம்பிக்கையுடன் உச்சரியுங்கள். மற்றபடி குருவுக்குரிய அர்ச்சனையைச் செய்யுங்கள். ஸ்ரீ துர்க்கை ஸ்தோத்திரத்தைக் கூறி வரவும்.



## துலா ராசி :

***சித்திரை 3, 4 –ஆம் பாதங்கள், சுவாதி, விசாகம் 1, 2, 3 – ஆம் பாதங்கள்.***

செல்வாக்குஸ்தானத்தில் செவ்வாய் ஆட்சியிலும், அவருடன் சுக்கிர னும் சேர்ந்திருப்பதாலும் இந்த மாதம் உங் களது செல்வாக்கும், குடும்ப நிலையும் நன்கு பரிமளிக்கும். பாராட்டும் பரிசும் கூட கிடைக் கலாம். 6ல் உள்ள சனீஸ்வரன் ரோக நிவர்த் தியையும், நீங்கள் எடுத்துள்ள முயற்சியில் வெற்றியையும் பெற ஆவன செய்வார். தனலாபம், தான்யலாபம் எதிர்பாராத வெற்றி ஆகிய அனைத்தையும் ராகு தரலாம். அதே சமயம் ஒரிரு இனங்களில் புத்திரர்களால் மனச்சங்கடங்கள் ஏற்படலாம். குருவை ஆராதியுங்கள். கோவில்களில் கடலைச் சுண் டல் செய்து பக்தர்களுக்கு விநியோகம் செய் வதன் மூலம் பரிகாரம் பெறலாம். நான்கில் குரு இருப்பதால் தாயாரின் உடல்நிலை பாதிக்கப்படலாம். மாதத்தின் முற்பகுதியில் புதனும் சூரியனும் சேர்ந்திருப்பதால் அக் காலக்கட்டத்தில் பலவிதங்களில் உங்களுக்கு வெற்றியும், மன மகிழ்ச்சியும் பிறரது பாராட் டுக்களும் கிடைக்கலாம். இது எத்துறையினர்க் கும் பொருந்தும். ஸ்ரீ ஹயக்கிரிவ ஸ்தோத்திரம்.



முள்ளங்கி என்றாலே சாம்பாரில்தான் போட வேண்டும் என்று இல்லை. ஒரு நூல்கோல், மூன்று முள்ளங்கியைப் பொடிப் பொடியாக நறுக்கி பயத்தம் பருப்பு போட்டு கூட்டு செய்தேன். வித்தி யாசமாக, நன்றாக இருந்தது. முள்ளங்கி இளசாக இருக்க வேண்டும்.

– சித்ரா ஸ்ரீதர்

ஸ்ரீ லக்ஷ்மி ஸ்தோத்திரம் படிக்கலாம். நாமக்கல் ஆஞ்சனேயரையும், ஸ்ரீ நாமகிரி சமேத ஸ்ரீ நரசிம்மரையும் தரிசித்து வரலாம். வசதி இல்லாதவர்கள் உங்கள் இல்லத்திலேயே மானசீகமாக வணங்குங்களேன். உங்கள் லக்கினம் தனகவானால் இந்த மாதம் கிரக மாலிகா யோகம் எனும் பலத்த யோகம் ஏற்படும்.

## விருச்சிக ராசி :



*விசாகம் 4 - ஆம் பாதம், அனுஷம், கேட்டை.*

புதனும், சூரியனும் மாதத்தின் முற்பகுதியில் உங்களுக்கு நல்லதைச் செய்வார்கள். அதனால் அரசாங்கத்திலிருந்து ஏதேனும் உதவியை எதிர்பார்த்துக் காத்திருப்பவர்களுக்கு அது இந்த மாதம் கைகூடிவரும். தேர்வுகளில் மாணவர்கள் நல்ல மதிப்பெண்களைப் பெறுவர். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவ புதனின் ஆசி கிடைக்கும். ஆனால் மாதத்தின் பிற்பகுதியில் இந்த நிலை நீடிக்காது. 10ல் இருக்கும் ராகு கல்வியிலோ, பணிபுரியும் இடத்திலோ சில பிரச்சினைகளை உருவாக்கலாம். இராசிநாதன், ஆட்சியில் இருப்பதுடன் சுக்கிரனுடன் சேர்ந்தே சஞ்சரிப்பதால் வீடு, அல்லது வீட்டுமனை வாங்கும் யோகம் ஏற்படலாம். வேலை மாற்றமும் கூட எதிர்பார்த்தபடி நடக்கலாம். தாயாரின் உடல் நிலை பாதிக்கப்படலாம். இந்த நிலை கேது 4ல் இருக்கும் வரை நீடிக்கும். உடல்நிலை பாதிக்கப்பட்டால் மிருத்யுஞ்சய ஹோமம் செய்வது அவசியம். சகோதரகாரகனாகிய செவ்வாய் பிதுர்காரகனாகிய ராகு ஆகிய இரு வரும் கேதுவைப் பார்ப்பதால்தான் பிரச்சனை. மற்றபடி ஏற்றத்தாழ்வுமிக்க மாதமே. இராசிக்குரிய அதிதேவதையான ஸ்ரீ சுப்பிரமணியனை ஆராதியுங்கள். அத்துடன் சனீஸ்வர வழிபாடும் அவசியம். இந்த இராசியில் பிறந்தவர்களுக்கு எதிர்பார்த்தபடி மக்கட் செல்வம் ஏற்படவில்லையெனில் ஸ்ரீ முஷ்ணம் சென்று இறைவனை சேவித்து வாருங்கள். கைமேல் பலன் உண்டு.

## தனுசு ராசி :



*மூலம், பூராடம், உத்திராடம் 1 - ஆம் பாதம்.*

மாதத்தின் பிற்பகுதியில் புதனும், சூரியனும் உதவும் நிலை. இதனால் மனைவி மக்களிடையே மகிழ்ச்சி நிலவும். அகத்தில் சுகம் நீடிக்கும் வண்ணம் புதன் அருள் புரிவார். சூரியனால் பொருளாதாரத்தில் ஸ்திரத்தன்மை இருக்கும். அரசாங்கத்திடமிருந்து எதிர்பார்க்கும் இனத்தில் வெற்றி கிடைக்கும். பாதிக்கப்பட்ட உடல்நிலை சரியாகும். தொழிலில் ஏற்பட்டிருந்த தடை அல்லது உத்தியோக விஷயத்தில் பதவி உயர்வு வந்த சமயம், எதிரிகளால் அதற்கு வாங்கப்பட்ட தடை உத்திரவு நீங்கி, இந்த மாதத்தில் மீண்டும் பதவி உயர்வு பெற சூரியன் உதவுவார். 3-ம் இடத்தில் உள்ள கேதுவால் தனலாபம் உண்டு. கோர்ட் விவகாரங்களில் வெற்றி உண்டு. 9-ம் இடத்து ராகுவால் தந்தையின் உடல் பாதிக்கப்படலாம். 2ல் குரு இருப்பதால் திருமணத்திற்கு இதுவரை இருந்து வந்த தடை நீங்கும். குடும்ப வாழ்க்

### சிறு விஷயம்தான்...

ஒரு சிறு பித்தளை மணி உங்கள் குடும்பத்தில் மிகுந்த சந்தோஷத்தையும், நிறைவையும் கொடுக்கும். செய்து பாருங்களேன். ஒரு பித்தளை மணியை எங்கள் வீட்டினுள் உள்ள நைலான் கயிறு கொடியில் கட்டி விட்டேன். வீட்டினுள் துணிகள் காயப் போடும்போதோ அல்லது அந்தத் துணிகள் ஃபேன் காற்றில் ஆடும்போதோ அந்த மணி கிணிங்... கிணிங்... என்ற நாதத்தை எழுப்பிக் கொண்டே இருக்கிறது. குழந்தைகளுக்கும், வேலை முடிந்து மாலையில் அயர்வாய் வீடு திரும்பும் பெரியவர்களுக்கும் மனசாந்தியை கொடுக்கிறது. நீங்களும் செய்து பாருங்களேன்.

— பத்மா கைலாசம்



மண் உண்டியலில் சுண்ணாம்பு (வெள்ளை) பூசி நன்றாக உலர்ந்த பின் நமக்குப் பிடித்த டிசைனைப் போட்டு அதில் வாட்டர் கலரில் கலர்களைத் தேர்ந்தெடுத்து அடித்து ஆறியபின் மேல் பகுதியில் காசு போடும் இடத்தில் பூங்கொத்துகளை பிளாஸ்டிக்கில் விற்பதை வாங்கிச் சொருகினால் வெகுஜோராக இருக்கும். நவராத்திரி கொலுவில் வைக்கலாம்.

- சித்ரா ரவீந்தர்



கையில் அமைதி நீடிக்கும். இராசிநாதன் நீச்சம் பெற்று, பாவக்கிரகமான சனியுடன் பரிவர்த்தனை பெற்றதால் கடினமான பல இனங்களில் வெற்றி உண்டு. ஒரு இடத்தை வாங்குவதாலோ வீடு ஒன்றைக் கட்ட ஆரம்பிப்பதாலோ விரயம் ஏற்படலாம். குருவையும் சனியையும், அங்காரகனையும் ஆராதியுங்கள். எல்லாம் நல்லபடி நடக்கும். குறிப்பாக நீங்கள் துலா லக்கினத்தில் பிறந்திருந்தால் இரகமாலிகா யோகம் எனும் பலத்த ராஜ யோகம் உண்டு. எதிர்பாராத தனலாபம் உண்டு.



## மகர ராசி :

***உத்திராடம் 2, 3, 4 – ஆம் பாதங்கள், திருவோணம், அவிட்டம் 1, 2 –ஆம் பாதங்கள்.***

சுக்கிர மங்கள யோகம் அனுபவிக்க வேண்டிய மாதம். 11ல் அப்படிப்பட்ட நிலையில் இரு கிரக சேர்க்கை உங்களது கிரகத்தில் மகிழ்ச்சி, மனநிம்மதி, பொருளாதார முன்னேற்றம் இவைகளை ஏற்படுத்தும் என்பதில் சந்தேகமில்லை. அத்துடன் 3-ம் இடத்தில் உள்ள சனி உங்களது தொழிலில் நல்லதொரு முன்னேற்றத்தைத் தர ஆவன செய்வார். மாதத்தின் பிற்பகுதியில் புதனும் நீச்சச் சூரியனும் சேர்ந்தே உதவும் நிலை. அதனால் உத்தியோகத்தில் உயர்வைப் பெறுவீர்கள். வீடு வாங்கும் யோகமும், சுபநிகழ்ச்சிகளை நடத்துகின்ற நிலையும் கூட ஏற்படும். மற்றபடி இதர கிரகங்கள் அவ்வளவு அனுகூலமான நிலையில் இல்லை எனலாம். குறிப்பாக ராகு, கேதுக்களாலோ, குருவாலோ நன்மை எதுவும் எதிர்பார்க்க இயலாது. தெருப்பு, மற்றும் மனப்பிராந்தி இவைகளால் தொல்லை ஏற்படலாம். கைப்பொருளை இழக்காமலிருக்க, பயணத்தின் போது எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியது அவசியம் எனத் தெரிகிறது. உடல் நோயும் முற்றி மன வருத்தத்தையும் உடல் பலவீனத்தையும் தரலாம். இதிலிருந்து விலக ஸ்ரீ கணபதி, நவக்கிரகம் மற்றும் ஸ்ரீ சுதர்சன ஹோமங்களையும் செய்யலாம். மற்றபடி அனுபவித்துக் கழிக்க வேண்டியதுதான்.



## கும்ப ராசி :

***அவிட்டம் 3, 4 – ஆம் பாதங்கள், சதயம், பூரட்டாதி 1, 2, 3 – ஆம் பாதங்கள்.***

கும்பராசி நேயர்கள் தற்போது குடத்தில் இட்ட விளக்கைப் போல் இருக்கிறீர்கள். ஆனால் அடுத்த மாதத்திலிருந்து அதே விளக்கு குன்றின் மேலேறி குவலயம் பூராவும் தெரியும்படி ஒளி வீசுகின்ற நற்காலம் ஆரம்பிக்க இருக்கிறது. எனவே தன்னம்பிக்கையும் ஆழ்ந்த இறை பக்தியும்தான் இப்போது தேவை. மாதத்தின் பிற்பகுதியில் சூரியன் 10க்கு வந்தாலும் நீச்சம்தான் அடைகிறான். நல்லதொரு தசா புத்தி நடைபெறுகிறவர்களுக்கு தடையின்றி அனைத்தும் நடக்கும். புதன் ஆட்சி பெற்று, குரு புத்தி நடப்பவர்களுக்கும், குரு ஆட்சி பெற்று, குரு, புதன் ஆகியவர்களின் புத்தி நடப்பவர்களுக்கும் எதிலும் நன்மை, எப்படியும் வெற்றி என்ற நிலை உண்டு. குறிப்பாக இந்த ராசிக்காரர்களின் தனுசு லக்கினமாக அமைந்தவர்களுக்கு தனலாபம் கூடுதலாக உண்டு. சனிக்கிழமைகளில் எள்ளெண்ணெய் ஸ்நானம் சனீஸ்வர ஸ்தோத்திரம் கூறி செய்யவும். இந்த இராசியில் பிறந்துள்ள குழந்தைகளுக்கு சனிக்கிழமை தோறும் வீட்டில் உள்ள மூத்தவர்கள் யாரேனும் ஸ்ரீ சனீஸ்வர ஸ்தோத்திரத்தைக் கூறி தலையிலிருந்து கால் வரை நல்லெண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்விப்பது நல்லது. அதனால் கல்வியில் முன்னேற்றம்

## மாதம் ஒரு மந்திரம்

ஒரு சமயம் பார்வதி தேவியார் பரம சிவனைப் பார்த்துப் புத்திர தோஷம் நீங்குவதற் குரிய வழிமுறைகள் யாது எனக் கேட்டார். அதனால் பரமசிவனும் புத்திர தோஷத்திற் குரிய காரண காரியங்களை விளக்கியதுடன், ஸ்ரீ சந்தான கோபால கிருஷ்ண மந்திரத்தை யும் கூறி அதற்கான ஹோம முறைகள், யந்த்ரம் ஆகியவைகளைப் பற்றியும் விளக்கினார். சாக்ஷாத் பரமசிவன் திருவாய் மலர்ந்தருளிய ஸ்ரீ சந்தான-கோபால கிருஷ்ண மந்த்ரம் கீழே தரப்படுகிறது.

*க்லாம் — க்லீம் — க்லூம்*
*தேவகிஸுத கோவிந்த வாஸுதேவ*
*ஜகத்பதே*
*தேஹிமே தநயம் க்ருஷ்ணத்வாம ஹம்*
*சரணம் கத :*
*தேவ தேவ ஜகன்னாத கோத்ர*
*விருத்திகாப்ரபோ*
*தேஹிமே தநயம் சீக்ரம் ஆயுஷ்மந்தம்*
*யஸஸ்வினம்*

பொருள் :

'தேவகியின் மைந்தனே! பசுக்களுக்குப் பரம சந்தோஷத்தை அளிப்பவனே! வாசு தேவனின் புத்திரனே! இவ்வுலகிற்கெல்லாம் தலைவனாகிய கிருஷ்ணா! உன்னைச் சரணடைந்தேன். உத்தம புத்திரன் உண்டாகும் படி அருள் செய். தேவர்களுக்கெல்லாம் தேவனே! ஜகன்னாதா! நான் பிறந்துள்ள கோத்திரத்தின் சந்ததியை விருத்தி செய்கின்ற அருளைத் தருகின்ற தயாளா! நீண்ட ஆயுளைக் கொண்டுள்ள குழந்தையை உடனே எனக்குத் தந்தருள்வாயாக!'

மக்கட்பேறு வேண்டிக் காத்திருப்பவர்கள் மேற்படி ஸ்லோகத்தை ஆழ்ந்த, ஆத்மார்த்த மான நம்பிக்கையுடன் கூடிய பக்தி சிரத்தை யுடன் காலையில் அனுதினமும் 11 தட வைக்கும் குறையாமல் சொல்லி வந்தால் கட்டாயம் புத்திரப்பேறு உண்டாகும். ஏற் கெனவே மக்களைப் பெற்றுள்ள மகராசிகள், தங்கள் குழந்தைகளுக்கும் புத்திர தோஷங் களிலிருந்து அவர்கள் விடுபட்டு நீண்ட ஆயுளுடன் வாழ்வதற்கும் இந்த மந்திரத்தை ஜபிக்கலாம். ஆனால் எந்த மந்திரத்தையும் வேதமறிந்த ஒருவரை அணுகி தவறில்லாமல் உச்சரிக்கத்தக்க உபதேசத்தைப் பெற்றே ஜபிக்க வேண்டும்.

**— ஜெயலட்சுமி கிருஷ்ணன்**



எங்கள் கிளப் பிரசிடெண்ட் நவராத்திரி யின் போது பெண்களின் அதி அவசியமான தேவையான கிச்சன் கன்டெயினர், காஸ் லைட்டர் என்று பார்த்துப் பார்த்து வாங்கித் தந்து வருடந்தோறும் எங்களை மகிழ்விக் கிறார். மற்றவர்களும் இதைப் பின்பற்றலாமே.
— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்.

ஏற்படும்.



## மீன ராசி :

*பூரட்டாதி 4 – ஆம் பாதம், உத்திரட்டாதி, ரேவதி.*

ஆறாம் இடத்தில் உள்ள ராகுவும், 11ம் இடத்து குருவும், 9மிடத்துச் சுக்கிரனும் உங்களுக்குத் தேவை யானதைத் தர இருக்கிறார்கள். அதாவது மனி தனுக்குத் தேவை பணம்-வீடு, உடை, அத்துடன் மிக அவசியமான மனச் சந்துஷ்டி. இத்தனையும் உங்களுக்குக் கிடைக்கும். கவலை வேண்டாம். 7ம் வீட்டில் உள்ள சூரியனும் புதனும் குருவால் பார்க்கப்படுகின்ற மாதத் தின் முற்பகுதியில் நல்லதைத்தான் செய்வார். புதன் உச்சமும் பெற்றுள்ளாரல்லவா? அரசுப் பணியாளர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும் எதிர்பாராத பதவி இலாபம் ஏற்படலாம். தொழில் துறையில் முன்னேற்றம் உண்டு. புதுத் தொழில்கள் ஆரம்பிக்கலாம். தடைப்பட்ட திருமணம் நடந்து தலை தீபாவளியும் கொண் டாட முடியும். செவ்வாய் சுக்கிரனுடன் சேர்ந்து சுபமங்கள யோகத்தைத் தருவதால் வீடு கட்டவோ, அல்லது நல்ல விலைக்கு விற்று, வேறு ஒன்று வாங்கவோ முடியும். எதற் கும், எத்துறையினர்க்கும் முயற்சி செய்வது இன்றியமையாததாகும். நல்லதொரு புஷ்பரா கக் கல்லை தங்கத்தில் வைத்துக் கட்டி மோதி ரம் டாலர் எனப் போட்டுக் கொள்வது நல் லது. மோதிர விரலில்தான் போட வேண்டும். மற்றபடி உங்களூரில் உள்ள, அல்லது அருகில் உள்ள சிவாலயங்களுக்குச் சென்று கல்லால மரத்தின் கீழ் அமர்ந்திருக்கும் குருவின் சன்னதியில் 10 நிமிடம் அமைதியாக தியானம் செய்வது நல்லது.

# சக்தி சோயா பைட்

அனைவருக்கும் இன்றியமையாதது
ஏனெனில் இதில் 50% புரதச்சத்து உள்ளது

சோயாவில் இருக்கும்
முழுமையான புரதம், விட்டமின்
மற்றும் மினரல் சக்திகளை
இழக்காமல் எக்ஸ்ட்ரூசன்
முறையில் தயாரிக்கப்படும்
சோயா உருண்டைகள்தான்
சக்தி சோயா பைட்.
சக்தி சோயா பைட் கொழுப்பு
சத்து அற்றது. உடலின்
கொலஸ்டிரால் அளவை
கட்டுப்படுத்த வல்லது.

எழுதுங்கள்
இலவச
சமையல் குறிப்பு
புத்தகத்திற்கு




200 கிராம்
பாக்கெட்
ரூ 12.00
மட்டுமே

## சக்தி சோயாஸ்

(சக்தி சுகர்ஸ் லிமிட்டடின் அங்கம்)

180, ரேஸ்கோர்ஸ், கோயமுத்தூர் 641 018. போன்: 214421, 214422 பேக்ஸ்: 217329.

**உலகத்திலேயே அதிக புரதச்சத்துள்ள உணவு**

Maa Bozell - CBE/1101/97



இப் புகைப்படத்தில் காணும் எண்ணற்ற குழந்தைகள் சிவானந்த குருகுலத்தில் சேர்க்கப்பட்டு அன்பும், அரவணைப்பும் கிடைக்கப் பெற்று இலவச கல்வி, உணவு, உடை, இருக்க இருப்பிடம் அளிக்கப்பட்டு தங்களுடைய கருணையால் அமைதியான சூழ்நிலையில் வளர்கின்றனர்.

இப்படிப்பட்ட எண்ணற்ற சிறார்களுக்கு மனமகிழ்ச்சி தருவது தங்களுடைய அன்பும், ஆசியும், பொருளுதவியும்.

வருகின்ற தீபாவளித் திருநாளை புத்தாடை, இனிப்பு, பட்டாசுகளுடன் சிறப்பாக கொண்டாட உங்கள் உதவியை நாடுகிறோம். இத்தீபாவளித் திருநாளை தங்கள் குடும்பத்தாருடன் மகிழ்ச்சியுடனும், குதூகலத்துடனும் கொண்டாட எங்கள் பிரார்த்தனையுடன் மகிழ்ச்சியையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவானந்த ஆசிரமத்திலுள்ள சுமார் 300 ஆதரவற்ற குழந்தைகளும், முதியோர்களும் இந்தத் தீபாவளி திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்தபட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத்திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூரணமாக நிறைவேறும் என்பதோடல்லாமல் இந்நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோரும் பயன்பெறுவர்.

**சிவானந்த ஆசிரமத்திற்கு அளிக்கப்படும் நன்கொடைகளுக்கு வருமானவரி இலாகாவின் பிரிவு 80G படிவத்தின்படி விலக்கு சான்றிதழ் உண்டு.**

பொதுமக்கள் அன்புடன் அளிக்க விரும்பும் நன்கொடை - பணம், பொருள் எதுவாக இருந்தாலும் இக் குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக.

நிர்வாகி,
"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"
நெ. 20, கம்பர் தெரு,
கிழக்கு தாம்பரம்,
சென்னை - 600 059.
தொலைபேசி எண்கள் : 2369078, 2369444.

# 'நவ' சுண்டல் 'நவ' பாயசம்

நவராத்திரி ஒன்பது நாட்களும் சுண்டல் செய்வது வழக்கம். நவக்கிரகங்கள் ஒவ்வொன்றிற்கும் ஒவ்வொரு தான்யமே ப்ரீதியாகக் கூறப்படுகிறது. அப்படியிருக்கும்போது அந்தந்த நாளுக்குரிய கிரகத்திற்குப் ப்ரீதி செய்யும் வகையில் சுண்டல் செய்யலாமே! சிறப்பான முறையில் 'நைவேத்யம்' செய்தோம் என்று இருக்குமே!

## சூரியன் : கோதுமை — ஞாயிற்றுக்கிழமை

### கோதுமை சுண்டல்

*தேவையான பொருட்கள் :*
கோதுமை – 200 கிராம்,
வற்றல் மிளகாய் – 6,
தனியா – 2 மேஜைக் கரண்டி,
பெருங்காயம் – சிறிய துண்டு,
தேங்காய்த் துருவல் – 1 மேசைக்கரண்டி,
உப்பு – 1 தேக்கரண்டி,
மஞ்சள் பொடி – ¼ தேக்கரண்டி,
தாளிக்க – எண்ணெய் 1 மேஜைக்கரண்டி, கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை.

*செய்முறை :*
கோதுமையை முதல் நாள் காலையிலேயே சுத்தம் செய்து ஊறவைக்க வேண்டும். இரவு கோதுமையை தண்ணீர் இல்லாது வடித்தெடுத்து துணியில் மூட்டை கட்டி வைக்கவும். மறுநாள் மாலைக்கு அதில் கொஞ்சமாக முளை வந்திருக்கும். முளை வந்த தானியத்தில் சத்து அதிகம். அந்த கோதுமையை குக்கரில் வைத்து, மஞ்சள் பொடியுடன் வேகவைக்கவும். வெந்ததும் தண்ணீரில்லாது வடித்து வைக்கவும். வாணலியில் பாதி எண்ணெய் விட்டு, பெருங்காயம், மிளகாய் வற்றல், தனியாவை வறுத்து, உப்பு போட்டு பொடி செய்யவும். மீதி பாதி எண்ணெயை வாணலியில் விட்டு கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை, தேங்காய் போட்டு தாளித்து அதில் வேக வைத்த கோதுமையையும், மிளகாய், தனியா, பெருங்காயம், உப்புப் பொடி செய்ததையும் போட்டு நன்றாக வதக்கி எடுக்கவும். சிறிய தீயில் வதக்கினால் கோதுமையில் உப்பு, காரம் நன்றாகக் கலக்கும்.



• சாந்தா ராமானுஜம்

### கோதுமை ரவை பாயசம்

*தேவையான பொருட்கள் :*
கோதுமை ரவை – 100 கிராம்,
சர்க்கரை – 200 கிராம்,
பால் – 1 லிட்டர்,
முந்திரி, திராட்சை – 1 மேஜைக்கரண்டி,
நெய் – 2 மேஜைக்கரண்டி,
ஏலக்காய்ப் பொடி – ¼ தேக்கரண்டி.

*செய்முறை :*
வாணலியில் நெய் விட்டு, முந்திரி, திராட்சையை பொன்னிறமாக வறுத்து எடுத்துக் கொண்டு மீதி நெய்யில் கோதுமை ரவையை வாசனை வரும் வரை வறுக்க வேண்டும். அடிகனமான பாத்திரத்தில் இரண்டு பங்கு தண்ணீர் விட்டு கொதிக்க வைத்து, வறுத்த ரவையை வேகவைக்க வேண்டும். வெந்ததும், சர்க்கரை போட்டு 2 கொதி வந்ததும் இறக்கி, நன்றாகக் காய்ச்சின பாலையும், முந்திரி, திராட்சை, ஏலப்பொடியையும் போட்டு இறக்கவும்.

## சந்திரன் : நெல் (அரிசி) திங்கட்கிழமை

### புட்டு

*தேவையான பொருட்கள் :*
அரிசி நொய் (மெல்லியது)




## "கடலங்குடி"யின்
# அரிய வாய்ப்புகள்



விஜயதசமி வெற்றிக்குகந்த நாள். அந்நாளில் October 11,97 தபால் வழி ஜோதிடம், தபால் வழி ஓவிய வகுப்புகளில் சேர்ந்து பயனடையுங்கள்.

அறிமுகச் சிறப்புச் சலுகையாக ஓவியக்கலையில் சேரும் முதல் 50 மாணவர்களுக்கு ஓவியப் பாடங்களின் விலையில் ரூ.250/- தள்ளுபடியிலும், மேலும் அவர்கள் ஜோதிட வகுப்பிலும் சேர்ந்தால் ஜோதிடப் பாடங்களின் விலையில் 5% சலுகைத் தள்ளுபடியும் கொடுக்கப்படும். இச் சலுகை October 11,97வரைதான்.

## ஜோதிடம் தபாலில் கற்கலாம் (தமிழ்/English)

ஜோதிட கலாநிதி டாக்டர் கே. என். சரஸ்வதி தம்முடைய 50 ஆண்டு ஜோதிட அனுபவமும், பரம்பரைக் கலைஞானமும் பலருக்கும் பயன்படும் முறையில் தபால் மூலம் அடிப்படை ஜோதிடம் கற்க ஓர் எளிய முறையை உருவாக்கி 20 வருட காலமாக நடத்தி வருகிறார். முன்னோடியாக திகழும் இந்தப் பாட திட்டத்தின் மூலம் பல்லாயிரக் கணக்கான உள்நாட்டு, வெளிநாட்டோர் பயன் அடைந்துள்ளனர்.

4 மாத முடிவில் கடலங்குடி ஜோதிட ஆராய்ச்சி மையம் என்ற அமைப்பின் சார்பில் அருமையான டிப்ளமோ (DHA) வழங்கப்படும்.

அட்மிஷன் பாரம், கட்டணம், பாட திட்டம் முதலான எல்லா விவரங்களடங்கிய Prospectus ரூ.22/ தமிழிற்கும், ரூ. 21/-Englishக்கும் M.O. செய்யவும். வெளி நாட்டவர் விவரம் அறிய £ 2-Un Crossed British Postal Order அனுப்புக.

**பின்குறிப்பு:** டாக்டர் K.N.S.ன் துல்லியமான ஜாதகப் பலன்களுக்கு தொடர்பு கொள்க. Personal Consultation between 3 p.m. and 6 p.m. With prior appointment only. Ph: 4343406

**KADALANGUDI ASTROLOGICAL RESEARCH CENTRE**
#38,Natesa Iyer Street, T. Nagar, Madras - 17.

## ஓவியம் தபாலில் கற்று நீங்களும் ஓவியராகலாம்
(தமிழில் மட்டும்)

அறுபத்து நான்கு கலைகளில் ஒன்றான ஓவியக் கலையை Dr. K.N.S. பலருக்கும் பயன்படும் முறையில், எவ்வயதினரும் எளிதாக வீட்டிலிருந்தே ஓவியம் வரைய கற்பிக்கும் 5 மாத கோர்ஸை தபாலில் கற்க தயாரித்துள்ளார்.

இதில் கோடுகள் மூலம் படங்கள், மனித உருவம், உறுப்புகள், மரம், செடி, கொடி முதலியன, விலங்குகள், கார்டூன்கள், டிசைன்கள், வாஷ்டிராயிங், வர்ணம் தீட்டும் முறைகள் Modern Art, இன்னும் பல விரிவான விளக்கங்களுடன். ஐந்து பகுதிகள் கொண்ட இந்த கோர்ஸில் கேள்வித் தாள்களும் உள்ளன.

5 மாத முடிவில் கடலங்குடி ஓவிய மையம் என்ற அமைப்பின் சார்பில் அருமையான டிப்ளமோ (D.C.A) வழங்கப்படும்.

அட்மிஷன் பாரம், கட்டணம், பாட திட்டம் முதலான எல்லா விவரங்களடங்கிய Prospectus ரூ. 20/- M.O. செய்யவும். வெளி நாட்டவர் விவரம் அறிய £ 2/-Un Crossed British Postal Order அனுப்புக.

**KADALANGUDI ART CENTRE**
#38,Natesa Iyer Street, T. Nagar, Madras - 17.

- 200 கிராம்,
வெல்லம் - 250 கிராம்,
மஞ்சள் பொடி - 1 சிட்டிகை,
தேங்காய்த் துருவல் - ½ கப்,
உப்பு - 1 சிட்டிகை,
கடலை பருப்பு/துவரம் பருப்பு - 1 மேஜைக்கரண்டி,
ஏலப்பொடி - ¼ தேக்கரண்டி,
நெய் - 1 மேஜைக்கரண்டி,
முந்திரி - 1 மேஜைக்கரண்டி.

***செய்முறை :***

வாணலியில் நெய் வைத்து முதலில் முந்திரியை பொன்னிறமாக வறுத்து, பின் அதே நெய்யில் அரிசி நொய்யை நன்றாகச் சிவக்க வறுக்க வேண்டும். குக்கரில் தண்ணீர் கொதிக்க வைத்து, வறுத்த ரவை, மஞ்சள் பொடி, உப்பு, தேங்காய்த் துருவல் கலவையில் கொதிக்கும் தண்ணீரைக் கொஞ்சம் கொஞ்சமாகத் தெளித்துக் கலந்து கொள்ள வேண்டும். அதை ஒரு ஈரத்துணியில் கொட்டி மூடி அதை ஒரு ஜல்லித் தட்டில் வைக்கவும். ஒரு சிறிய பாத்திரத்தில் கடலை பருப்பை, பருப்பு முழுகும் அளவு தண்ணீர் விட்டு குக்கரில் வைத்து மேலே நொய் மூட்டை வைத்த ஜல்லித்தட்டை வைத்து 10 நிமிடம் வேகவைக்கவும். பிறகு துணியில் இருக்கும் நொய் கலவையை உதிர்த்துக் கொள்ள வேண்டும். வெந்த கடலை பருப்பில் உள்ள தண்ணீரில் வெல்லத்தைக் கரைய வைத்து வடிகட்டி, அந்தத் தண்ணீரை வாணலியில் கொட்ட வேண்டும். அதில் உதிர்த்த நொய், வெந்த கடலை பருப்பு விட்டு நன்றாகக் கிளற வேண்டும். கைக்கு ஒட்டாது பொடிப் பொடியாக வந்ததும் இறக்கி, முந்திரி, ஏலக்காய் போட்டுக் கலக்கவும்.

அடுக்கு இட்லி தட்டுகளின், அடிபாகத்திலும் லேசாக எண்ணெய் தடவினால், இட்லி மேல் தட்டில் ஒட்டாமல் வரும்.

- ஆர். பார்வதி



## அரிசிப் பாயசம்

***தேவையான பொருட்கள் :***

அரிசி - 50 கிராம்,
சர்க்கரை - 150 கிராம்,
பால் - ½ லிட்டர்,
நெய் - 1 மேஜைக்கரண்டி,
முந்திரி, திராட்சை - 1 மேஜைக்கரண்டி,
ஜாதிக்காய்ப் பொடி, ஏலக்காய்ப் பொடி - 1 சிட்டிகை.

***செய்முறை :***

அரிசியைக் களைந்து பத்து நிமிடம் ஆற வைத்து வைக்கவும். வாணலியில் நெய் விட்டு முந்திரி, திராட்சை பொன்னிறமாக வறுத்து எடுத்து வைக்கவும். மீதி நெய்யில் அரிசியை சிறிது வறுத்து அதை குழைவாக வேக வைக்கவும். பின் சர்க்கரை போட்டு 2 கொதி வந்ததும் இறக்கி வைத்து பால், முந்திரி, திராட்சை, ஏலப்பொடி, ஜாதிக்காய்ப் பொடி போட்டு கலந்து வைக்கவும்.

## 3. அங்காரகன் – செவ்வாய் கிழமை : துவரை

***தேவையான பொருட்கள் :***

துவரை - 200 கிராம்,
மிளகாய் வற்றல் - 3,
கடுகு - ½ தேக்கரண்டி,
உளுத்தம் பருப்பு - ½ மேஜைக்கரண்டி,
தேங்காய்த் துருவல் - 1 மேஜைக்கரண்டி,
எண்ணெய் - 1 மேஜைக்கரண்டி,
மிளகாய்ப் பொடி - ½ தேக்கரண்டி,
உப்புப் பொடி - ¾ தேக்கரண்டி,
மஞ்சள் பொடி - 1 சிட்டிகை,
பெருங்காயப் பொடி - ¼ தேக்கரண்டி,
கருவேப்பிலை - கொஞ்சம்.

***செய்முறை :***

முழு துவரையை முந்நாள் காலையிலேயே ஊறவைக்கவும். இரவு அதை தண்ணீரில்லாது ஒரு துணியில் கட்டி வைக்கவும். மறுநாள் மாலை சிறிய முளைகளுடன் கட்டிய துவரையை குக்கரில் மஞ்சள் பொடியுடன் கொஞ்சமாக தண்ணீர் விட்டு வேகவைக்கவும். வெந்தபின் எடுத்து வடிதட்டில் போட்டு தண்ணீர் இல்லாது வைக்கவும். அடுப்பில் வாணலியை வைத்து எண்ணெய் விடவும். எண்ணெய் காய்ந்ததும் மிளகாயைக் கிள்ளிப் போட்டு கடுகு, உளுத்தம் பருப்பை வறுக்கவும். பின்பு கருவேப்பிலை, தேங்காய்த் துருவல்,

உப்புப் பொடி, மிளகாய்ப் பொடி, பெருங் காயப் பொடி போட்டு புரட்டி எடுத்து, வேக வைத்த துவரையையும் போட்டு 10 நிமிடம் வதக்கவும் (சிறு தீயில்). இந்தச் சுண்டல், முளைக்கட்டியதால் நல்ல சத்துள்ளதாகவும், ருசியாகவும் இருக்கும்.

### கசகசா பாயஸம்

*தேவையான பொருட்கள் :*

கசகசா – 50 கிராம்,
தேங்காய்த் துருவல் – 2 மேஜைக்கரண்டி,
அரிசி – 1 மேஜைக்கரண்டி,
சர்க்கரை – 150 கிராம்,
பால் – ¾ லிட்டர்,
ஏலக்காய்ப் பொடி – ¼ தேக்கரண்டி,
குங்குமப்பூ – 1 சிட்டிகை,
கேசரி பவுடர் – 1 சிட்டிகை.

*செய்முறை :*

கசகசா, தேங்காய்த் துருவல், அரிசி மூன்றையும், முழுகும் அளவிற்குக் கொதிக்கும் நீர் விட்டு அரை மணி நேரம் ஊறவைக்கவும். பின்பு அதை மிக்ஸியில், வெண்ணெய் போன்று நன்றாக அரைக்கவும். அரைத்த தண்ணீர் 4 தம்ளர் இருக்கும். அதை நன்றாக 10 நிமிடம் கொதிக்க வைக்கவும். பின்பு சர்க்கரை போட்டு கொதிக்க வைத்து கீழே இறக்கினதும், நன்றாகக் காய்ச்சின பால், ஏலக் காய்ப் பொடி, குங்குமப்பூ, கேசரி பவுடர் போட்டுக் கலக்கவும். இது உடம்பிற்குக் குளிர்ச்சி தரும் பாயஸம். மிகவும் ருசியாக இருக்கும்.

## 4. புதன் – பயறு – புதன் கிழமை

### பயறு சுண்டல் :

*தேவையான பொருட்கள் :*

பச்சைப் பயறு – 200 கிராம்,
பச்சை மிளகாய் - 4 (சிறிய துண்டுகளாக நறுக்கவும்),
இஞ்சி – சிறிய துண்டு,
எலுமிச்சம் பழம் – 1 (பெரியது),
கருவேப்பிலை, கொத்துமல்லி – கொஞ்சம்,
தேங்காய்த் துருவல் – 2 மேஜைக்கரண்டி,
பெருங்காயப் பொடி – ¼ தேக்கரண்டி,
உப்புப் பொடி – 1 தேக்கரண்டி,
தாளிக்க – கடுகு, உ. பருப்பு,
எண்ணெய் – 1 தேக்கரண்டி.



கட்லட்டிற்கு பிரட் தூளில் புரட்டிப் போடுவதற்குப் பதில், மைதாவில் தோய்த்த வெஜிடபிள் கலவையை பொடியாக நறுக்கிய கீரை/ கொத்துமல்லி (அ) தேங்காய்த் துருவல்/காரட் துருவலில் நன்கு இருபுறமும் புரட்டித் தவாவில் போட ருசியுடன், மணத்துடன் இருக்கும்.

– லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

*செய்முறை :*

பச்சைப் பயறை முன் சொன்னபடி செய்து முளைகட்டவும். அதில் தேங்காய்த் துருவல், கருவேப்பிலை, கொத்துமல்லி சேர்க்கவும். அடுப்பில் வாணலியை வைத்து எண்ணெய் விட்டுக் காய்ந்ததும் கடுகு, உ. பருப்பு தாளித்து, பச்சை மிளகாய் துண்டுகள், இஞ்சித் துண்டுகள் பெருங்காயப் பொடி, உப்புப் பொடி போட்டு, புரட்டி எடுத்து, பயறுடன் (பச்சையானது) கலக்கவும். எலுமிச்சம் பழம் பிழிந்து கலக்கவும்.

### பச்சை பருப்புப் பாயஸம்

*தேவையான பொருட்கள் :*

பாசிப் பருப்பு (பயற்றம் பருப்பு) – 50 கிராம்,
சர்க்கரை – 150 கிராம்,
பால் – 1 லிட்டர்,
கொப்பரைத் துண்டுகள் – 1 மேஜைக்கரண்டி,
நெய் – 1 மேஜைக்கரண்டி,
ஏலக்காய்ப் பொடி – ¼ தேக்கரண்டி.

*செய்முறை :*

அடுப்பில் வாணலியை வைத்து நெய் விட்டு, கொப்பரைத் துண்டுகளை சிவக்க வறுத்துத் தனியாக எடுத்து வைக்கவும். பின்பு பாசிப்பருப்பை சிறிது வறுக்கவும். பின்பு குழைய வேகவைக்கவும். பின்பு சர்க்கரையை, சிறிது தண்ணீர் விட்டு கரைத்துக் கொண்டு கொதிக்க வைக்கவும். 2 கொதி வந்ததும்

இறக்கி, நன்றாகக் காய்ச்சின பால், ஏலக்காய்ப் பொடி, வறுத்த கொப்பரைத் துண்டுகள் போட்டுக் கலக்கவும். இதை (பருப்பை) நெய்யில் வறுத்து வேகவைத்தால் மிகவும் ருசியாக இருக்கும். கொப்பரைக்குப் பதில் முந்திரிப் பருப்புத் துண்டுகளும் போடலாம்.

## 5. குரு கடலை — வியாழக்கிழமை

### கடலை சுண்டல்

*தேவையான பொருட்கள் :*

கடலை - 200 கிராம்,
தேங்காய் சிறிய சிறிய துண்டுகள் - ½ கப்,
மிளகாய் வற்றல் - 6,
கடுகு, உ. பருப்பு - தாளிக்க
கருவேப்பிலை - கொஞ்சம்,
உப்புப் பொடி - 1 தேக்கரண்டி,
பெருங்காயப் பொடி - ¼ தேக்கரண்டி,
மஞ்சள் பொடி - 1 சிட்டிகை,
எண்ணெய் - 1 மேஜைக்கரண்டி.

*செய்முறை :*

கடலையை முந்நாள் இரவு ஊறவைத்து, மறுநாள் அலம்பி குக்கரில் கொஞ்சமாக தண்ணீர் விட்டு மஞ்சள் பொடியுடன் வேக வைக்கவும். வெந்த பின்பு தண்ணீர் இல்லாது வடிய வைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு அடுப்பில் வைத்துக் காய்ந்ததும், மிளகாய் கிள்ளிப் போட்டு, கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை, தேங்காய்த் துண்டுகளை வதக்கி, வேகவைத்த கடலை, உப்புப் பொடி, பெருங்காயப் பொடி போட்டு நன்றாகக் கிளறி இறக்கவும்.

### கடலை மாவு பாயஸம்

*தேவையான பொருட்கள் :*

கடலை மாவு - 2 மேஜைக்கரண்டி,
நெய் - 2 மேஜைக்கரண்டி,
சர்க்கரை - 200 கிராம்;
பால் - 1 லிட்டர்,
ஏலக்காய்ப் பொடி அல்லது பாதாம் எஸன்ஸ் - 2 சொட்டு,
குங்குமப்பூ - ¼ தேக்கரண்டி,
தண்ணீர் - 1 லிட்டர்.

*செய்முறை :*

அடுப்பில் அடி கனமான பாத்திரத்தை வைத்து நெய் விட்டு, கடலை மாவை நன்றாக வறுக்கவும். அதில் 1 லிட்டர் தண்ணீரைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டு மாவு கட்டி தட்டாமல் கொதிக்க வைக்கவும். 5 நிமிடம் கொதித்ததும் சர்க்கரையையும் போட்டு கொதிக்க வைக்கவும். பின் கீழே இறக்கி கண்டக் காய்ச்சின பால், எஸன்ஸ், குங்குமப் பூ போட்டுக் கலக்கவும். இது 10 நிமிடத்தில் தயாரிக்கும் அவசர பாயஸம். மிகவும் ருசியாக இருக்கும்.

## 6. சுக்கிரன் — மொச்சை — வெள்ளிக்கிழமை

### மொச்சை சுண்டல்

*தேவையான பொருட்கள் :*

மொச்சை கொட்டை - 200 கிராம்,
வற்றல் மிளகாய் - 6,
தனியா - 1 மேஜைக்கரண்டி,
கடலை மாவு - 1 மேஜைக்கரண்டி,
உப்புப் பொடி - 1¼ தேக்கரண்டி,
மஞ்சள் பொடி - சிட்டிகை,
பெருங்காயப் பொடி - ¼ தேக்கரண்டி,
எண்ணெய் - 1 மேஜைக்கரண்டி,
தாளிக்க - கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை, கொத்துமல்லி.

*செய்முறை :*

மொச்சைக் கொட்டையை முந்நாள் இரவு ஊறவைத்து, குக்கரில் கொஞ்சமாக தண்ணீர் வைத்து மஞ்சள் பொடியுடன் வேகவைக்கவும். கொஞ்சம் தண்ணீர் இருந்தாலும் அப்படியே இருக்கலாம். அடுப்பில் வாணலியை வைத்து கொஞ்சமாக எண்ணெய் விட்டு மிளகாய், தனியா, பெருங்காயம் வறுத்து, அத்துடன் கடலை மாவும் போட்டு சூடான வாணலியில் புரட்டி எடுத்து, உப்புப் பொடி போட்டு மிக்ஸியில் பொடி செய்யவும். மீதி எண்ணெயில்



ஒரு
விஷயத்தை நான்
உறுதியா நம்பறேன்.
என் சிகப்பழகு க்ரீமால,
எனக்கு பாராட்டு குவியுது!

ஃபேர் அண்ட் லவ்லியின் ஒப்பற்ற இரு வழி செயல் ஆற்றலால் உங்கள் மேனியின் சிகப்பழகு பூரிக்கிறது, பெருகேறுகிறது.



இதன் விசேஷ சிகப்பழகு வைட்டமின்கள், மேனியை கறுக்கும் மெலனினைக் கட்டுப்படுத்துகின்றன. ஆறே வாரங்களில் பூரிக்கிறது சிகப்பழகு.



உங்கள் மேனியில் பூரிக்கும் புதிய சிகப்பழகை, மேனியை கறுக்கச் செய்யும் சூரிய கதிர்களிடமிருந்து காக்கிறது இதன் டபுள் ஸன்ஸ்க்ரீன்.

# ஃபேர் அண்ட் லவ்லி



வாழ்வை சுடர் விட வைக்கும் சிகப்பழகு.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

*Lintas FAL 485 2013 Tm*



இட்டிலி, தோசைக்கு உளுந்து அரைக்கும் போது அதை சிறிது பாத்திரத்தில் போட்டு, மைதாவைச் சேர்க்கவும். மாவைக் கரைக்கவும். 1 கரண்டி தயிர் விடவும். இஞ்சி, பச்சை மிளகாய் சேர்க்கவும். இதை கார அப்பமாக எண்ணெயில் வார்க்கவும்.

— இந்திரா

கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை தாளித்து சிறிது தண்ணீருடன் இருக்கும் மொச்சையைப் போடவும். மேலே அரைத்த பொடியைப் போட்டு நன்றாகக் கிளறவும். கடலை மாவு கூட இருப்பதால் தண்ணீருடன் கலந்து மொச்சைக்கு மேல் உப்பு, காரம் ஒட்டிக் கொண்டு இருக்கும். நன்றாக வதக்கி, இறக்கி, கொத்து மல்லி தழை தூவவும்.

## காய்கறி பாயஸம்

*தேவையான பொருட்கள் :*

உருளைக்கிழங்கு – 1,
கேரட் – 1,
சௌசௌ – சிறிது,
பரங்கிக்காய் துண்டு – 1 சிறியது,
சர்க்கரை – 200 கிராம்,
பால் – 1 லிட்டர்,
வெனிலா எஸன்ஸ்/அன்னாசி எஸன்ஸ் – 2 துளிகள்,
நெய் – 2 மேஜைகரண்டி.

*செய்முறை :*

எல்லா காய்கறிகளையும் நன்றாக அலம்பி, தோலெடுத்துத் துருவவும். துருவலை ஒரு துணியில் ஆறவைக்கவும். அடுப்பில், வாணலியில் நெய் விட்டு, காய்கறித் துருவலை நன்றாக வதக்கவும். பின் அதைத் தண்ணீர் விட்டு நன்றாகக் குழைய வேகவைக்கவும். பின் சர்க்கரை விட்டு கொதிக்க வைக்கவும். இறக்கி வைத்து சுண்டக் காய்ச்சின பாலை அதில் கலந்து எஸன்ஸ் விடவும். இப்பாயஸம் மிகவும் ருசியாக இருக்கும். சத்துள்ளதும் கூட.

## 7. சனி – எள் – சனிக்கிழமை

## எள்ளுப் பொடி

*தேவையான பொருட்கள் :*

எள் – 200 கிராம்,
வெல்லப் பொடி – 200 கிராம்.

*செய்முறை :*

எள்ளை, வெறும் வாணலியில் நன்றாக வறுக்கவும். மிக்ஸியில் பொடிக்கவும். அத்துடன் வெல்லப் பொடியையும் மிக்ஸியிலிட்டு கலக்கவும். அதைப் பொடியாகவோ, உருண்டையாகவோ பிடித்து நவராத்திரி சனிக்கிழமையன்று கொடுக்கலாம்.

## தேங்காய்ப் பால் பாயஸம்

*தேவையான பொருட்கள் :*

அரிசி – 50 கிராம்,
தேங்காய் – 1 பெரியது,
வெல்லம் – 200 கிராம்,
ஏலக்காய்ப் பொடி – ¼ தேக்கரண்டி,
முந்திரி துண்டுகள் – 1 மேஜைகரண்டி,
நெய் – 1 மேஜைகரண்டி.

*செய்முறை .*

தேங்காயைத் துருவி எடுத்து அதை மூன்று பாலாக எடுக்கவும். அடுப்பில், வாணலியை வைத்து, நெய் விட்டு அதில் முந்திரித் துண்டுகளை வறுக்கவும். பின் அதை எடுத்து தனியாக வைத்து, அரிசியைக் களைந்து வறுக்கவும். பின் அதை தேங்காய் 3-ம் பாலில் விட்டுக் குழைய வேகவைக்கவும். பின் 2-ம் பாலில் வெல்லத்தைக் கரைய வைத்து, வடிகட்டி கலக்கவும். பின் ஒரு கொதி வந்ததும் இறக்கி முதல் பாலை கலக்கவும். முந்திரி, ஏலப்பொடியை கலக்கவும். இதுவும் மிகவும் ருசியாக இருக்கும்.

## 8. ராகு – உளுந்து - 8ம் நாள் நவராத்திரி

## உளுந்து சுண்டல்

*தேவையான பொருட்கள் :*

முழு உளுந்து – 200 கிராம்,
பச்சை மிளகாய் – 6,
இஞ்சி – 1 சிறிய துண்டு,
உப்பு – 1 தேக்கரண்டி,
தேங்காய்த் துருவல் – 2 மேஜைக்கரண்டி,
எண்ணெய் – 1 மேஜைக்கரண்டி,

தாளிக்க – கடுகு, உ.பருப்பு, கருவேப்பிலை.

*செய்முறை :*

உளுந்தை சுத்தம் செய்து முந்நாளே ஊற வைக்க வேண்டும். அடுத்த நாள் அதைக் குக்கரில் வேகவைக்க வேண்டும். வெந்ததில் உள்ள தண்ணீரை வடிய வைக்க வேண்டும். பச்சை மிளகாய், இஞ்சி, உப்பு, தேங்காய்த் துருவல் எல்லாவற்றையும் மிக்ஸியில் அரைக்கவும். வாணலியில் எண்ணெய் விட்டு, கடுகு, உ. பருப்பு தாளித்து கருவேப்பிலையையும் வதக்கி வேகவைத்த உளுந்தையும், அரைத்த விழுதையும் போட்டு, நன்றாக வதக்கவும். இதுவே உளுந்து சுண்டல்.

## பால் பாயஸம்

*தேவையான பொருட்கள் :*

பாஸ்மதி அரிசி – 100 கிராம்,
சர்க்கரை – 100 கிராம் (இனிப்பு அதிகமாக வேண்டுமானால்)
மில்க்மெய்ட் டின் – 1,
பால் – 1 லிட்டர்,
பாதாம், முந்திரி, பிஸ்தா மெலிதாக சீவினது – 1 மேஜைக்கரண்டி,
ஜாதிக்காய்ப் பொடி, ஏலக்காய்ப் பொடி – ¼ தேக்கரண்டி.

*செய்முறை :*

பாஸ்மதி அரிசியைக் கழுவி, பாலில் நன்றாகக் குழைய வேகவைக்கவும். அத்துடன் மில்க் மெய்டும் கலந்து 5 நிமிடம் கொதிக்க வைக்கவும். இனிப்பு அதிகமாக வேண்டுமென்பவர்கள் இப்போது சர்க்கரையை சேர்க்கலாம். சர்க்கரையையும் போட்டு 2 நிமிடம் கொதித்த பின் இறக்கி வைத்து ஏலக்காய்ப் பொடியையும், ஜாதிக்காய் பொடி, பாதாம், முந்திரி, பிஸ்தா துருவலையும் மேலே தூவவும்.

## 9. கேது – கொள்ளு – 9-ம் நாள் கொள்ளு சுண்டல்

*தேவையான பொருட்கள் :*

கொள்ளு – 200 கிராம்,
வற்றல் மிளகாய் – 5,
தனியா – 1 மேஜைக்கரண்டி,
தேங்காய்த் துருவல் – 2 மேஜைக்கரண்டி,
எண்ணெய் – 1 மேஜைக்கரண்டி,
பச்சை மிளகாய் – 2,
இஞ்சி – சிறிய துண்டு,
கொத்துமல்லி – சிறு கட்டு,
உப்பு – 1½ தேக்கரண்டி.
கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை – தாளிக்க.

*செய்முறை :*

கொள்ளை சுத்தம் செய்து முந்நாள் இரவே ஊறவைக்கவும். அடுத்த நாள் இரண்டு முறை கழுவி, குக்கரில் கொஞ்சமாக பாதி தம்ளர் தண்ணீர் விட்டு மஞ்சள் பொடியுடன் வேக வைக்கவும். தண்ணீரோடு கொள்ளை அப்படியே வைக்கவும். அடுப்பில், 1 தேக்கரண்டி எண்ணெயை வாணலியில் வைக்கவும். சூடானதும் மிளகாய், தனியா வறுத்து பாதி உப்புடன் பொடி செய்யவும். தேங்காய், பச்சை மிளகாய், இஞ்சி, கொத்துமல்லி, உப்பு போட்டு மசிய அரைக்கவும். மீதி எண்ணெயில் கடுகு, உ. பருப்பு, கருவேப்பிலை, பெருங்காயப் பொடி போட்டு தாளித்து, வெந்த கொள்ளைப் போட்டு பச்சை மிளகாய், தேங்காய், இஞ்சி, கொத்துமல்லி அரைத்த விழுதைப் போட்டு நன்றாக வதக்கவும். நன்றாக வதங்கினதும் மிளகாய், தனியா அரைத்த பொடியைப் போட்டு ஒரு தடவை நன்றாகக் கிளறி இறக்கவும். இதுவே கொள்ளு சுண்டல். இது மிகவும் புரதச் சத்து மிக்கது.

## பாதாம் கீர்

*தேவையான பொருட்கள் :*

பாதாம் பருப்பு – 100 கிராம்,
சர்க்கரை – 200 கிராம்,
பால் – 1½ லிட்டர்,
சாரைப் பருப்பு– 1 தேக்கரண்டி,
கேசரி பவுடர் – 1 சிட்டிகை,
குங்குமப் பூ – ¼ தேக்கரண்டி,
பாதாம் எஸன்ஸ் – 2 துளி.

*செய்முறை :*

பாதாம் பருப்பை, சூடான தண்ணீரில் அரை மணி நேரம் ஊறவைக்கவும். பின் தோலை எடுத்தால் தொட்டவுடனே வந்து விடும். பருப்பை நன்றாக மசிய அரைக்கவும். பின் அத்துடன் 2 தம்ளர் தண்ணீர் விட்டு கொதிக்க வைக்கவும். 10 நிமிடம் கொதித்த பிறகு, சர்க்கரையில் அரை தம்ளர் தண்ணீர் விட்டுக் கரைய வைத்து வடிகட்டி கம்பிப் பாகு வரும் வரை வைத்து அதை பாதாம் வெந்த தண்ணீருடன் கலந்து கொதிக்க வைக்கவும். இறக்கி வைத்து பாலை நன்றாக சுண்டக் காய்ச்சி, அத்துடன் கலக்கவும். கேசரி பவுடர், குங்குமப்பூ கலந்து பாதாம் எஸன்ஸ் விடவும். மேலே சாரைப் பருப்பை தூவவும். இதைச் சூடாகவும் சாப்பிடலாம். குளிர்பதனப் பெட்டியில் வைத்தும் சாப்பிடலாம்.

**- சாந்தா ராமானுஜம்.**

24/5.2" பி.காம் கூப்ஸ்ட் கிளாஸ், நல்ல நிறம் உள்ள பெண்ணிற்கு அரசாங்க, வங்கியில் வேலை பார்க்கும் மணமகன் தேவை. ஜாதக நகலுடன் எழுதுக. பெட்டி எண் : 24131

■ Alliance invited from decent broadminded boys for Tirunelveli Saiva Pillai, vegetarian girl, 26 years, daughter of senior executive in Tata Company, widow, good looking, fair complexioned with female child 5 years. Divorcee/widower from vegetarian community welcome. Box No. 24132

■ Wanted professionally qualified boy for 22/5.5" Brahmin Iyer girl, Vadamal, Vathula Gothram, Karthigai star, B.Com, doing MCS. Box No. 24133

■ ஐயங்கார், வடகலை, பாரத்வாஜம், புனர்பூசம், வயது 22, 5.2" பி.எஸ்ஸி., டி.சி.ஏ. நல்ல தோற்றமுடைய பெண்ணிற்கு வயது 25 - 30 அரசு/வங்கி/பொது நிறுவனங்கள்/பெரிய நிறுவனங்களில் வேலையிலுள்ள பட்டதாரி வடகலை வரன் தேவை. பெட்டி எண் : 24134

■ தஞ்சை சைவப் பிள்ளை வயது 25, 165 செ.மீ. எம்.ஏ., பி.எட்., உத்திராடம் பெண்ணிற்கு அதே இனம் வேலையில் அல்லது சொந்த தொழில் புரியும் மணமகன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். சுத்த சைவம் முக்கியம். பெட்டி எண் : 24135

■ ஆர்ய வைசியர், கோகுல கோத்திரம், வயது 23, மாநிறம், அழகு, பிகாம் படித்த பெண்ணிற்கு, படித்த உயர்ந்த நிலையில் உள்ள மணமகன் தேவை. பெட்டி எண் : 24136

■ Vadamal, B.Sc. Electronics, Hastham, 26/150 cms, employed girl, seeks non-Bharadwaja, Govt/Bank/ Insurance, suitable alliance. Subsects no bar. Contact : C.K. Rama Iyer, 139/1G, Shri Ram Building, Near Mangala Vinayagar Koil, Ramakrishnapuram, Coimbatore - 641 001.

■ ஐயர், பிரஹசரணம், கௌசிகம், ஆயில்யம், 30 அக்டோபர் 1972, எம்.எஸ்ஸி., எம்.ஃபில் படித்த பெண்ணுக்கு பி.ஈ./இன்ஜினியர் வரன் உட்பிரிவுகள் சம்மதம். முகவரி, கணபதி ஐயர், 4/72, இரட்டை தெரு, புலியூர்குறிச்சி, தக்கலை - 629 175. போன் : 04651-52153.

■ கௌசிகம், ஹஸ்தம், 26/145 எம்.எஸ்ஸி., பி.எட்., ஒசூரில் மகரிஷி பள்ளியில் பணிபுரியும் பெண்ணிற்கு 150 - 160 உயரத்தில் பணிபுரியும் பட்டதாரி டிப்ளமா மணமகன் வரவேற்கப்படுகிறது. தாயார் வடமாள், தந்தை மாத்வா. இருதரப்பினரும் அனுகலாம். முகவரி எஸ். கௌரி, 102, வள்ளுவர் நகர், தர்மபுரி - 636 705.

■ ஐயர், வடமாள், ஸ்ரீவத்ஸ ஆத்ரேயபாரசீய கோத்திரம், பூரட்டாதி -3, 24/150 செ.மீ. எம்.எஸ்ஸி (கணிப் பொறி) ரூ. 5500/- சென்னையில் தனியார் கம்பெனியில் வேலை பார்க்கும் பெண்ணிற்கு தகுந்த வரன் தேவை. முகவரி டி.எஸ். ராமன், 6, ராசாராம் சாலை, கே.கே.நகர், திருச்சி - 620 021.

■ ஐயர், வடமாள், பூசம், உத்திஷ்ய, 46/166/எம்.ஏ. படித்த திருமணம் ஆகாத பெண்ணிற்கு, நிரந்தர வேலையிலுள்ள மணமகன் தேவை. (முகத்தில் உணர்ச்சியுள்ள வெள்ளை தழும்பு இருக்கும்). விதவையானோர் விண்ணப்பிக்கலாம். எஸ். ராஜன், 7, செயின்ட் மேரி தெரு, கஸ்தூரி நகர், விழுப்புரம் - 605 602.

■ Tamil Iyer (Vadamal) Bharadwajam, Moolam 4th padam, 23/172/5600/- quarters provided, ISRO, Bangalore. Diploma in Electronics Communications. Subsects no bar. Venkatraman, 24/32, "Udayam", Thondikulam, Palakkad, Kerala.

■ Telugu Brahmin 6000 Niyogi, Koundinya, Uthiradam 4th padam, M.A. (M.Phil) 22/163 v. fair, seeks alliance from professionally qualified well employed groom. Subsects acceptable. Send biodata with horoscopes. S.C. Krishnamurthy, J Block No. 11, Foreshore Estate, Chennai - 600 028.

■ Vadagalai Iyengar, Srivatsa, Mrigashirisham, B.Com, 40/156/5700/- Govt Service, Delhi, seeks alliance from qualified employed boy. Send horoscope and details to Raghunathan, 138, Eldams Road, Teynampet, Chennai - 600 018.

■ Varsity Lecturer PG 36, Kousika, Thenkalai Iyengar, Poosam, innocent divorcee, seeks alliance from well settled qualified grooms upto 45 from Brahmins only sect province no bar. Dr. R. Soundararajan, No. 3, I Cross Road, Doak Nagar, Kochadai, Madurai - 625 016.

■ Thenkalai Iyengar, Kousika, Thiruvathirai, PG 32 University Lecturer, seeks alliance from well settled and qualified, grooms. Subsects no bar. Dr. R. Soundararajan, No. 3, I Cross Road, Doak Nagar, Kochadai, Madurai - 625 016.

■ Thenkalai Iyengar, Kousika, Kettai, PG 30, Executive private company, seeks alliance from well settled and qualified grooms. Subsects acceptable. Dr. R. Soundararajan, No. 3, I Cross Road, Doak Nagar,

கவிதை ... கவிஞனின் கற்பனையில் தெய்வீக நடனம். ஒவ்வொரு வரியிலும் தெய்வீகத்தின் வெளிப்பாடு மொழிக்கு அப்பால்.

பாரம்பரிய வழியில் உருவான பட்டும் கை தேர்ந்த நெசவாளியின் [illegible] வெளிப்படும் தெய்வீக[illegible] அதன் ஒவ்வொரு இ[illegible] கூறும் நம் பாரம்பரிய[illegible] மகிமையை, க[illegible]ரத்தின் பெருமையை, [illegible]டன் வண்ணமும் [illegible]ச்சியும், காலத்தை [illegible] நிற்கும் அழகுமே இதற்கு சாட்சி.

[illegible]கள் கவிஞர்கள் அல்ல. ஆனால் எங்கள் படை[illegible]ப்புக்[illegible] [illegible] கண்க[illegible]க்குப் ப[illegible] விருந்[illegible]




குமரன் சில்க்ஸ்
12, நாகேச[illegible] ரோடு,
பனகல் பார்க் [illegible], தி.நகர்,
சென்னை [illegible] 017.
போன்: [illegible]
பேக்ஸ்: 044-[illegible]

[illegible]ண்மையின் கலையிது, வெளிப்பாடு குமரன் சில்க்ஸின் பட்டுப் புட[illegible]லே.

Kochadai, Madurai - 625 016.

■ Madhwa Desestha, Marathi graduate, well settled, non-Jamadhagni groom for graduate slim beautiful company employed bride 31. Send horoscope to Sama Rao, 11-3-388/B, Srinivasa nagar, Secunderabad - 500 361. Ph : 7612434.

■ Vadama Iyer groom with clean habits employed decently with comparable qualifications for Vadama Bharadwaja, Sadhyam girl 22/5.2" M.A. PGDCA Bank employed. Write family details and horoscope to T.V. Srinivasan, Plot No. 13, Suganthi Nagar, Anaiyur P.O. Madurai - 625 014.

■ Vathima, Nithinthunya, Chitrai (3) dosham, 25/164, B.Com. employed Railway, Mumbai, seeks alliance. Reply Mr. N.G. Ramachandran, A/3, N.M. Joshi C.H.S. Ltd., Gavanpada Road, Mulund (E), Mumbai - 400 081. Ph : 022-5642630.

■ Vadagalai, Bharadwajam, Revathi 3 padam, 25/170/ 5000/- Central Govt. transferable, seeks suitable boy with transferable job. Kalai no bar. Contact : Ramaswamy, 19, Aziz Nagar Main Road, Chennai - 600 024.

■ வடமாள், ஸ்ரீவத்ஸம், உத்திராடம் - 3, 25/பி.இ./160 சுத்த ஜாதகம், Engineer ISRO ஸ்ரீஹரிகோட்டா, வடமாள், இன்ஜினியர், அசுவதி, பரணி, சுவாதி, அனுஷம், சதயம். நற்குடும்பத்து வரன் தேவை. தொடர்பு ஏ.கே. மோகன், 16, அருணா நகர், ஸ்ரீரங்கம் - 620 006.

■ குருக்கள், காசியப கோத்திரம், பரணி லக்ன அங்காரக தோஷம், 30.12.68, 5.2" பி.ஏ. அரசு பள்ளியில் இடைநிலை ஆசிரியையாக பணியாற்றும் பெண்ணுக்கு தகுந்த வரன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். சிவசாமி, 7-ஏ, குபேரன் நகர், (போலீஸ் ஸ்டேஷன் அருகில்) கூடுவாஞ்சேரி, சென்னை - 603 202.

■ ரெட்டியார், வயது 24, கேட்டை, படிப்பு +2, நல்ல குடும்பத்தைச் சார்ந்த மணமகளுக்கு படித்த நல்ல குடும்பத்தைச் சார்ந்த வேலையில் உள்ள மணமகன் தேவை. பிறந்த தேதி மற்றும் குடும்ப விவரங்களுடன் விண்ணப்பிக்கவும். காந்தி மெடிக்கல்ஸ், ரெட்டி தோப்பு, ஆம்பூர் - 635 802.

■ ஐயர், பிரஹசரணம் சங்கிருதி, உத்திரட்டாதி - 4, 24/ 152/+2 சிகப்பு நிறம், அழகான குடும்பப்பாங்கான பெண்ணிற்கு நல்ல வேலையிலுள்ள 30 வயதுக்கு மேற்படாத வரன் தேவை. உட்பிரிவு சம்மதம். ஜாதகத்துடன் விண்ணப்பிக்கவும். M.A. Chandrasekaran, Senior Manager, 6, Indian Bank House, R.P. Road, Mulund West - 400 080.

■ Alliance invited from well settled boys for girl B.Sc., PGDCA, PGDPMIR, Brahacharanam, Koundihya, Chitra, 28/160. Contact Mani Iyer, Hotel Balaji, 128, Krishnapura Main Road, Indore - 452 004. (M.P.) Phone : 67809.

■ Telugu Brahmin girl, Srivathsam, Pooram, 165 cms, 27, B.E. Electronics Communication, Private company, wheatish colour engineer LIC Bank Central/State preferred. S.V. Raman, 101, Sri Ramnivas, Annai Indira Nagar, Exservicemen Colony, REC Post, Trichy - 620 015. Ph : 551433.

■ Wanted decently employed groom below 37 years for Vadamal, Kousika, Uthiram, 31/165 fair, 6000/- girl. Please send horoscope to S.Vinod Babu, Steno, S.B.I. Region - V Office, Kalibabu Street, Ranchi - 1.

■ Brahacharanam, Koundinyam, Kettai, B.A, 26/151 cms, passed Eng. & Tamil typewriting senior grade/ Eng. shorthand junior grade, wanted elder son or only son, Govt. employed or in reputed firms. Contact : R. Malayappan, M-133, Anna Nagar Housing Colony, Trichy - 620 026.

■ வடமாள், பாரத்வாஜ, பூரம், 29/150, பி.காம் அழகான குடும்பத் தேர்ச்சியான வரனுக்கு படித்த நல்ல வேலையில் உள்ள மணமகன் தேவை. Typewriting PABX Computer தேர்ச்சி. காலில் ஊனம் உண்டு. வெளியில் சென்று வரவும் நடக்கவும் செய்வாள். நல்ல முறையில் திருமணம். டி. ரவிச்சந்திரன், நெ. 3, 23வது தெரு, தில்லைகங்கா நகர், சென்னை - 600 061.

■ Employed girl, 38, born and bred in Singapore, seeks professional man qualified to work in Singapore. Men between 38 and 45 may apply. Cast no bar. Please send photograph and full details to Sushila Devi, 89, Short Street, # 06-10, Golden Wall Centre, Singapore - 188 216

■ வடமாள், பாரத்வாஜம், 38, Spinster, good looking இரு கால்களும் போலியோவால் பாதிக்கப்பட்ட, தையல் ஆசிரியை/ஒருவர் உதவியுடன் நடக்க/வீட்டு நிர்வாகம் செய்யக் கூடிய பெண்ணிற்கு பரந்த மனப்பான்மையுள்ள, 3000/- மேல் நிரந்தர வேலையிலுள்ள, உட்பிரிவு சம்மதம். Widowers OK. தொடர்பு கொள்க. எஸ். பால மீனாட்சி, 33-ஏ, ஈ.வெ.ரா. தெரு, விநாயகபுரம்,

சென்னை - 600 053.

■ வடமாள், கௌசிக கோத்திரம், விசாகம், 24/153 பி.ஏ. படித்துள்ள குடும்பப்பாங்கான பெண்ணிற்கு நல்ல வேலையில் உள்ள வரன் தேவை. ஜாதகம் அனுப்ப வேண்டிய முகவரி : N. Sundar, No. 42, G.N. Chetty St., Mylapore, Chennai - 600 004.

■ Vadagalai, Gargaya, Uthirattathi, fair, M.Com., ICWA, 31/160/8000 reputed company, Chennai, seeks qualified well employed preferably Chennai based boy. Horoscopes to P.C. Raghunathan, 118, Elangonagar (South), Virugambakkam, Chennai - 600 092.

■ Vadagalai Iyengar, Koundinya, Chitra, 25/159, fair, post graduate bank employed, seeks alliance from well educated, employed grooms. Contact : G. Ranganathan, 24, Brindavan Street Extension, West Mambalam, Chennai - 600 033. Res . Ph : 4843345.

■ Thenkalai, Bharadwajam, Kettai, M.A., 28/8000/-159 cms., Nursing Officer, Captain, Dialysis, specialist, defence, seeks well settled boys. Subsect acceptable. Contact : Pakshirajan, 11, Perumal South Mada Street, Palayamkottai - 627 002. Ph : 576222.

■ Alliance from professionally qualified post graduates, Engg./Science/Computer Science/ Chatered Accountants well employed fair, cultured, Iyengar groom below 35 for Bharadwaja, Vadagalai, very fair, slim, good looking girl M.Sc., PGDCA., B.Ed., 28/164 Central Govt employed (New Delhi). Early marriage. Horoscope, bio-data with photo to S.V. Raghavan, B-4-132/2, Safdarjang Enclave, New Delhi - 110 029. Tel : 6194579.

■ Smartha, Brahacharanam, Shadamarshnam, Poorattathi 3rd padam, Kumba rasi, 22/154 X Std. tailoring, very fair, good looking, domestically well trained unemployed. Subsects acceptable. Send horoscope, family details to A. Ramakrsihnan, H-18, Phase - II, Housing Board Colony, Perumalpuram, Tirunelveli - 627 007. Ph : 530532 STD : 0462.

■ சோழிய வேளாள பிள்ளை, பி.இ. 23/160 நல்ல வசதியான, சிறந்த அழகான ஒரே பெண்ணிற்கு, பி.இ./எம்.சி.ஏ./எம்.பி.ஏ. படித்த நிரந்தர அரசு/தனியார் பணியில் உள்ள மணமகன் தேவை. முகவரி : எஸ். கணபதி, 37/1, பாரதியார் ரோடு, காரைக்கால் - 609 602. போன் : 32911.

■ Vadamal, Kousikam, Pooram, M.Sc., B.Ed. PGDCA age 28, height 160 cms. teacher. Contact : S. Jagadeesan, 55/3, Sringrachari Street, (End of Nallathambi St.), Triplicane, Chennai - 600 005. Ph : 8527605.

■ Vadamal, Srivatsa, Moolam (4) 25/5'/MCA System Executive in a reputed Computer concern in Chennai, seeks professionally qualified boy B.E./ B.Tech/MCA. Contact : P. Venkataraman, 43/3, Sankarapuram Colony, Alamelumangapuram, Chennai - 600 004.

■ வடகலை ஐயங்கார், ஸ்ரீவத்சம், ஹஸ்தம், 29, பி.காம்/ 9000/- தனியார் நிறுவனம், சென்னை, இதே இன அரசு/ தனியார் பணியிலுள்ள தகுந்த மணமகன் தேவை. ஆர். பார்த்தசாரதி, 7, சரவணப் பெருமாள் முதலி தெரு, புரசைவாக்கம், சென்னை - 84.

■ மாத்வ தேசிஸ்தா மராட்டி, பௌனபார்க்கவம், விசாகம், 27/5.4" எஸ்.எஸ்.எல்.சி. டைப்பிங், டெய்லரிங் படித்த பெண்ணுக்கு இதே இனத்தில் சேர்ந்த கம்பெனியில் வேலை பார்க்கும் வரன் தேவை. ஜாதகத்துடன் தொடர்பு கொள்ளவும். R.P. Rao, T.C. 40/503, 3rd Puthen Street, Manacaud P.O. Thiruvananthapuram - 695 009, Kerala State.

## மணமகன் மணமகள் தேவை

■ சைவ வேளாளர், 25/5.1"/எம்.சி.ஏ. fair, பெண்ணிற்கு Govt/Public Sector நிரந்தர பணியிலுள்ள வரன் தேவை. 32/5.6"/BEMS/fair/H1 USA ல் இன்ஜினியர் பையனுக்கு BE/MCA/professional படிப்புள்ள பெண் தேவை. பெட்டி எண் : 30383

■ Mutual/seperate alliance for Palghat Vadamal, Kousikam, Revathi, 44/165/4500/- T.N. Govt. wheatish clean habits pious. Sister B.Com., Makam, 31/145 medium complexion wellversed in house hold, smart and pious. Contact Box No. 30384

■ Iyer, Vadamal, Athreya, seeks mutual/seperate alliance for son, Avittam, 33 years/3500/- Govt. undertaking, preferred working girl, and daughter Astham, 28 years, +2, fair, good looking, working in private firm. Contact : V. Pattammal, No. 5, Lalitha Garden, Thiruvanmiyur, Chennai - 41.

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. MANJULA RAMESH

Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097

Telephones — Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621

Annual Subscription : India Rs. 120/-; Overseas : Rs. 700/- (Air Mail)

Half Yearly Subscription : India Rs. 60/-; Overseas : Rs. 350/- (Air Mail)

# மங்கையர் மலர்



## நவராத்திரி இரட்டைச் சிறப்பிதழ் — II

அக்டோபர் '97 இதழுடன் இணைப்பு

# தெய்வீக ஓவியம் படைக்கும்

# பத்மவாசன்

அந்த 2½ வயதுக் குழந்தை தனிமையில் அமர்ந்து கொண்டு வெள்ளைத் தாளில் ஏதோ மணிக்கணக்காய் எழுதிக் கொண்டிருப்பதை பார்த்த தந்தை முட்டை முட்டையாய், பூனைக் குட்டிகளை எவ்வளவு நாழியாய் வரைகிறான் என்று சந்தேகத்தோடு பேப்பரை எட்டிப் பார்க்க அதிர்ச்சி கலந்த ஆச்சர்யம் அவருக்கு. தெய்வத் திருவுருவங்களை வரைவதில் பெயர் பெற்ற ஓவியரான திரு சில்பியின் திருச்சி கோவில் சித்திரத்தை அப்படியே நகலெடுத்தாற்போல் வெள்ளைத் தாளில் வரைந்து கொண்டிருந்தான் அந்தப் பாலகன்.

'என்ன அதிசயம். என் குழந்தைக்கு இப்படியொரு திறமையா? சிறந்த ஓவியராக நான் வர எண்ணியதை இறைவன் இவன் மூலம் நிறைவேற்றுகிறானா?' என்கிற கேள்வி மனதிலெழ, ஆனந்தத்தின் எல்லைக்கே சென்ற அந்த சங்கீத பூஷணம் பட்டம் பெற்றவர், இசையறிஞர் அன்றையிலிருந்து ஓவியம்தான் என் பையனின் மூச்சாக இருக்க வேண்டும் என்கிற குறிக்கோளோடு செயல்பட ஆரம்பித்தார்.

மாத சம்பளம் வாங்கியவுடன் தனது சக்திக்கு மீறி செலவு செய்து ஓவிய உபகரணங்களை வாங்கி வந்து பையனின் ஆவலைத் தூண்டுவார். சித்திரம் வரைந்து சரியில்லாமல் குப்பைக் கூடையில் கிழித்துப் போட்ட தாள்களை தேடி போட்டு அடுக்கிக் கொடுத்து 'எப்படி முன்னேறி இருக்கிறாய் என்று பார்' என்று சான்றுகளைக் காட்டுவார். மணிக்கணக்காய் பையன் ஓவியம் வரையும் போதெல்லாம் பக்கத்திலிருந்து கொண்டு உற்சாகப் படுத்துவார். படிப்பில் தேர்ச்சி பெற்றவனாக தன் மைந்தன் இருந்தாலும், தன் மகன் ஒரு டாக்டர் என்ஜினியர் என்று கோட்டை கட்டாது, அழியாத ஓவியக் கலைஞனாக தன் மகன் தனித்து விளங்க வேண்டும் என்பதில் குறியாய் இருந்தார். அவரது குறி தப்பவில்லை. கிரிதரன் 'பத்மவாஸனாய்' இன்று பரிமளிக்கிறார் தனது தெய்வீக ஓவியங்களின் மூலம்.

இன்று பத்திரிகைகளில் வரும் ஆன்மீகப் பக்கமெல்லாம் இவரது தெய்வீக ஓவியங்கள். வெளுத்ததெல்லாம் பாலுமல்ல. முனைப்பெடுத்து வரைந்த தெய்வீக ஓவியங்கள் அனைத்துமே நம்மை கவர்ந்து விடுவதுமில்லை. அவ்வாறின்றி இவரது ஓவியங்

களில் மட்டும் எப்படி அப்படி ஒரு தெய்வீகத் தன்மை? ஒப்பில்லா உயர்வு?

**ஆரம்பத்தில் அதாவது முதன் முதலில் ஓவியக் கண்காட்சியினை நீங்கள் கொழும்பில் 1980ல் நடத்தியபோது நவீன வகை ஓவியங்களையும் வைத்ததாகக் கூறுகிறீர்கள். ஏன் தற்போது அவ்வகை ஓவியங்களை வரைவதே இல்லை?**

அப்போது எனக்கு வயது 15தான். மனசளவில் முதிர்ச்சியடையாத பருவம். கொள்கைப் பிடிப்பு ஏற்படாத வயது எதையும் என்னால் வரைய முடியும் என்பதைக் காட்டவே சில நவீன சித்திரங்களையும் பார்வைக்கு வைத்திருந்தேன். அவ்வளவுதான். இன்றளவும் அத்தகைய ஓவியங்களில் எனக்கு ஈடுபாடும் இல்லை. உடன்பாடும் இல்லை"

என்று ஆணித்தரமாக பேசும் பத்மவாஸனை இலங்கை அரசாங்கம் தனது நாட்டு ஓவியப் பிரதிநிதியாக ரஷ்யாவில் பல்கேரியாவில் நடந்த 'Banner of Peace' க்கு 1980ல் அனுப்பியது. 1980ல் இங்கே தமிழ்நாட்டு முதலமைச்சராய் இருந்த திரு எம்.ஜி.ஆர் அரசாங்கம் மதுரையில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டில் நடந்த ஓவியக் கண்காட்சிக்காக பத்மவாஸனை அழைக்க - சென்னை வந்த பத்மவாஸன் - அப்போது கிரிதரன் - முதன்முதலில் தனது மானசீக குருவான சில்பியை சந்தித்தார். குருவைப் பற்றிப் பேசும்போது ஆத்மார்த்த சிஷ்ய உணர்வினை பத்மவாஸனிடம் நாம் பார்க்க முடிகிறது.

"வெறும் கிரிதரனாய் சென்னை வந்த எனக்கு பத்மவாஸன் என்கிற பெயரை வைத்தது என் குருநாதர் திரு சில்பி. ஒரு ரிஷி போல் இவ்வுலக நித்ய வாழ்க்கையிலிருந்து தன்னைத் தனிமைப் படுத்திக் கொண்டு ஆசார அனுஷ்டானங்களுடன் வாழ்ந்த அப் பெரியவரைப் பார்த்தவுடன் எனக்கு இனம் தெரியாத ஒரு பயங் கலந்த உணர்வு. கொண்டு போயிருந்த என் ஓவியங்களை பல நிமிடங்கள் தொடர்ந்து பார்த்த அவர் எதுவும் பேசாது என்னை திருப்பி அனுப்பினார்.

கொழும்பு வந்த நான் உடனே என்னுடைய ஆவலை வெளிப்படுத்தி கடிதம் எழுதினேன். உடனே வந்தது பதில் கடிதம் அவரிடமிருந்து 'இது எனது மகன் ('எனது சிஷ்யன்') எங்கே நீ கடிதம் எழுதாமல் போய் விடுவாயோ? உனக்கு எந்த பதிலையும் அளிக்காது திருப்பி அனுப்பி விட்டேனே என்று என் மனது தாபத்திரியப்பட்டது' என்று முதல் கடிதத்தில் தொடங்கி ஒரு மாதத்திற்குள் பல கடிதங்கள் தொடர்ந்து எழுதினார்.

காஞ்சி பரமாச்சாரியாரின் அறிவுரைப்படி இட்ட பணியை நெருப்பைப் போல எவ்வித குற்றமின்றி செவ்வனே நிறைவேற்றி வந்த என் குரு அந்த ஒரு மாதம் முடிந்தவுடன் இறந்தது எனக்குப் பேரிழப்பு' என்று பழைய நினைவுகளில் அமிழ்ந்த பத்மவாஸன் தன்னை மீண்டும் சுதாரித்துக் கொண்டு 'தொழிலில் ஈடுபாடு என்பது அவருக்கு 100 % எனக்கு 25 % என்றுதான் சொல்வேன்" என்றார்.

**கடவுள் சித்திரங்களில் தனி மனித சாயலில்லாமல் தெய்வீகக் களையோடு ஒரு சுத்த அழகுணர்வு நிலையை எப்படிக் கொண்டு வருகிறீர்கள்?**

"அது ஆண்டவன் அருள். என்னைப் பொறுத்தவரை பூர்வ ஜென்மவாசனையின்றி இந்தக் கலையில் யாரும் பரிமளித்துவிட முடியாது. இந்தத் தெய்வீக ஓவியங்களின் சின்னச் சின்ன விஷயங்களைக்கூட கவனமாய் கருத்தில் கொள்வது மிக அவசியம். பலர் 'சித்தரமும் கைப் பழக்கம்' என்பார்கள். எனக்கு அதில் நம்பிக்கை கிடையாது. எந்தத் தெய்வத்தை வரைய நினைக்கிறேனோ அதனை மனதார நினைத்து வணங்கியவுடன் என் வேலையைத் தொடருவேன். முடிக்கும்வரை உபவாஸம்தான்."

**இத்தனை காலத்தில் தாங்கள் பெரிய பொக்கிஷமாக நினைப்பது...?**

"காஞ்சி பரமாச்சார்யாள் என் ஓவியத்தைப் பார்த்தவுடன் தடவிக் கொடுத்தபடியே இருந்தார். அவர் பக்கத்தில் நின்று கொண்டிருந்த சிஷ்யர் ஒருவர் 'தாங்கள் ஏதாவது இப்பையனுக்கு பரிசளிக்க விரும்புகிறீரா?" எனக் கேட்க,

அவனுக்கெதற்குப் பரிசு அதுதான் கோடி கோடியாய் சம்பாதிக்கப் போகிறானே என்றார். அந்த வார்த்தைகள் முன்னால் எத்தனை கோடிகளானாலும் அன்று தூசுக்கு சமானம் தானே!"

**நவீன வகை ஓவியங்களைப் பற்றி தங்களது கருத்து...**

"அவை ஓவியங்களே இல்லை. என்னைப் பொருத்தவரை... பார்த்தவுடன் புரிவதுதான் ஓவியம். பார்க்கின்றவர்களை ஈர்ப்பதுதான் ஓவியம். கற்பனைக்கு வித்திடுவதுதான் ஓவியம். கலைஞனின் வெற்றி என்பது இங்கே தான். இதை விடுத்து நான் எதையோ நினைத்துப் போட்டிருக்கிறேன். நீ அதைக் கண்டுபிடி என்கிற இந்த கண்ணாமூச்சி சித்திர விளையாட்டை குழந்தைகளும் விளையாட வாமே" என்று சிறு கோப உணர்வோடு பேசும் பத்மவாஸன் சில நாட்களில் 20க்கும் மேற் பட்ட ஓவியங்களைகூட வரைந்துமுண்டாம்.

தான் வரைந்த ஓவியத்தைப் போலவே அச்சிற் வார்த்தாற்போல வரைந்து வந்த கிரிதரனை (பிறகுதானே பத்மவாஸன்) பார்த்தவுடன் "தாமரை மலர் மேல் வாழும் பிரம்மாவின் படைப்புகளைப் போல் உனது படைப்புகளும் இவ்வுலகில் வாழ்வாங்கு வாழட்டும்" என்று ஆசீர்வதித்த பெரியவர் சில்பியின் வாழ்த்துகள் நிச்சயமாக பொய்க்காது.

பேட்டி: **கீதா மோஹன்**

# சென்னையில் துர்கா பூஜை

வருடம் முழுவதும் புகுந்த வீட்டில் தன் கணவருடனும், குழந்தைகளுடனும் இல்லறம் நடத்தும் பெண் வருடத்தில் பத்து நாட்களுக்கு மட்டும் பிறந்த வீடு வருகிறாள் என்றால் அவளுக்குக் கிடைக்கும் வரவேற்பு என்ன? அவள் வரும் நாளை ஆவலுடனும், அவள் திரும்பிச் செல்லும் நாளை வருத்தத்துடனும், அவள் அடுத்த வருடம் திரும்பி வரும் நாளை கற்பனையுடனும் எதிர்பார்ப்பார்கள் பிறந்த வீட்டினர் இல்லையா? அதே உணர்ச்சிகளுடன்தான் மேற்கு வங்காள மாநிலத்தினர், தங்கள் வீட்டுப் பெண்ணை பார்வதி தேவி, புகுந்த வீடான இமயமலையில் இருந்து இறங்கி வரும் பத்து நாட்களை 'துர்கா பூஜா' என்று மிக மிக விமரிசையாகக் கொண்டாடுகிறார்கள். அந்த மாநிலத்தைச் சார்ந்தவர்கள், மேற்கு வங்காளத்திலிருந்து சென்னைக்கு வேலை நிமித்தம் வந்து தங்கியிருந்தாலும், கல்கத்தாவில் நடப்பதைப் போலவே விமரிசையாக இங்கும் கொண்டாடுகின்றனர்.

1929-ம் ஆண்டு சென்னையில் தொடங்கப்பட்ட, பெங்கால் அசோசியேஷன் சுமார் இருநூறு அங்கத்தினர்களைக் கொண்டுள்ளது. இவர்கள் 29, கிரி ரோடு, தி.நகரில் பல வருடங்களாக ஐந்து நாட்களுக்கு மிக விமரிசையாக துர்கா பூஜாவை கொண்டாடி வருகின்றனர். அங்கத்தினர்களைத் தவிர, சென்னையில் உள்ள சுமார் பத்தாயிரம் வங்காளிகள் பூஜையில் கலந்து கொள்கின்றனர். மேலும், அக்கம் பக்கத்திலுள்ள தமிழ் மக்களும் விழாவை கண்டு களிக்கின்றனர்.

துர்கா பூஜா என்பது அன்னை துர்கா தேவி, மகிஷாசூர் என்ற அரக்கனை போரிட்டு வீழ்த்தி வென்றதைக் கொண்டாடும் பண்டிகை. மகிஷாசூர் என்ற அசுரன் பிரம்மாவிடம் தவம் புரிந்து சாகாவரம் பெற வேண்டினான். பிரம்மா சிவனின் துணை யோடு அவனுக்குப் பெண்ணால் மட்டுமே அழிவுண்டாகும் என்ற வரத்தை அருளினார். வரம் பெற்ற கர்வத்தில் எழுந்த அவனது தீய நடவடிக்கைகளினால் மக்கள் மிகவும் துன்புறவே, அனைத்து தெய்வங்களும் அன்னையிடம் சரண் அடைந்தனர். பார்வதி தேவிக்கு லக்ஷ்மியும், சரஸ்வதியும் தங்களது சக்தியைத் தரவே அசுரனை அழிக்க அன்னை அழகிய பெண்ணாக வங்க தேசத்திற்கு இமயமலையிலிருந்து இறங்கி வந்தாள்.

அழகிய நங்கையான துர்க்கையைக் கண்டு மயங்கிய மகிஷாசூர் தன்னை மணக்குமாறு வேண்டினான். ஈரேழு லோகங்களிலும் உள்ள பொன் பொருட்கள் அனைத்தையும் தேவியின் காலடியில் சமர்ப்பிப்பதாக சபதம் செய்தான். அவற்றிற்கெல்லாம் இணங்காத துர்காதேவி ஒரே ஒரு கட்டளைதான் இட்டாள். அதாவது மகிஷாசூர் துர்க்கா தேவியுடன் போர் புரிய வேண்டுமென்றும் அதில் தோல்வி அடைந்தால் மட்டுமே தேவி மகிஷாசுரனுக்கு அடிமைப்படுவதாகவும் கூறினாள். மகிஷா

சுரனுக்கு இந்தக் கட்டளைக்கு கீழ்படிய மனமே இல்லை. ஆனால் துர்காதேவியின் அழகு மனதைக் கொள்ளை கொள்ளவே போரைத் தொடங்கினான். இருவருக்குமிடையே பலத்த போர் நிகழ்ந்தது. அன்னை பல ஆயுதங்களுடன் ஓர் உன்னதமான போர் நடத்தி மகிஷாசூரனைக் கொன்று உலகிற்கு அமைதியையும் ஆனந் தத்தையும் மீட்டுத் தந்தாள். இதுதான் துர்கா பூஜாவின் பின்னணிக் கதை.



துர்கா பூஜா ஐந்து நாட்கள் விமரிசையாக நடத்தப்படுகிறது. 'துர்கா பூஜா' என்பது மிக விமரிசையாக நிறைய செலவழித்துச் செய்யப்படும் பூஜை. அதனால் தனித்தனியாக வீட்டில் கொண்டாடப்படுவதில்லை. பலரும் காணிக்கைகள் தர அவற்றைக் கொண்டே நடத்தப்படுகிறது. பல ஆயிரம் ரூபாய் செலவழித்து செய்யப்படும் தெய்வ உருவங்கள் மஹாளய அமாவாசைக்கு முந்தைய அல்லது இரண்டு மாதத்திற்கு முன் வரும் அமாவாசையன்றே செய்யத் தொடங்குகின்றனர்.

பிரதான காலமான பஞ்சமியன்று கலசங்கள் வைக்கப்படுகின்றன. ஒவ்வொரு தெய்வத்தையும், அதாவது துர்காவின் குடும்பமான மகள்கள் லட்சுமி, சரஸ்வதி, மகன்கள் விநாயகர், கார்த்திகேயன் ஆகிய அனைவரையும் கலசத்திலுள்ள கங்கை நீர் கலந்த நீரில் ஆவாஹனம் செய்து, மண் மேல் நெல் தெளித்து, அதன் மேல் வைக் கின்றனர். கலசத்தின் மேல் தேங்காய் வைத்து குங்குமமிட்டு, துண்டு சார்த்துவார்கள். பிறகு இக்கலசங்களைச் சுற்றி குச்சிகள் நட்டு, அவற்றைச் சிவப்பு நூலால் இணைப்பார்கள்.

அடுத்த நாளான ஷஷ்டியன்று தேவியின் திருவுருவச் சிலை தனது குடும்பத்தாருடனும், அவர்களது வாகனங்களுடனும் துர்கா - சிங்கம், லட்சுமி - ஆந்தை, சரஸ்வதி - அன்னம், விநாயகர் - மூஷிகர், கார்த்திகேயர் - மயில் ஆகியோருடன் அலங்காரப் பந்தலுக்குள் கொண்டு வரப்படுகிறது. அதற்கு முன் ஐந்து அல்லது ஏழு சுமங்கலிகள் இணைந்து, பூஜாரியுடன் ஏழு இளம் வாழைக்கன்றுக்கு பூஜை செய்வார்கள். அந்த வாழைக் கன்றுடன் மற்ற பல பிரம்மாண்டமான மரங் களான ஆலமரம், அரசமரம் போன் றவற்றின் இலைகளையும் இணைப் பார்கள். இதன் மூலம் துர்கா பூஜைக்கு பல தெய்வங்களின் சக்திகளை பிரதிஷ்டை செய்ததாகக் கருதப் படுகிறது. அந்த இளம் வாழைக் கன் றுக்குக் குங்குமம் இட்டு புடைவை கட்டி சுமங்கலி போல் அலங்கரித்து எடுத்து வருவார்கள். சுமங்கலியாக அலங்கரிக்கப்பட்ட வாழைக்கன்று விநாயகரின் மனைவியான சித்தி தேவியாம். சித்தி தேவியான வாழைக் கன்றை பந்தலில் முதலில் கொண்டு வரும்போது 'டாகி' என்ற முரசொலி



கொட்டப்படும். அதன் பிறகே துர்கா தேவியின் உருவம் கொண்டு வரப்படும். அச் சமயத்தில் வங்காளி சுமங்கலிகள் 'ஆகமனிகான்' என்ற மங்களப் பாடலை பாடி வரவேற்க தொடர்ந்து லட்சுமி, சரஸ்வதி, விநாயகர், கார்த்திகேயன் ஆகியோரின் உரு வங்களும் கொண்டு வரப்படுகிறது.

இமயமலையிலிருந்து இறங்கி வரும் துர்கா தேவி கண்ணைக் கவரும் அழகுடன்

திரிசூலதாரிணியாக, மகாமாயி சக்தியாக ஒவ்வொரு வருடம் ஒவ்வொரு வாகனத்தில் வருவாள். இந்த வாகனம் இயற்கைக்கு ஏற்ப அமையும். யானையிலோ, படகிலோ அன்னை வந்தால் அவ்வருடம் மழை பொழிந்து பசுமையாக ஐஸ்வர்யம் நிறைந்து ஆனந்தம் பெருகும். பந்தலில் வைக்கப்பட்டுள்ள தெய்வங்களின் உருவங்களின் கீழ் கலசம், மஞ்சள், குங்குமம், புஷ்பங்கள், ஐந்து வகை பழங்கள், நவ தானியங்கள், கண்ணாடி, சீப்பு, வளையல்கள், புடைவை போன்ற மங்கலப் பொருட்கள் வைக்கப்படுகின்றன. நல்ல முகூர்த்த நேரத்தில் மகா சப்தமி பூஜையை ஒரு பூஜாரி தொடங்குவார். கூடவே மற்றொரு பூஜாரி சண்டி ஸ்லோகத்தைக் கூறத் தொடங்குவார். நான்கு நாட்களும் சண்டி ஸ்லோகம் கூறப்படுகிறது. 'சண்டி சுதாமிர்தா' என்ற ஸ்லோகத்தில் தேவி அசுரனுடன் போரிடப் பயன்படுத்திய போர் ஆயுதங்களும் அதைப் பயன்படுத்திய விதமும் விளக்கப்படுகின்றன.

துர்கா பூஜையின் மிக மிக முக்கியமான நேரம் என்பது அஷ்டமி தினமும், நவமி தினமும் கூடும் நேரமே. இந்த நேரத்தில் நிகழ்த்தப்படும் பூஜையை சந்தி பூஜா என்றழைக்கின்றனர். அந்த நேரம் அதிகாலையிலோ, பகலிலோ மாலை நேரத்திலோ, நடு இரவிலோ எப்போது வந்தாலும் அச்சமயத்தில் பூஜை நடத்தப்படுகிறது. பூஜை நடக்கும் இந்த நான்கு நாட்களும் முரசு கொட்டப்பட்டு போர் சூழ்நிலைக்கான நிலை ஏற்படுத்தப்படுகிறது.

அடுத்த நாள் மகா அஷ்டமி. இத்தினம் மிக மிக பவித்ரமான முக்கியமான தினமாகும். மற்ற நாட்களில் பூஜையில் கலந்து கொள்ள முடியாதவர்கள்கூட இந்த நாளில் தங்களால் இயன்ற பூ, பழங்களை காணிக்கையாக எடுத்துக் கொண்டு பூஜை நடக்குமிடத்திற்கு வருவார்கள். இந்த தினத்தில் நடக்கும் பூஜைக்கு நூற்றி எட்டு தாமரை மலர்கள், நூற்றி எட்டு வில்வ இலைகள், நூற்றி எட்டு தீபங்கள் பயன்படுத்தப்படுகின்றன.

தாமரை மலர்கள் தேவிக்கு மிகவும் உகந்த மலர்களாகும். இதன் பின்னணியிலும் ஒரு இனிய கதை உண்டு. வசந்த நவராத்திரி சமயத்தில் இராமபிரான் அன்னை துர்காவிற்கு பூஜை நடத்தினார். பூஜைக்குத் தேவையான பொருட்கள் அன்னைக்கு முன் வைக்கப்பட்டபோது நூற்றி எட்டு தாமரை மலர்களில் ஒன்றை அன்னை மறைத்து வைத்துக் கொண்டாள். பூஜை நடந்த சமயம் நூற்றி எட்டாவது மலரை காணவில்லையென்றதும் அன்னையிடம் கொண்ட பக்தியின் காரணமாக, பூஜைக்குத் தடங்கல் ஏற்படாதிருக்க வேண்டுமென தாமரைக்கு இணையாக வர்ணிக்கப்படும் தமது கண்களில் ஒன்றை பெயர்த்துத் தர முயன்றார். பக்தனின் சிரத்தையை சோதிக்க தான் விளையாடிய விளையாட்டே என அந்தத் தாமரையை அன்னை திருப்பித் தந்தாராம்.

அந்த நாட்களில் பூஜைக்குப் பலி கொடுக்கப்பட்டு வந்தது. ஆனால் இந்நாட்களில் அதற்குப் பதிலாக தானியங்களாலும், காய்கறிகளாலும் மிருகங்களின் உருவங்களைச் செய்து காணிக்கையாக்குகின்றனர். மறுநாள் மஹா நவமியன்று காலையிலேயே பூஜை நடத்தப் படுகிறது. பிறகு ஒரு மணி நேரம் மிகச் சிரத்தையுடன் ஹோமம் நடத்தப்படும். இந்த் ஹோமத்திற்கும் நூற்றி எட்டு வில்வ பத்திரங்களே பயன்படுத்தப் படுகின்றன. இந்த மூன்று தினங்களும் பூஜையைக் காண வரும் பக்தர்கள் அனைவருக்கும் 'போக்' என்ற பெயருடன் கிச்சடி, பாயசம், ஐந்து காய்கறிகள் ஆகியவை நைவேத்தியம் செய்யப்பட்டு அளிக்கப்படுகிறது.

இதிலும் ஒரு விசேஷம் என்னவென்றால் பூஜை முடிந்ததும் வில்வமும் புஷ்பமும் அனைவருக்கும் அன்னைக்கு அர்ச்சிக்க தரப் படுகிறது. பிறகு ஆரத்தி எடுக்கப்பட்டு மலர்கள்

**"மிரர் பாட்"**

நவராத்திரி நாட்களில் தாம்பூலத்தோடு ஒவ்வொரு வீட்டிலும் ஒரு டஜன் கண்ணாடிகளாவது புதிதாய் வந்து சேரும். எத்தனை கண்ணாடிகளைத் தான் பர்ஸிலும் 'மேக் அப் கிட்'டிலும் வைத்துக் கொள்ள?

எடுங்கள் ஒரு மண்பானையை....

அதில் அங்கங்கே கண்ணாடிகளை உங்கள் கற்பனைக்கேற்ற வடிவத்தில் ஒட்டுங்கள்... அதைச் சுற்றி சோழிகள், கிளிஞ்சல்கள், குன்றி மணிகளை ஒட்டி விடுங்கள்.

இதோ....

உங்க வீட்டுக் கொலுவுக்கு (அ) அப்புறமாக ட்ராயிங் ரூமுக்கு ஒரு அழகான 'ஷோ பீஸ்' தயார்!

"எந்த எக்சிபிஷனில் வாங்கினே?" என்று பார்ப்பவர்கள் கேட்பது உறுதி.

— உஷா



# நீங்க நெனச்சா முடியாதா?





"நீங்க நெனச்சா முடியாதா" தொடர் மிகவும் பயனுள்ளதாக இருக்கிறது. தமிழ்நாட்டிலிருந்து சமீபத்தில் டெல்லிக்கு வந்துள்ள எனக்கு இங்கிலீஷ் சுமாராகத்தான் தெரியும். அக்கம்பக்கத்திலுள்ளவர்களிடம் சில சமயங்களில் இங்கிலீஷில் பேச வேண்டியிருக்கும். ஏனெனில் எனக்கு இந்தி தெரியாது.

ஒரு நாள் தமிழ்நாட்டுச் சமையல் பற்றி பேசிக்கொண்டிருக்கும்போது 'சாம்பார்' செய்வது எப்படி என்று ஒருவர் கேட்க நான் எனக்கு தெரிந்த இங்கிலீஷில் சொல்லிக்கொண்டிருந்தேன். "தாளித்துக் கொட்ட வேண்டும்" என்பதை எப்படிச் சொல்வதென்று தெரியாமல் தமிழிலும் இங்கிலீஷிலுமாக ஏதோ உளறிவைத்தேன்.

சமையல் பற்றிய விஷயங்களை இங்கிலீஷில் எப்படிச் சொல்வது என்பதை 'நீங்க நெனச்சா முடியாதா' தொடரில் எழுதினால், எங்களுக்குத் தெரிந்த சமையல் பற்றி அக்கம்பக்கத்திலிருப்பவர்களிடம் இங்கிலீஷிலேயே பேசுவோமே தைரியமாக."

கே. வத்ஸலா கிருஷ்ணமூர்த்தி,
புதுடெல்லி.

## Something Special

குழம்பு, ரசம் போன்றவைகளுக்கு தாளித்துக் கொட்டுவதைத் தெரிவிக்க **'tempering'** (டெம்பரிங்) என்ற வார்த்தையைப் பயன்படுத்தலாம்.

**'Tempering the sambar;** சாம்பாருக்குத் தாளித்தல்

'சாம்பாருக்குத் தாளித்துக் கொட்டு' என்பதை **'Temper the sambar'** என்று சொல்லலாம்.

மைதா மாவு, கோதுமை மாவு போன்றவற்றை நாம் தண்ணீர் ஊற்றிப் பிசைகிறோம் அல்லவா? இதை **'Knead the flour'** என்று சொல்வதுண்டு.

**'Kneading the flour'** என்றால் மாவு பிசைதல் என்று அர்த்தம். மாவு அரைக்கும் இயந்திரத்தை **'Grinder'** என்கிறோம். ஊறவைத்த அரிசியை மாவாக அரை என்பதை **'Grind the rice'** என்று சொல்லவேண்டும்.

**Grinding the rice** என்றால் அரிசியை மாவாக அரைத்தல் என்று அர்த்தம்.

சூழ்நிலைக்கேற்ப எந்தெந்த வார்த்தைகளை எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதை எளிய முறையில் சொல்லித்தந்து, தயக்கமின்றி இங்கிலீஷில் சரளமாகப் பேச மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறது **விவேகானந்தா கல்வி நிலையம்.**



பயிற்சி விவரம் ➤➤➤

# விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸ்

**அடிப்படை - இலக்கணம் - ஸ்போக்கன் இங்கிலீஷ்** எனப் பயிற்சிமுறை மூன்று நிலைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

உங்களுக்குத் தேவையான பிரிவைத் தேர்ந்தெடுத்து, வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால்மூலம் சுலபமாக இங்கிலீஷ் கற்றுக் கொள்ளுங்கள். சரளமாகப் பேசத் தொடங்குங்கள்.

**LEVEL 1** **அடிப்படை ஆங்கிலம்**

ABCD யிலிருந்து தொடங்கி, ஆங்கில வார்த்தைகளை எழுத, படிக்கப் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ.150/- மட்டுமே.

**LEVEL 2** **இலக்கணப் பயிற்சி**

ஆங்கில இலக்கணத்தை முழுமையாக கற்றுக்கொண்டு பிழையின்றி கடிதங்கள் கட்டுரைகள் எழுத முறையாகப் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ.175/- மட்டுமே.

**LEVEL 3** **ஸ்போக்கன் இங்கிலீஷ்**

தவறாகப் பேசிவிடுவோமோ என்ற தயக்கமின்றி ஆங்கிலத்தில் மிகச் சரளமாக உரையாட நவீன முறையில் பயிற்சி பெறலாம். பயிற்சிக் கட்டணம் ரூ.200/- மட்டுமே.

**சிறப்புச் சலுகை:**

**LEVEL 2&3** இரண்டு பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ.325/- மட்டும் செலுத்தினால் போதும்.

**LEVEL 1, 2 & 3** மூன்று பிரிவுகளிலும் சேர்ந்து பயிற்சி பெற ரூ.450/- மட்டும் செலுத்தினால் போதும்.

**முன்பணம் அனுப்ப வேண்டியதில்லை. பாடங்களை V.P.P.யில் அனுப்புகிறோம்.**




கீழ்க்காணும் கூப்பனைப் பூர்த்தி செய்து 15 நாட்களுக்குள் அனுப்பி பாடங்களுடன் இங்கிலீஷ்-தமிழ் டிக்ஷனரியைப் பரிசாகப் பெறுங்கள்.

## நேர்முகப் பயிற்சி மையங்கள்

**சென்னை**

**தி.நகர்:** 9, மேட்லி ரோடு, தி.நகர், சென்னை-17.

**தாம்பரம்:** சண்முகம் ரோடு, 18, ராமசாமி தெரு, மேற்கு தாம்பரம், சென்னை-45.

**கீழ்ப்பாக்கம்:** 30, மேடவாக்கம் டாங்க்ரோடு, (E.S.I. ஆஸ்பத்திரி அருகில்) கீழ்ப்பாக்கம், சென்னை-10.

**திருச்சி:** சோழா டவர்ஸ், 23-C/5, கீழ சிந்தாமணி (E.R. ஹைஸ்கூல் எதிரில்) திருச்சி-2.

**சேலம்:** சென்ட்ரல் கமர்ஷியல் காம்ப்ளெக்ஸ், 77, ஓமலூர் மெயின் ரோடு, (மேம்பாலம் அருகில்), சேலம்-1.

**கோயம்புத்தூர்:** ஸ்ரீ கிருஷ்ணா டவர்ஸ், 515, Dr.நஞ்சப்பா ரோடு, காந்திபுரம் கோயம்புத்தூர்-18.

**தஞ்சாவூர்:** 1263/1, தெற்கு வீதி, (பாரத மாதா புக்டெப்போ மாடியில்) தஞ்சாவூர்-9.

**வேலூர்:** 9, நீலி கிடங்குத் தெரு, (மம்மி ஆஸ்பத்திரி அருகில்) வேலூர்-1.

**ஈரோடு:** 811, பிரப் ரோடு (டெலிபோன் பவன் அருகில்) ஈரோடு-1.

**பாண்டிச்சேரி:** 326, அம்பலத்தாடையர் மடத்து வீதி, (அண்ணாசாலை அருகில்) பாண்டிச்சேரி-1.

**ஹைதராபாத்:** 5-A, லெனைன் எஸ்டேட் (SBH அருகில்) அபிட்ஸ், ஹைதராபாத்-1.

**மதுரை:** 26-A, கண்ணாம்புக்காரத் தெரு, (கூடலழகர் பெருமாள் கோவில் அருகில்), மதுரை-1.

**திருப்பூர்:** K.P.N.காலனி முதல்தெரு, சங்கீதா தியேட்டர் மெயின்ரோடு, திருப்பூர்-1.

---

நான் விவேகானந்தாவின் ஹைபவர் இங்கிலீஷ் கோர்ஸில் சேர விரும்புகிறேன். எனக்குப் பாடங்களை V.P.P.யில் அனுப்புங்கள். தபால்காரரிடம் பணத்தைச் செலுத்திப் பாடங்களை பெற்றுக்கொள்கிறேன்.

(தேவையான கட்டத்தில் ✔ குறியிடுங்கள்)

| | |
|---|---|
| LEVEL 1 ☐ | LEVEL 2 & 3 ☐ |
| LEVEL 2 ☐ | LEVEL 1, 2 & 3 ☐ |
| LEVEL 3 ☐ | |

பெயர் ..........................................................

முகவரி ..........................................................

..........................................................

.................................... PIN ....................




VIVEKANANDA INSTITUTE

MMS

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.



தாம்பூலத்துடன் ப்ளவுஸ் பிட்,
கிண்ணங்கள், பேசின்கள்
தருவதைத் தவிர்த்து விட்டு...
ஸ்லோகப் புத்தகங்கள், ஸ்வாமி
படங்கள், சிறிய மாக்கல்
விக்கிரகங்கள் (5 ரூபாயில்
கிடைக்கும்) கோல ஸ்டிக்கர்கள்
போன்றவைகள் தரலாம்.

— உஷா

கொண்டு அர்ச்சனை செய்யப்படுகிறது. இவை நிவேதனம் செய்யப்படும். 'போக்' மேல் விழுந்தால் பரிசுத்தம் கெடும் என்பதால் ஆரத்தி எடுத்த பிறகே 'போக்' நிவேதனம் செய்யப்படுகிறது. அதன் பிறகு பூஜாரி 'சாம்பிராணி' ஏற்றி அன்னைக்கு ஆரத்தி எடுக்க மக்கள் பக்திப் பரவசத்தில் ஆனந்த மாக ஆடிப்பாடுகின்றனர். இவர்களின் ஆட்டலையும் பாடலையும் ஊக்குவிக்கும் வண்ணம் டாகியா முரசை கொட் டுவார்.

பூஜையின் கடைசி தினமான தசமியன்று பூஜை செய்து, அவல், இனிப்பான தயிர் இரண்டையும் கலந்து நிவேதனம் செய் வார்கள். அதன் பிறகு பூஜாரி ஒரு பெரிய பாத்திரத்தில் பாலில் 'அல்டா' எனப்படும் சிவப்புச் சாந்தை குழைத்து அன்னையிடம் எடுத்துச் செல்வார்கள். பாத்திரத்தை சாய்த் துப் பிடித்து அன்னையின் பாதங்களின் நிழல் அதில் படும்படி செய்வார்கள். இதுவே விக் ரகத்தை கங்கையில் மிதக்க விட்டதற்குச் சமமாகக் கருதப்படுகிறது. இந்நிகழ்ச்சியை பாஷான் (மூழ்கடித்தல்) என அழைக்கிறார்கள்.

இதன் பிறகு சுமங்கலிகள் அன்னைக்கு சிந்தூரம் இட்டு, இனிப்பு கொடுத்து, வெற் றிலை பாக்கான 'பான்' தந்து அன்னையை மகிழ்விக்கிறார்கள். ஒவ்வொருவரும் அன்னை யின் அருகே சென்று தங்கள் குறைகளைக் கூறி அன்னையைப் பிரிய முடியாமல் மனமுருகி, அடுத்த வருடம் சீக்கிரம் வர வேண்டுமென ஆவலுடன் கூறி ஆனந்தக் கண்ணீர் விடு கின்றனர். இதன் பிறகு சுமங்கலிகள் ஒரு வருக்கு ஒருவர் சிந்தூர் இட்டு, பான், இனிப்பு அளித்து மகிழ்வார்கள். இந்த நிகழ்ச்சியை சிந்தூர் கேலா (குங்கும விளையாட்டு) என் றழைக்கின்றனர்.

விஜய தசமி தேவியின் வெற்றியைக் குறிக் கும் தினம். இந்த நன்னாளில் அனைவரும் புத்தாடை உடுத்தி, இனிப்புகள் பரிமாறிக் கொண்டு மகிழ்வார்கள். அன்று மாலை அன்னை தன் பரிவாரங்களுடன் தனது புகுந்த வீட்டிற்குச் செல்வதைக் குறிக்கும் வகையில் பந்தலில் உள்ள அனைத்து விக்ரகங்களும் கடலில் கரைக்க எடுத்துச் செல்லப்படுகிறது. முரசு கொட்டப்பட, சாம்பிராணி பூஜை நடத்தி நடனமாடியபடியே விக்ரங்களை ஆற்றில் விடுகின்றனர்.

கண்களில் கொடுமையும், சிவந்த அதரத்தில் புன்னகையும், பன்னிரு கைகளில் ஆயுதமுமேந்தி, கிரீடமணிந்து காலடியில் மகிஷாசுரனை வதம் செய்தவாறு சிம்ம வாஹனத்தில் காட்சியளிக்கும், அனைவரின் இதயத்தையும் கொள்ளை கொள்ளும் துர்கை வடிவத்தை கடலில் கரைத்துவிட்டு, சந்தி ஜல் எனப்படும் அந்த நீர் அனைவரின் மீதும் தெளிக்கப் படுகிறது. 'பிஜோய தசமி' என்று கூறி பெரியோர்களிடம் சென்று ஆசி பெறுவார்கள். பூஜை நடந்த எட்டு முதல் பத்து நாட்களுக்குப் பிறகு வரும் பௌர்ணமியன்று பூஜை நடந்த அதே இடத்தில் லக்ஷ்மி பூஜை செய்வார்கள். மஹாளய அமாவாசையன்று தொடங்கிய பூஜை பௌர்ணமியன்றோடு இனிதே முடிவடைகிறது.

கல்கத்தாவில் வங்காளிகள் துர்கா பூஜையை சிரத்தையுடன் கொண்டாட வேண்டுமென நகரம் முழுவதும் அனைத்து வேலைகளும் நிறுத்தப்படுகின்றன. பள்ளிகள், அலுவலகங்கள் என அனைத்தும் மூடப் படுகின்றன. வண்ண வண்ண பந்தல்களில் நூறு அடிக்கு ஒரு பூஜா நடத்தப்பட்டு, மக்கள் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்கின்றனர். இங்கும் சென்னையில் பல இடங்களில் துர்கா பூஜா நடத்தப்படுகிறது. அதில் குறிப்பாக தி.நகரில் கிரி ரோடில் பல வருடங்களாகக் கொண் டாடப்படுகிறது. இதில் பூஜிக்கப்படும் உரு வங்களைச் செய்யவும், பூஜையை சிரத்தையாக நடத்தித் தரவும், முரசு கொட்டவும் கல்கத்தாவில் இருந்து பூஜாரியும், கலைஞர்களும் அழைத்து வரப் படுகிறார் கள்.

— ராஜ்ய ஸ்ரீ சந்திரசேகர்

• விஜயலட்சுமி



• ரமா

## சத்துமிகு சமச்சீர் உணவு

"எல்லா வகை சுண்டலுமே சமச்சீரான உணவுதான். புரதச் சத்து நிறைந்தவை. எல்லாமே ஏதோ ஒரு வகை கடலையோடு சம்பந்தப்பட்டவைதானே. அதிலும் பட்டாணி சுண்டல்தான் பெஸ்ட்'' என்று சுண்டல் மகாத்மியத்தை விளக்கத் தொடங்கினார் டாக்டர். விஜயலட்சுமி சேஷாத்ரி.

மேலும் தொடர்ந்தார். ''பொதுவாகவே வீடுகளில் உணவு விஷயத்தில் நிறைய காம்ப்ரமைஸ் செய்து கொள்வது பெண்கள்தான். நவராத் திரியிலாவது சத்துணவை சாப்பிடட்டும் என்பதற்காக ஒன்பது நாட் களும் சுண்டல் என்று வைத்தார்களோ என்னவோ. சுண்டலில் தூவப் படும் தேங்காய் கொலஸ்ட்ராலை அதிகமாக்கும்தான். மற்றபடி நீரிழிவு நோயால் பாதிக்கப் பட்டிருப்பவர்களுக்கும், கருவுற்ற பெண்களுக்கும்கூட சுண்டல் ஓர் அற்புதமான உணவு. நீராவியில் வேக வைத்து கொஞ்சம் வதக்கினாலே போதும் என்பதால் கடலைகளில் உள்ள சத் துக்கள் அழிந்து விடுவதில்லை. டிபனுக்கு டிபனுமாச்சு; இரவு உணவுக்குத் தொட்டுக் கொள்ளவும் ஆச்சு என்கிற வகையிலும் சுண்டல் பயனளிக்கிறது. 'வெரைட்டியும் காண்பிக்கலாம்; சுலபமாகவும் தயாரித்து விடலாம் என்கிற கோணங்களிலும் சுண்டலுக்கு ஜே'' என்றார்.

# நவராத்திரியும், சுண்டலும்ம்ம்ம்

## ஏழைகளின் எழில் சொர்க்கம்

"மற்ற விஷயங்கள் ஒருபுறமிருக்க, முன்பின் தெரியாத ஏழைக் குழந்தைகள்கூட ''அம்மா மாமி கொலுவுக்கு சுண்டல்'' என்றபடி வரும்போது அரிதாகவே அவர்களுக்குக் கிடைக்கக் கூடிய சத்து மிகுந்த உணவை சுண்டல் வடிவத்தில் கொடுக்க முடிகிறதே. கோவில்களிலும் சரி, வீடுகளிலும் சரி. நவராத் திரியின்போது கடவுளுக்குப் படைத்து விட்டு பலருக்கும் விநியோகிக்க முடிவதால், எளிய அன்னதானமே செய்த நிறைவு கிடைக்கிறதே'' என்று நெகிழ்ந்து போகும் திருமதி. ரமா பாலசுப்ரமணியம் ''எளிமை கண்டு சுண்டலை யாரும் அலட்சியமாக எண்ணி விட முடியாது'' என்பதையும் சுட்டிக் காட்டுகிறார். ''முன்தினமே ஊற வைத்து, பக்குவமாய் வேக வைத்து, அளவுடன் உப்பிட்டு, அன்புடன் வழங்கினால்தான் சுண்டல் நன்றாக அமையும். வாழ்க்கை வழிமுறையில் அன்பு, தானம் இவற்றிற்கு ஒரு உருவகமாகத்தான் சிறந்த உணவுப் பண்டமான சுண்டலை நம் முன்னோர்கள் நவராத்திரியோடு சம்பந்தப் படுத்தி விட்டுப் போயிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன்'' என்றார்.



• ரங்கநாயகி



• சித்ரா

# நினைத்ததெல்லாம் நடந்து விட்டால் சுண்டல் ஏதுமில்லை

"நவராத்திரியும், சுண்டலும் ஒட்டிப் பிறந்த இரட்டைக் குழந்தைகளாச்சே. 'இன்னிக்கு உங்க வீட்டிலே என்ன சுண்டல்?' என்பதுதானே நவராத்திரியின்போது கூடும் பெண்கள் கேட்டுக் கொள்ளும் முதல் கேள்வி" என்று சுண்டல் கட்சிக்காக தீவிரமாக திருமதி ரங்கநாயகி கொடி பிடித்தாலும், சுண்டலால் அவர் குடும்பமே அவஸ்தைப்பட்ட ஒரு சம்பவத்தையும் குறிப்பிட்டார். நவராத்திரியில் குறிப்பிட்ட நாளன்று முப்பது பேராவது வருவார்கள் என்று எதிர்பார்த்து சென்ற வருட நவராத்திரியின்போது ஒருநாள் தடபுடலாக பட்டாணி சுண்டலை இவர் செய்து வைத்திருக்க, அன்று வந்ததோ இரண்டே பேர். சுண்டல் வீணாகி விடப் போகிறதே என்ற பதைப்பில் இரவு உணவாக, மீந்து போன சுண்டலை குடும்ப உறுப்பினர்கள் தீர்த்துக் கட்டிவிட, தடபுடல் சுண்டல் கடபுடலுக்கு வித்திட்டது. அடுத்த நாள் எல்லோரும் வயிற்றைப் பிடித்தபடி காட்சி தந்தார்களாம். வீட்டுக்கு வருபவர்களிடம் "பாடினால்தான் சுண்டல்" என்பேன். "உன் சுண்டல் வேண்டாம்" என்று சொல்ல முடியுமா? அதனால் பாடுவார்கள்" என்று அவர் கூறியபோது சுண்டலை அவர் பிரம்மாஸ்திரமாகப் பயன்படுத்துவது புரிந்தது.



**வெள்ளித் தோரணம்**

அலுமினியம் தகடுகளை (போர்ன்விடா டப்பாவின் மேல்புறம் உள்ளவை) 2" 3" என்ற அளவில் வெட்டி அதில் ஒரு பால் பாயிண்ட் பேனா ரீஃபில்லால் சிறிய கோலங்கள் போட்டு ஓரம் மடக்கி நூலில் கோர்த்து கதவின் மேல் கட்டி விட்டால் வெள்ளி போல மின்னும்.

— உஷா

## 'சுண்டலின் 'மறுபக்கம்'

"ஒருமுறை மொச்சை சுண்டல் செய்திருந்தேன். பார்க்க பிரமாதமாக, மசாலா வாசனையுடன் கமகமத்த இதை கொலுவுக்கு வந்திருந்த என் தோழிகளுக்கு விநியோகித்தேன். ஆசையுடன் வாயில் போட்டுக் கொண்ட அத்தனை பேருடைய முகமும் பயங்கரமாக மாறிவிட்டது. காரணம் தெரிந்து கொள்ள சுண்டலில் கொஞ்சம் எடுத்து வாயில் போட்டுக் கொண்டேன். வேப்பங் கொட்டையில் செய்த மாதிரி அப்படி ஒரு கசப்பு. ஒரு குறிப்பிட்ட வகை மொச்சை அப்படித்தான் கசக்கும் என்பது பிறகுதான் தெரிய வந்தது. அன்றிலிருந்து மொச்சை சுண்டல் செய்வதையே விட்டு விட்டேன்" என்று தன் கசப்பு அனுபவத்தை விவரித்தார் திருமதி. மீனாட்சி.

## அடுக்கடுக்காய் அவதாரங்கள்

சுண்டல் ராஜ்யத்தின் தலைமை யாருக்கு? "சந்தேகமில்லாமல் வேர்க்கடலை சுண்டலுக்குதான்" என்று அழுத்தமாகச் சொன்னார் திருமதி. பிரேமலதா. கூடவே ஒரு சுண்டல் சம்பவத்தையும் நினைவு கூர்ந்தார். "அலுவலகத் தோழிகளை அன்று கொலுவுக்கு வரச் சொல்லியிருந்தேன். ஸ்பெஷலாக வேர்க்கடலை சுண்டல் செய்து வைத்திருந்தேன். அவர்கள் வரவில்லை. அடுத்த நாள் சந்தித்தபோது அன்று கட்டாயம் வருவதாகச் சொன்னார்கள். பயத்தம் பருப்பு சுண்டல் செய்து வைத்திருந்தேன். எதிர்பார்த்தவர்கள் வர, இட்டதட்ட சுண்டல் காலியாகி விட்டது. அப்போது பார்த்து கேஷுவலாக நான் அழைத்திருந்த தினமும் பஸ்ஸில் என்னுடன் பயணம் செய்யும் சில பெண்மணிகளும் வந்து சேர, அவசர அவசரமாக மீந்திருந்த கொஞ்சம் சுண்டலில் தேங்காயும் தாளித்த பச்சை மிளகாயும் போட்டு வந்தவர்களுக்குக் கொடுத்து முடித்தேன்.

தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சி கழகத்தின்
புதிய ஆன்மீக உலா

# திருமால் தரிசனம்



சென்னையைச் சுற்றியமைந்த 9 வைணவத் திருக்கோவில்களில் ஒரே நாளில் தரிசனம் செய்ய உங்களை அழைத்துச் செல்கிறது.

சனி, ஞாயிறு மற்றும் சிரவண (திருவோணம்) நாட்களில் மட்டும்.

கட்டணம் ரூ.130/-

சென்னையிலிருந்து காலை 7 மணிக்கு புறப்பட்டு இரவு 7 மணிக்கு சென்னை வந்தடையும்

- கோயம்பேடு – அருள்மிகு வைகுண்டவாசப் பெருமாள்
- திருநின்றவூர் – அருள்மிகு பக்தவச்சலப் பெருமாள்
- திருமழிசை – அருள்மிகு ஜெகன்னாதப் பெருமாள்
- திருப்பெரும்புதூர் – அருள்மிகு ஆதிகேசவப் பெருமாள்
- பழைய சீவரம் – அருள்மிகு லக்ஷ்மி நரசிம்மஸ்வாமி
- திருமலைவையாவூர் (தென்திருப்பதி) – அருள்மிகு பிரசன்ன வெங்கடேசப் பெருமாள்
- பொன்பதர்க்கூட்டம் – அருள்மிகு சதுர்புஜராமர்
- மாமல்லபுரம் (திருக்கடல்மல்லை) – அருள்மிகு ஸ்தல சயனப் பெருமாள்
- திருவிடந்தை – அருள்மிகு ஆதிவராகப் பெருமாள் (நித்ய கல்யாணப் பெருமாள்)

காலத்தை வென்ற ஆன்மீகப் புகழ் ஓங்கிய 108 திவ்ய தேசங்களின் சில திருப்பதிகள் இவை

**கீழ்காணும் சுற்றுலா பயணங்களும் உங்களுக்காகவே !**

ஒரு நாள் தேவியர் தரிசனம் (வெள்ளி, செவ்வாய், ஞாயிறு மற்றும் பௌர்ணமி நாட்களில்)
மூன்று நாள் நவக்கிரக வழிபாடு சுற்றுலா (வெள்ளி இரவு முதல் திங்கள் காலை வரை)
ஒரு நாள் பாண்டிச்சேரி சுற்றுலா (சனி, ஞாயிறு மட்டும்)
ஒரு நாள் – சென்னை – திருப்பதி வெங்கடேசப் பெருமாள் தரிசனம் (நாள்தோறும்)



## தமிழ்நாடு சுற்றுலா வளர்ச்சிக் கழகம்

4, ஈ.வெ.ரா. பெரியார் சாலை, சென்னை 600 003
தொலைபேசி (044) 560294, 561385

"**பருவா!** எனக்கா! அது மறைஞ்சு போய் எத்தனையோ நாளாச்சு !" என்கிறார் நளினி.

தன் **சருமம் வறண்டு** போய் இருந்ததை சங்கீதா எப்போதோ மறந்து விட்டார்.

"இப்போதெல்லாம் **வெயிலில்** போனா முகம் கறுக்காமல் இருக்க எனக்குச் சரியான **பாதுகாப்பு கிடைச்சாச்சு"** என்கிறார் விஜயா.

"என் **மென்மையான சருமத்தை** நினைச்சா எனக்கு ரொம்ப **பெருமையா** இருக்கு" என்கிறார் மது.



பருக்களினால் அவதியா? சருமம் வறண்டு போகிறதா? முகத்தில் சுருக்கம் விழுகிறதா - வெயிலினால் முகம் கறுத்து விடுகிறதா? ஃபேஸ் டு ஃபேஸ் ஆயுர்வேத க்ரீம் இத்தகைய பிரச்னைகளை நிச்சயமாகப் போக்கி விடுகிறது. நமது முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்றுள்ள ஆயுர்வேத மருத்துவ முறை தான் அதற்கு காரணம். அந்த மருத்துவ முறையினால் தான் ஒரே ஃபார்முலேஷனைக் கொண்டு பல்வேறு சருமப் பிரச்னைகளையும் தீர்க்க முடிகிறது. ஃபேஸ் டு ஃபேஸ் ஒரு ஆயுர்வேத க்ரீமாகவும், லோஷனாகவும் கூட இரு ரகங்களில் கிடைக்கிறது. இவற்றைப் பயன்படுத்துவது மிகவும் சுலபம். ஃபேஸ் டு ஃபேஸ் சருமத்தினுள் எளிதில் உட்புகுந்து மிகச் சிறப்பாகச் செயல்படுகிறது. முக்கியமாக எத்தகைய பக்கவிளைவுகளும் இல்லாமல். எனவே உங்கள் சருமம் நாள் முழுவதும் பளிச்சென்று மிருதுவாகத் திகழ முடிகிறது. ஃபேஸ் டு ஃபேஸ் பல்லாயிரக்கணக்கான பெண்களுக்கு பலனளித்து வரும் அழகு சாதனம். நீங்களும் பலனடையுங்களேன்.

**இப்போது லோஷனாகவும் கிடைக்கிறது**




**ஃபேஸ் டு ஃபேஸ்**

**பல்வேறு சருமப் பிரச்னைகளுக்கும் ஆயுர்வேதம் அளித்திடும் நிவாரணம்.**

டாலர் கம்பெனி தயாரிப்பு

O&M 1387 TM

அப்போது வந்து சேர்ந்தார் தன் குழந்தைகளுடன் என் ஓர்ப்படி. பக்கத்து வீடுகளில் எனக்கு வைத்துக் கொடுத்திருந்த காராமணி சுண்டலை அவர்களுக்குக் கொடுத்தேன். ஒரே சமயத்தில் கூடத்தில் அமர்ந்திருந்த வெவ்வேறு நபர்கள் வெவ்வேறு சுண்டல்களை சாப்பிட்டார்கள். என்ன நினைத்துக் கொண்டார்களோ என்ற நினைப்பில் மனது அடித்துக் கொண்டது. எல்லோரும் போனதும் என்றும் இல்லாத திருநாளாய் "இன்னிக்கு என்ன சுண்டல்?" என்றபடி வந்தார் கணவர்!

## சுண்டல் சாமர்த்தியம்

மற்றொரு வகை சமாளிப்பை குறிப்பிட்டுச் சொன்னார் திருமதி சித்ரா ஹரிஹரன். "கொலுவில் ஒன்பது நாளும் உட்கார்ந்திருக்கிற சுவாமிகளுக்கு டைம்பாஸாக வேண்டாமா? அதற்காகத்தான் சுண்டல் என்றுகூட நான் நினைத்ததுண்டு - என்னதான் நைவேத்யம் என்று சொல்லிவிட்டு நாமே சாப்பிட்டாலும் எனக்குத் தெரிந்த ஒரு வீட்டில் "நான் என் அக்கா வீட்டுக்குப் போய் வருகிறேன். அதற்குள் வீட்டுக்கு வரும் பெண்களுக்கு சுண்டல் கொடுத்து உபசரியுங்கள்" என்று தன் மகனிடம் சொல்லிவிட்டு அந்த மாமி வெளியில் சென்று விட்டார். வெகு நேரம் யாரும் வரவில்லை. அந்தப் பையனே போக வர தின்றுத் தீர்த்ததில் கையளவு சுண்டல்தான் பாக்கியிருந்தது. அப்போது பார்த்து திடீரென்று நான்கு பெண்கள் வீட்டுக்கு வந்து விட்டார்கள். சுண்டல் கொடுக்காவிட்டாலும் அம்மா வந்ததும் திட்டு விழும்.

கொஞ்சம் யோசித்து புத்திசாலித்தனமாக செயல்பட்டான் அந்தச் சிறுவன். ஒரு தட்டில் பாக்கியிருந்த கொஞ்ச சுண்டலைக் கொட்டி ஏதோ பஃபே முறை போல வந்திருந்தவர்களிடம் நீட்ட, அவர்களும் நாசுக்காக மூன்று நான்கு சுண்டலை மட்டும் எடுத்து வாயில் போட்டுக் கொள்ள, பிரச்னை தீர்ந்தது.

இவ்வளவு கருத்துகளையும் கேட்டபிறகு சுண்டலைப் பார்த்தபோது, வழக்கமாகத் தோன்றும் இண்டல் மறைந்து, அதீத மரியாதை உணர்வே தோன்றி விட்டது போங்கள்!

— அருண் சரண்யா

# பொய்யல்ல நிஜம்

**வேலை கிடைக்காதவர்களுக்கு**

**மாதம் ரூ. 3000/- சம்பளம்**

**(ஆண்/பெண்களுக்கு)**

## நிச்சயமாக வேலை தருகிறோம்

✦ உங்கள் ஊரில் உள்ள பணக்காரர்களைப் பாருங்கள். நிச்சயம் சொந்த தொழில் செய்ப வர்களாகவே இருப்பார்கள்! மற்றவர்களிடம் வேலை செய்பவராக இருக்கமாட்டார்கள்.

✦ நீங்களும் ஏன் சொந்த தொழில் செய்யக் கூடாது?

✦ எந்த தொழிலை செய்வது? எப்படி ஆரம்பிப்பது? நடத்துவது? என்று பலப்பல சந்தேகங்கள் இல்லையா?

✦ தையல் தொழிலை செய்யலாமே!

✦ தையல் தொழிலில்தான் அதிக வருமான வாய்ப்புள்ளது. தினம் ஒரு பேண்ட், ஒரு சட்டை தைத்தால் ரூ. 100/- வருமானம் உண்டு.

✦ தையற் தொழில் ஒன்றும் மிகப் பெரிய ரகசியம் உள்ள தொழில் அல்ல. சாதாரண படிப்பு உள்ள யாரும் எளிதில் புரிந்து கொண்டு செய்யலாம்.

✦ தபால் மூலமாக: ஆண்/பெண்/குழந்தைகள் ஆடைகளுக்கு அளவெடுப்பது? வெட்டுவது? தைப்பது எப்படி? போன்ற பயிற்சி தருகிறோம். பயிற்சி மட்டும் இன்றி, தையல்கடை ஆரம்பித்து வெற்றிகரமாக நடத்துவது எப்படி? என்ற பயிற்சியும் + டிப்ளமோவும் தருகிறோம்.

✦ பயிற்சியின் போது வீட்டில் தையல் இயந்திரம் தேவை இல்லை. தபால் பயிற்சியில் தைக்கும் முறை வித்தயாசமாக அமைக்கப்பட்டுள்ளது.

✦ முழுமையான தையர்கலைஞராக ஆண்/பெண்களை உருவாக்குவோம்.

✦ வீட்டை விட்டு வெளியே சென்று பயிற்சி பெற முடியாதவர்களுக்கு இது ஒரு அருமையான திட்டமாதலால், உங்கள் முகவரியை தெளிவாக ஒரு போஸ்ட் கார்டில் எழுதி

**வனஜ் தையற் பள்ளி,**

**3, ஹால்ஸ் சாலை, எழும்பூர், சென்னை - 600 008.**

என்ற முகவரிக்கு எழுதுங்கள்.
நாங்கள் இலவச விவரப் புத்தகம் அனுப்புகிறோம். போன் : 8258265

**நேர்முக பயிற்சி உண்டு** | **ஹாஸ்டல் வசதி ஆண்களுக்கு உண்டு**

● நேர்முகப் பயிற்சி மையங்கள், 33, காந்தி இர்வின் சாலை, எழும்பூர், சென்னை - 8; ● 4, ராஜாஜி சாலை, மேற்கு தாம்பரம் (நேஷனல் தியேட்டர் எதிரில்) சென்னை - 45; ● 97, L.B. ரோடு, அடையார், சென்னை - 20. (கணபதிராம் தியேட்டர் அருகில்); ● 339, ஆற்காடு சாலை, கோடம்பாக்கம், சென்னை - 24.

# மாற்றலாகிப் போகும் பொம்மைகள்

**பரணிலிருந்து இறக்கும்போதோ, கொலுப்படியிலிருந்து மாற்றும்போதோ கூட சில பொம்மைகள் கையை, காலை உடைத்துக் கொள்வதுண்டு! அப்படியிருக்க அடிக்கடி ஊர் விட்டு ஊர் மாற்றலாகிச் செல்ல வேண்டிய நிலையில் உள்ள குடும்பங்களில், கொலு பொம்மைகளை எப்படி ஊர் விட்டு ஊர் பத்திரமாக எடுத்துச் செல்கிறார்கள்? அந்த அனுபவம் எப்படி?**

"மாற்றல் ஆர்டர் வந்து சேர்ந்தாலே பெரும் அவஸ்தை என்பது நாம் ஆசையுடன் சேர்த்து வைத்துள்ள கொலு பொம்மைகளை பேக் செய்வதுதான். என்னதான் கவனமாக வைத்தாலும் பிரித்துப் பார்க்கும் போது கை போன சிப்பாயும், வாலில்லாத அனுமாரும்தான் இருப்பார்கள்.



• தனலட்சுமி

ஒருமுறை இப்படித்தான்.



சரஸ்வதி பொம்மையின் தலை தனியாக வந்து விட்டது. புதுக்கருக் கழியாத பொம்மை. தூரப் போடவும் மனமில்லை. மரச் சொப்பு சாமானிலிருந்த உரல் மீது சரஸ்வதி தேவியின் தலையை வைத்து, உரலைச் சுற்றி நிறைய சுருக்கங்களுடன் ஒரு பாவாடை தைத்து (உரலை மறைத்து) கட்டி விட்டேன். கொலுவைப் பார்த்தவர்கள் "கருமாரியம்மன் பொம்மை" ரொம்ப அழகாக இருப்பதாகப் பாராட்டினார்கள்!

மயிலின் உடம்பில் குருவியின் தலையை வைத்து "மயில் குருவி" என்ற புதுவிதப் பறவையை உண்டாக்க நேர்ந்திருக்கிறது.

கழுதை தேய்ந்து கட்டெறும்பான கதையாக எத்தனை பொம்மைகள் வாங்கி சேர்த்தாலும், ஊர் ஊராக சுற்றுவதை முடித்துக் கொண்டு, வேலையில் ரிடையராகி, ஓரிடத்தில் வந்து நிற்கும்போது பாதி பொம்மைகள்கூட தேறாது" என்கிறார் திருமதி மீனாட்சி வைத்தியநாதன் நொந்து போன குரலில்.

"வந்த பின்" சமாளிப்பது ஒருபுறமிருக்க, "வரும்முன்" என்னென்ன ஜாக்கிரதை நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளலாம்?

திருமதி தனலட்சுமி சந்திரசேகரனின் ஆலோசனைகள் இவை-

"கணவரின் வேலை காரணமாக இது வரை பத்துமுறை ஊர் மாற வேண்டிய கட்டாயம். "பொம்மைகளை எல்லாம் கழித்துக் கட்டி விடு. இதையெல்லாம் ஒவ்வொரு ஊருக்கும் தூக்கிக் கொண்டு போவது பெரும்பாடு" என்ற யோசனையைச் சிலர் சொன்னதுண்டு. ஆனால் நவராத்திரியைக் கொண்டாடுவதில் எனக்கு நிறைய ஈடுபாடு. அதனால் அப்படியெல்லாம் செய்ய மனம் வந்ததில்லை. சொல்லப் போனால் அங்கங்கே வாங்கும் வித்தியாசமான பொம்மைகளால், ஒவ்வொரு வருஷமும் கொலுபடிகளின் எண்ணிக்கை அதிகரித்துதான் வந்திருக்கிறது.

பொதுவாக ஒரு மாதத்திற்கு முன்பே மாற்றல் வரப் போவது தெரிந்து விடும். உடனே கொலு பொம்மைகள் மற்றும் ஷோகேஸில் உள்ள பொம்மைகள் ஆகியவற்றை "பேக்" செய்து விடுவேன். இவற்றையெல்லாம் நாமொன்றும் தினசரி கையாளப் போவதில்லையே.

பெரிய பொம்மைகளை எல்லாம்



குழந்தைகளின் பழைய கவுன்களிலுள்ள லேஸ்கள், சாட்டின் ரிப்பன்கள் போன்றவைகளை கொலுப்படியில் விரிக்கும் துணி மேல் அலங்காரமாக பார்டர் போல ஒட்ட வைத்தால் வித்தியாசமாக இருக்கும்.

— உஷா

புடவை அல்லது பெட்ஷீட்டில் சுற்றி விடுவேன். பிறகு அக்வாகார்ட் அல்லது காபி மிஷின் போன்றவற்றுடன் வரும் அட்டைப் பெட்டிகளில் இவற்றை வைத்து விடலாம். உடையாது.

சின்னச் சின்ன பொம்மைகளை பேப்பரில் சுற்றி, இனிப்புகள் தாங்கி வரும் பெட்டிகளில் வைத்து ரப்பர் பேண்டால் சுற்றி விடலாம். இதற்காக அவ்வப்போது கிடைக்கும் ஸ்வீட் பாக்ஸ்களை எண்ணெய் படிந்தவற்றை தவிர்த்துவிட்டு சேமித்து வைத்துக் கொள்வது நல்லது.

கலைநயம் மிகுந்த கண்ணாடி பெட்டிகள், சிறு விளக்குகளில் வைக்கும்படியான கண்ணாடி பேழைகள் இவற்றையெல்லாம் வெளியில் மட்டும் பேக் செய்தால் போதாது. உள்ளுக்குள்ளும் பழைய துண்டு, நாப்கின் போன்றவற்றை வைத்து அடைக்க வேண்டும்.

இப்போதெல்லாம் இதற்கென்றே பிரத்யோமான 'ரேப்பர்'கள் கிடைக்கின்றன. பேக் செய்ய இவை வெகு சௌகரியம்.

கொலுவில் பனிச்சிடுவதற்காக சீரியல் ப்ல்புகளை வைத்திருக்கிறேன். இவற்றை ப்ளாஸ்டிக் கவரில் சுற்றி சின்னப் பையில் போட்டு பெட்டியில் வைத்து விடுவேன்.

வழக்கமான பெட்டிகளில் கொலு பொம்மைகளை வைத்தால், படுத்த நிலையிலிருந்து (பிடியைப் பிடித்துத் தூக்கும் போது) நிமிர்ந்த நிலைக்கு வேகமாக மாறுவதால் பொம்மைகளுக்குச் சேதம் ஏற்படலாம். இரு பக்கங்களிலும் பிடி கொண்ட பெட்டி. என்றால் இந்தப் பிரச்னையைத் தவிர்க்கலாம்.

லாரியில் சாமான்களை ஏற்றி அனுப்பும்போது, சற்றே அதிகத் தொகை வாங்கிக் கொண்டு நம் வீட்டுச் சாமான்களை பேக் செய்து லாரியில் ஏற்ற சம்பந்தப்பட்ட நிறுவனமே சம்மதிப்பதுண்டு. நாற்காலி, டி.வி. பீரோ போன்றவற்றை எல்லாம் இவர்கள் அழகாகவே பேக் செய்வது உண்மைதான். ஆனாலும் பொம்மைகளை பேக் செய்யும் பொறுப்பை இவர்களிடம் விடாததே நல்லது. ஏனென்றால் அவர்கள் வீட்டைக் காலி செய்வதற்கு ஒருநாள் முன்தான் வருவார்கள். பேக்கிங்குகள் குறைந்த இடத்தையே அடைத்துக் கொள்ளுமாறு இருக்க வேண்டும் என்பதுதான் அவர்கள் முக்கிய லட்சியமாக இருக்கும். எனவே பொம்மைகள் போன்ற டெலிகேட்டான சமாச்சாரங்களை நாமே பேக் செய்வதுதான் நல்லது.

ரயில்வே கன்டெய்னர் சர்வீஸில் சாமான்களை ஏற்றினோமானால் அதிக பேக்கிங் தேவையில்லை. மழை பெய்தாலும் கவலையில்லை. வந்து சேர பல நாட்கள் ஆகும் என்பதுதான் ஒரே குறை.

மற்ற சாமான்களோடு கொலு பொம்மைகளைச் சேர்த்து பேக் செய்ய வேண்டாம். கொலு பொம்மைகளோடு கொஞ்சம் நாப்தலின் உருண்டைகளையும் போட்டு தனியான பெட்டிகளில் பேக் செய்தால் (உள்ளே என்ன பொம்மைகள் இருக்கின்றன என்பதைக்கூட எழுதி மேலே ஒட்டி விடலாம்) வந்து சேர்ந்தவுடன் அப்படியே எடுத்து பரணையில் ஏற்றி விடலாம்.

ஒருமுறை சென்னையிலிருந்து ஆக்ராவுக்கு லாரியில் சாமான்களை ஏற்றி அனுப்பினோம். கஸியாபாதில் சாமான்களை வேறு லாரியில் மாற்றியிருக்கிறார்கள். அப்போது அவர்கள் காட்டிய அலட்சியத்தால் சின்னச் சின்ன சுவாமி உருவங்களை வைத்துக் கொள்ளும் மண்டபம் வளைந்து விட்டது. எனவே நம் சாமான்கள் வழியில் இப்படி மாற்றப்படுமா என்பதை உறுதி செய்து கொண்டு, அப்படியானால் பொம்மைகளை பேக்கிங் செய்வதில் மேலும் அதிக கவனம் செலுத்த வேண்டும்."

— அருண்

# குறுநாவல்

"டுபு டுபு... டுபு..."

மோட்டார் சைக்கிளின் சத்தம் நெருங்கி வர வர - சதாசிவத்துக்கு நாராசமாய் இருக்கிறது.

"இது என்ன மோட்டார் சைக்கிள்... ஜாவாவா... ராஜ்தூதா..."

"ஏதோ ஒரு சனியன்... எருமை மாடு மாதிரி..."

"இப்ப எத்தனையோ விதவிதமா 'பைக்'குங்க வந்தாச்சு. சத்தமே கேட்காம, பஞ்சுல ஒத்தி எடுக்கற மாதிரி, மெத்து மெத்துனு... ஆனா, இந்த ஊர்க்காரனுங்க இந்த மாதிரி - எட்டு ஊரை கதி கலங்க அடிக்கற சத்தத்தோட, இதுலதான் பவனி வருவானுங்க... இதுல ஒரு திருப்தி..."

"எல்லாம், நாலு காசு இருக்கற திமிர். அப்பன்காரன், என் எதிரே வேஷ்டிய மடிச்சுக் கட்ட மாட்டான், தோளுல துண்டு போட மாட்டான்... ஆனா பிள்ளைகள்...?"

வெய்யிலில் பார்வை மறைத்தாலும் - தெருவில் இத்தனை இறைச்சலுடன் வருபவனை ஒருமுறை, கண்களை இடுக்கிக் கொண்டு பார்க்கிறார் சதாசிவம்.

புலி நகம் கோர்த்த மைனர் சங்கிலியும், கையில் தங்கக் கடியாரமும், சில்க் ஜிப்பாவுமாய்... பாதித் தொடை வரையில் ஜரிகை வேஷ்டியை மடித்துக் கட்டிக் கொண்டு...

"வேற யாரு... காசிலிங்கம் பிள்ளை சிவநேசன்தான்..."

சதாசிவம், திண்ணையிலிருந்து எழுந்து, 'விருட்'டென உள்ளே போகிறார்.

"நான் பார்த்து எடுத்து, தொப்புள் கொடி

அனுராதா ரமணன்

அறுத்துப் போட்டக் குழந்தை... நின்னு, ஒரு வார்த்தை பேசினாத்தான் என்ன குறைஞ்சு போயிடுத்தாம் உங்களுக்கு..."

நாராயணியின் உடம்பு எப்பொழுதோ காற்றோடு கரைந்து போனாலும் குரல் மட்டும் காற்றிலேயே தங்கி விட்டது போல...

"இந்த ஊருல இருக்கற ஜனங்கள்லே முக்கால்வாசிப் பேரை, நீதான் பிரசவம் பார்த்து, இந்த மண்ணுக்குக் கொண்டு வந்தே. அந்த கர்வத்தோடவே போய் சேர்ந்துட்டே. என்னைப் பாரு, திண்டாடறேன். சிரிக்காதேடி, மகாபாவி!"

மோட்டார் சைக்கிளில் ஆரோகணித்து வருபவனின் முகத்தில் விழிக்கப் பிடிக்காமல், எழுந்து வந்த வேகத்தில், வாசற்படியில் கால் தடுக்கி, கட்டை விரல் நகம் பெயர்ந்து, ரத்தம் கசிந்தது.

"ஷ்... ஆ..."

அவர், விரலை அமுக்கிப் பிடித்துக் கொண்டு அப்படியே முற்றத்துத் தூணில் சாய்ந்து உட்கார்ந்து விட்டார்.

இது போல, சொடுக்கி விட்டாற் போல, எழுந்திருக்கிற வயசில்லை அவருக்கு. இந்த ஐப்பசி வந்தால், எழுபத்தியெட்டு முடியப் போகிறது...!

நாராயணி மட்டும் உயிரோடு இருந்தால் - இவர் இப்படி காலைப் பெயர்த்துக் கொண்டு உட்கார்ந்திருப்பதைப் பார்த்தவுடன் பதறிக் கொண்டு ஓடி வருவாள்...

"பார்த்து வரக் கூடாதா... மனசுல என்ன, இன்னும் சின்னக் குழந்தைன்னு நினைப்பா... அடி பட்டா - லேசுல ஆறிப் போற தேகமா இது? கழுத்து மட்டும் சர்க்கரை வியாதிய வச்சுண்டு... ராம ராமா... உங்களுக்கெல்லாம் என்னிக்குத்தான் பொறுப்பு வரப் போறதோ...

"....."

"வாசல் திண்ணையில உட்கார்ந்திருந்தவர், எதுக்காக, 'குடுகுடு'ன்னு உள்ளே ஓடி வந்தீங்களாம்? யாரு மோட்டார் சைக்கிள்லே... நம்ம காசி பிள்ளை சிவநேசன்தானே? என்னமோ எம தூதனைக் கண்டுட்டாப்பல எதுக்கு ஓடி வரணும்? அவன் யாரு... என் கையாலே தொப்புள் கொடி அறுத்துப் போட்டக் குழந்தை..."

அவள் இப்படிச் சொன்னால் மட்டும் தாங்காது சதாசிவத்துக்கு. கண் மண் தெரியாத கோபம் வரும். கழுத்து நரம்பு புடைக்கக் கத்துவார்.

"ஆமா. கோபுரத்தை, பொம்மைதான் தாங்கறாப்பல... நீ என்னடி என்னைக் கட்டிக் காப்பாத்தறது... மூத்து, மூத்தா மூணு பிள்ளைகள் இருக்கு. 'இந்த நிமிஷமே வந்து, என்னை அழைச்சுக்கோடா'ன்னு ஒரு வார்த்தை, ஒரு வார்த்தை போன்லே கூப்பிட்டுச் சொன்னாப் போதும். ஓடி வந்துடுவானுங்க. ஏதோ இருக்கற மட்டும் ஒருத்தனுக்கும் தொந்திரவு கொடுக்காம, சொந்த மண்ணுல அப்பன், பாட்டன் வாழ்ந்த வீட்டுல காலத்தை ஓட்டலாமேன்னு பார்த்தா- பெரிசா அலுத்துக்கறியே... நீ என்ன எனக்கு பாடிகார்டு... போறதுன்னா போயேன்... போ... நான் ஒண்ணும் உன் கையப் பிடிச்சுத் தடுக்கலே..."

"........."

..உனக்கு பயம். புருஷன்காரன், கால்லே 'செப்டிக்' ஆகிப் படுத்தா - நீ ஊர் சுத்த முடியா தோல்லியோ... அந்த பயம்... இந்த ஊர்லே இருக்கற பல சரக்குக் கடை' நாடார் பொண்டாட்டியில இருந்து, சேரியில இருக்கற பனையேறி பொண்டாட்டி வரைக் கும், அத்தனைப் பேரும் உன்னை நம்பித் தானே, பிள்ளை, உண்டாகி இருக்காளுங்க... அவளுங்களுக்கெல்லாம் ஓடி ஓடிப் பிரசவம் பார்த்து, மருந்து இனறிக் கொடுத்து... நீ செய்யற சேவைக்காக, கலெக்டர் வந்து உனக்கு, 'விருதுநகர் மதர் தெரசா'ன்னு பட்டம் கொடுக்கப் போறார்..."

சதாசிவம், ஓர் இலக்கில்லாமல் பாய்வார். ஆனால், நாராயணி ஒரு வார்த்தை எதிர்த்துப் பேச மாட்டாள். அவளுக்குத் தெரியும். இப்போது பேசுவதும், சுவரில் முட்டிக் கொள்வதும் ஒன்றுதான் என்று... அதற்காகச் சொல்லாமலும் இருக்க மாட்டாள்.



நவராத்திரிக்குப் பாடச் சொன்னால் 'ஐய்யே பாட்டெல்லாம் தெரியாது. தொண்டைகட்டு, மறந்து போயிடுத்து' என்று சாக்கு சொல்வது வழக்கம். மாலையில் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் எல்லோருமாக சேர்ந்து பஜனைப் பாடல்கள் பாடலாம். அனாவசியப் பேச்சுக்கு இடம் இருக்காது.

— எஸ். விஜயா சீனிவாசன்

நான் சென்ற
ஒரு வீட்டில்
பாடத் தெரியாத ஒரு
மாமி கம்பீரமாய்
உட்கார்ந்து தனக்குத் தெரிந்த
சந்தோஷி மாதா கதையைச்
சுருக்கமாய்ச் சொன்னார்.
காதிற்குத்தான் அங்கு வேலையே
இருந்தது. வித்தியாச கொலுவாகவும்
அமைந்தது.
— மஞ்சுளா கிருஷ்ணன்



இரவின் தனிமையில், நிலா காற்றை சுவாசித்தபடி, முற்றத்துக் கட்டிலில் சாய்ந்திருக்கும் கணவரின் காலடியில் உட்கார்ந்து, தனக்குத் தானே சொல்லிக் கொள்வது போலச் சொல்வாள்:

"நாம இருக்கறது விருதுநகர் டவுனில்லே. அதை ஒட்டின கிராமம். இங்கேயிருந்து டவுனுக்குப் போறதானா - லேசுல நடக்கற காரியமா? ஒருநாள் பூராவும் விரயம்... நாலு மணி நேரத்துக்கு ஒரு பஸ் விடறான்... கிராமத்து ஜனங்க... இடுப்பு வலி எடுத்ததுக்கு அப்புறம் பஸ்லே ஏத்தி - டவுனுக்குப் போய்... நடக்கற காரியமா?"

"வேலை வெட்டி செய்யாத பொம்மனாட்டிகளா இருந்தா - வலி எடுத்து, பிரசவமாறதுக்குக் கால தாமதமாகும்.... அதுக்குள்ளே வண்டிய பிடிச்சு ஆஸ்பத்திரிக்கு கொண்டு போய் சேர்த்துடலாம். ஆனா, இவங்க எல்லாம் காடு கழனியில வேலை செய்யறவங்க.... கண்ணை மூடித் திறக்கறதுக்குள்ளே குழந்தை கட்டு வாயிலே வந்து நின்னுடறது..."

"படிக்காதப் பாமர ஜனங்க... பணம் காசுங்கறதைக் கண்ணாலே பார்க்கறதே துர்லபம். ஆஸ்பத்திரிக்குப் போனா, என்ன நடக்குமோங்கற பயம்... எல்லாத்துக்கும் மேல-. இந்த நாராயணி கையாலே பிள்ளைய எடுத்துத் தந்தா - தாயும் பிள்ளையும் காலத்துக்கும் சேஷமமா இருப்பாங்கற நம்பிக்கை..."

"நீங்க ஆயிரம்தான் சொல்லுங்க... பிரசவ வலியியில ஒருத்தி 'அம்மா'-ன்னு அலர்றச்சே - அவளோடக் குரல், என் கர்ப்பப் பை வரைக்கும் போய் ஒரு உலுக்கு உலுக்கிடறது... அந்த நேரத்துல அவ ஜாதி என்ன, கோத்ரம் என்னன்னு எல்லாம் பார்க்கத் தோணறதே இல்லே... இது ஏன், உங்க மனசுக்குப் புரியவே மாட்டேங்கறது...."

நாராயணி, உயிரோடு இருந்த மட்டும் மூச்சுக்கு மூச்சு சொல்லிக் கொண்டிருந்த வார்த்தைகள்....

சதாசிவத்தினால் மட்டும் ஏற்றுக் கொள்ளவே முடியாததாய்...

அவள் சுலபமாய் சொல்லி விடுவாள். ஆனால் சதாசிவத்துக்குத்தான் தலைகுனிவும், அவச் சொல்லும்....

ஆரம்ப காலத்தில் சதாசிவத்தின் பெற்றோர்- மருமகளின் செய்கையினால் அருவெறுத்து; முகம் சுளித்து, பின் இங்கு வந்து ஒரு வாய் தண்ணீர் குடிப்பதுகூட பாவம் எனக் கருதி - சின்னப் பிள்ளையுடன் தங்கி விட்டார்கள்.

பெரிய மகளின் மாமனார் - மூன்று வேளையும் சந்தியாவந்தனமும், காயத்ரி மந்திரமுமாய் இருப்பவர்.

சம்பந்தியைப் பார்க்க வந்தால் - ஏதாவது ஒரு சாக்கைச் சொல்லிக் கொண்டு சாப்பாட்டைத் தட்டிக் கழித்து விட்டு, வந்த வேகத்தில் கிளம்பி விடுவார்.

"ஏதோ பொண்ணைக் கொடுத்துட்டேன். அதுக்காகப் போய் வந்துண்டிருக்கேன். சம்பந்தியம்மா கையாலே பரிமாறி சாப்பிடற அளவுக்கு - எனக்கு இன்னும் மனசு விசாலமாகல்லே..."

- இப்படி அவர் தன் பெண்ணிடம் கூறிய வார்த்தைகள், தனது மகள் வழியாகத் தனது காதுகளுக்கே வந்து சேர்ந்தபோது, கூசிக் குறுகி, குன்றிப் போய் விட்டார் சதாசிவம்.

கடைசி மருமகள் டாக்டர். அதுவும் அமெரிக்காவில். எப்பொழுதாவதுதான் இந்தியா வருவாள்... வரும் போதெலாம், மாமியாரிடம் பனிப்போர்தான்.

"இப்படி கண்ட எடத்துல பிரசவம் பார்த்து, சூரிக் கத்தியாலே தொப்புள் கொடிய அறுத்துப் போடறது எத்தனை பெரிய அபாயம் தெரியுமா? 'டெட்டனஸ்' வந்து பிரசவித்த பொண்ணோ, குழந்தையோ செத்துத் தொலைஞ்சா... எல்லாரும் நம்மைத்தான் வந்து 'பிலு பிலு'ன்னு பிடிப்பா..."

"தெரியறது. நானும் முப்பது வருஷமா , எனக்குத் தெரிஞ்ச அளவுக்கு சுகாதாரமாத் தான் பிரசவம் பார்த்துட்டு வர்றேன். இதுவரைக்கும் ஒரு பழுது சொல்ல முடியாது...

தேர்ந்தெடுக்கப்பட்ட எழுத்துக்களுக்கு

# ரூபாய் ஐந்து லட்சம் மதிப்புள்ள உஜாலா பரிசுகள்

5 கலர் டிவி

10 தங்க வளையல்கள் (1பவுன்)

250 மி. லி. கிங் சைஸ் ரூ. 3.16 ஆதாயம் !

400 நபர்களுக்கு ஒவ்வொருவருக்கும் ரூ. 250/-

UJALA

## உங்களுடைய கருத்துக்களை எங்களுக்கு எழுதவும்

இப்போது உஜாலாவின் டாம்ப்பர் - ப்ரூஃப் மூடியும், ஃபில்ஃபர் - ப்ரூஃப் டிராப்பரும் ஜோதி ஆய்வுக்கூடத்தில் டிசைன் செய்யப்படுகின்றன. உங்களைப் பாதுகாக்க அவை எவ்வாறு வேலை செய்கின்றன ?

இன்று, தின் லேயர் க்ரோமெடோகிராஃபி (TLC) மற்றும் காஸ் க்ரோமெடோகிராஃபி மாஸ் ஸ்பெக்ட்ரோமெட்ரி (GCMS) பரிசோதனைகளில் முன்னேற்ற நாடான ஜெர்மனியில் தடை செய்யப்பட்டுள்ள அமின்ஸ் இல்லாத ஒயிட்னர் உஜாலா - வுக்கு சான்றிதழ் வழங்கப்பட்டிருக்கிறது. சருமத்தில் எரிச்சல் மற்றும் வாயில் பட்டால் விஷத் தீங்கு இல்லை என்று பரிசோதனையில் தெரிகிறது. மேலும் விஷத்தன்மையற்றது. அதோடு, உஜாலா பல இதர தனித்தன்மை வாய்ந்த குணங்களைக் கொண்டுள்ளது. அவை என்ன ?

உஜாலாவை உபயோகிப்பதற்கு சரியான முறை என்ன ?

விஞ்ஞான ரீதியற்ற ஒயிட்னர்களை நீண்ட நாட்களுக்கு உபயோகிப்பது ஆரோக்கியத்திற்கும், உடைகளுக்கும் நல்லதல்ல. ஆகவே அதுபோன்ற தயாரிப்புகளை உபயோகிக்கத் துவங்கியவர்கள் மீண்டும் உஜாலாவையே உபயோகிக்க ஆரம்பித்துவிட்டார்கள்.



Write to : **Jyothy Laboratories (UJALA)**, 2- A, Singarayar Mansion, Abhirami Avenue, Meenambal Salai, K. Kannadasan Nagar, Madras - 600 118.

நவராத்திரி கொலுவிற்கு நாம் தார் ரோடு போடும்போது எந்த இடத்தில் போடுகிறோமோ அந்த இடத்தில் நீளமாகக் கொஞ்சம் மைதா பிசின் (அ) கோந்து தடவி பின் பொடித்த கரித்தூளைப் போட்டால் விருந்தாளிகள் வரும் போது ஃபேன் போட்டாலும் கரித்தூள் பறக்காது காற்றில்.

கரித்தூள் போட விரும்பாதவர்கள் ப்ளாக் ஆயில் ஷீட் வாங்கிக் கத்தரித்து ரோடு போட்டு பின் அதன் அகலமான ஓரங்களில் சலோ டேப்பால் ஒட்டி விடவும். நிலத்துடன் நிலமாக இது பதிந்து விடும். மேலும் வெள்ளைத் தாளில் Stop. அம்புக் குறிகளை கட் செய்து ஒட்டினால் இன்னும் அமர்க்களமாக இருக்கும் ரோடுகள்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

இத்தனைப் பேசறவ - இந்த ஊருக்கு ஒரு பிரசவ ஆஸ்பத்திரி கட்டித் தர வேண்டியது தானே? ஒருத்தனுக்கு மூணு பேரா அமெரிக்காவிலேயும், சிங்கப்பூர்லேயுமா இருக்காங்களே...

இவன் இப்படிச் சொல்லும்போது மட்டும் சதாசிவம், தனது மகன்களுக்கும், மருமகள்களுக்கும் பரிந்து கொண்டு வருவார்.

"எதுக்காக என் பிள்ளைகள் செய்யணும்? அதான் இந்த ஊர் முழுக்க, நீ பிரசவம் பார்த்த குழந்தைகள்தானே... அவனுங்களைக் கட்டித் தரச் சொல்லு...."

"உங்களுக்கு ஏன் இந்த ஜனங்க மேலே இத்தனை கோபம்?"

நாராயணி இப்படிக் கேட்டால் மட்டும் பதில் சொல்லத் தெரியாமல் திகைத்துப் போய் நிற்பார் அவர்.

நெஞ்சுக்குள் தனக்கும், தன் மனைவிக்கும் இடையூறாய் அந்த ஊர் மக்கள் கொடுத்த தொந்திரவுகள் ஒவ்வொன்றாய் வந்து போகும்....

வத்திராயிருப்பு... இரண்டே அக்கிரகாரம்... மிச்சமுள்ள இடங்களில் நாடார்களும், தேவர்களும்.... விவசாயிகளும், ஆடு மேய்ப்பவர்களும்.... இன்னும் வர்ண பேதம் தெரியாத உழைப்பின் புழுதி படர்ந்த மனிதர்களும்....

இந்தச் சின்ன கிராமத்தையே ஒரு தோணியாக்கி மிதக்க விடலாம் போல - என்றும் வற்றாத அர்ச்சுன ஆறு. பசேலென்ற மாந்தோப்பும், தென்னந்தோப்பும்.... ஊரைச் சுற்றி காம்பவுண்டு சுவர் கட்டினாற்போல மேற்குத் தொடர்ச்சி மலை... வருஷம் தவறாமல் மகாலிங்க மலையில் நடக்கும் உற்சவம்...

மனைவியுடன் உற்சவத்துக்குப் போய் விட்டு, இரவு பதினொரு மணிக்கு மேல் வீடு திரும்பி, தான் அது நேரம் வரையில் மேல் அங்கவஸ்திரத்தில் சுற்றி பத்திரப்படுத்தியிருந்த ஜாதி மல்லிகையை மனைவியின் தலையில் சூட்டி, அவளைத் தன்னோடு இழுத்தணைத்து, ஐம்புலன்களும் ஒரு சேர சுகானுபவத்தில் மூழ்கியிருந்தபோது அபசகுனமாய் புழக்கடை கதவை யாரோ அதிர தட்டும் ஓசை...

"யாரு இந்த நிசி வேளையில...."

சதாசிவம் - தவம் கலைந்தாற்போல சிவந்த கண்களை உருட்டி விழிக்க...

"அய்யா... நான்தானுங்க... மாடசாமி... என் பெண்சாதிக்கு இடுப்பு வலி எடுத்திருச்சுங்க... மலைக்கு சாமி கும்புடப் போன என் ஆத்தா இன்னும் வீடு திரும்பலே..."

"அடேய்... அதுக்கு நான் என்னடா செய்ய முடியும்... வண்டிகூட இல்லே..."

"பெரியம்மாவைக் கூப்பிடுங்க சாமீ.... எம் பொண்சாதிக்கு ஒரு டி எடுத்து வைக்க முடியல்லே..."

நாராயணி, தனது இடுப்பைச் சுற்றியிருந்த விரலை வலுக்கட்டாயமாய் பிரித்து உதறினாள்...

"கொஞ்சம் இருங்க... நான் போய் அம்மாவை எழுப்பறேன்..."

"எதுக்கு? நீ வேற... அம்மாவோட ஆசார அனுஷ்டானமென்ன... மாடசாமி நின்ன இடத்தை சாணி போட்டு மெழுகுவா... அவன் பெண்டாட்டிக்குப் பிரசவம்னா... ஏய்... இரு, இரு... எங்கே போறே."

"கொஞ்சம் இருங்க... வந்துடறேன்."

அவள் சிட்டாய் பறந்தாள்... நீண்ட பின்னல் சவுக்கு போல அவரது முகத்தில் சுழன்று அடித்தது...

விடிய ஒரு நாழிகை இருக்கும் சமயத்தில் தான் நாராயணி திரும்பி வந்து, கொல்லைப் புறக் கதவின் நாதாங்கியை மெள்ளத் தட்டினாள்.

அது வரையில் தூக்கமின்றி விட்டத்தை வெறித்துக் கொண்டிருந்த சதாசிவம், புழக்கடைக்கு ஓடினார்.

அங்கே...

நாராயணி, தனது நீண்ட பின்னலை அவிழ்த்து, முதுகு முழுக்க விரித்து விட்டு, கிணற்றில் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்தாள்...

கணவனைக் கண்டதும் கனிந்த புன்னகை...

"பிள்ளைக் குழந்தை... அச்சு, அவதாரம்

அப்படியே மாடசாமிதான்..."

"ம்......" என்றார் சுரத்தில்லாமல்.

"ஆமா.... யாராவது போக வேண்டாமா.... எனக்கு எங்க பாட்டிகூட பிரசவத்துக்குப் போய்ப் பழக்கம். ஏதோ மகாலிங்க மூர்த்தி கை கொடுத்தார்... இந்தாங்க... எனக்கு ஒரு புடவையும், தலை துவட்டிக்க ஒரு துண்டும் கொண்டு வாங்கனேன்... அதுக்குத்தான் உங்களைக் கூப்பிட்டேன்."

அவள் குடத்து நீரை அப்படியே தலையில் கொட்டிக் கொண்டாள். உட்பக்கம் திரும்பி நடந்த சதாசிவத்தின் காலடியில் - நாராயணி தலையில் சூடியிருந்த ஜாதிப் பூ... மெத்தெனச் சிதைந்தது...

இதுதான் ஆரம்பம்.... அடுத்தடுத்து எத்தனையோ...

"நம்ம ராமநாதன் நாட்டுப் பொண் - அதான்டா, சதாசிவத்தோட தர்ம பத்தினி - சாதி வித்தியாசம் பார்க்காம பிரசவம் பார்க்கப் போறாளாமே...."

அக்கிரஹாரத்து மக்களிடையே சலசலப்பு...

"அய்யா, மகனுக்குக் கல்யாணம் நிச்சயம் செஞ்சிருக்கேன்... பத்திரிகை வைக்கேன்... அவசியம் அம்மாவையும் அழைச்சிட்டு வரணும்..."

- இப்படி மேல ரத வீதி சுந்தர பாண்டி, சதாசிவத்துக்கு பத்திரிகை வைத்து அழைத்த போது - பக்கத்து வீட்டு மணி அய்யர் 'கட கட'வெனச் சிரித்தார்.

"ஓய், சுந்தர பாண்டி உம்மை எதுக்காக கல்யாணத்துக்கு அழைக்கிறான் தெரியுமா... அடுத்த வருஷம், அவன் பொண்ணு வயிறும், பிள்ளையுமா வந்தா - உம்ம சம்சாரம்தானே பிரசவம் பார்க்கணும்? அதுக்காகத்தான்..."

அந்த நாளைய சதாசிவத்துக்கு இன்னமும் ரௌத்ரம் அதிகம்.

நாராயணி, சிசுவின் தொப்புள் கொடியை அறுக்க சின்ன சூரிக் கத்தி ஒன்று வைத்திருப்பாள்...

சதாசிவம் ஆசையுடன் மனைவியின் இடுப்பைச் சுற்றி இரு கைகளாலும் வளைக்கும் போதெல்லாம், அனேகமாய் அந்தக் கத்தி அவரது கைகளில் நெருடும்...

"இந்த சனியனை என்னத்துக்கு இடுப்புலேயே செருகிட்டிருக்கே..."

"இன்னிக்கு சிவகாமி பொண்ணுக்குப் பிரசவமாயிடும்னு நினைக்கிறேன்... அங்கேயிருந்து ஆள் வந்து கூப்பிடறப்ப - கத்தியத் தேடுவேன்... நம்ம பசங்க எடுத்துண்டு போய் விஷமம் பண்ணிண்டிருப்பான்கள்... நேரம் விரயமாயிடுமோல்லியோ..."



கண்டல் செய்யும்போது தேங்காயுடன் இரண்டு மிளகாய் சேர்த்து நீர் விடாமல் மிக்ஸியில் அரைத்துப் போட்டால் கண்டலில் காரம் ஒன்று சேர இருக்கும்.

— எஸ். விஜயா சீனிவாசன்

"இத்தனைப் பேசறவ எதுக்காக கல்யாணம் செஞ்சுண்டே.... பேசாமப் படிச்சு டாக்டராயிருக்க வேண்டியதுதானே..."

அவர் இப்படி கேட்கும்போது மட்டும் நாராயணியின் விழிகளில் பளபளவென நீரோட்டம் தெரியும்.

"ஆசைதான்... பொம்மனாட்டிக்கு படிப்பு ஏது... அஞ்சாங்கிளாஸ்ஸோட பள்ளிக்கூடத்துல இருந்து நிப்பாட்டி, அம்மாவுக்கு ஒத்தாசையா கையில கரண்டியக் கொடுத்துட்டா.... பதினைஞ்சுல கல்யாணம்... பத்தொம்பது வயசுக்குள்ளே மூணு குழந்தை... டாக்டருக்கு படிச்சவா எல்லாம் டவுன்லேயே இருந்து ஆயிரக்கணக்குல சம்பாதிக்கணும்னு நினைக்கறா.... அதைப் பார்க்கறப்ப, 'ஐயோ, நாம டாக்டருக்குப் படிக்கலையே'ன்னு தோணும்..."

"ஏன்.... இப்ப என்ன குறைஞ்சு போயிடுத்து.... இருபத்தஞ்சு வயசுதானே ஆறது... டாக்டருக்குப் படியேன்..."

சதாசிவத்தின் குரலில் ஆதாரம் இருக்காது... உள்ளே எரியும் நெருப்பின் கங்குதான் வார்த்தைகளாய் வெளிவரும்...

அது கூடப் புரியாதவளா நாராயணி?

"ஏதோ, என்னாலே முடிஞ்சதை செய்யறேன்... உங்களுக்கு என்ன சிரமம் வைக்கறேன்..."

அவளது வார்த்தைகளில் உள்ள ஈரம், அந்த நெருப்பை ஒரு நாளும் அணைத்ததில்லை...



கிலோ ரவையை நெய்யில் வறுங்கள். 300 கிராம் சர்க்கரை, 10 ஏலத்துடன் பொடித்து வையுங்கள். 50 கிராம் உலர்ந்த கொப்பரைத் துருவலும் சிறிது வறுத்த முந்திரியும் சேர்த்து உதிரியாக வையுங்கள்.

நவராத்திரி சமயத்தில் குழந்தைகள் பெரியோர்கள் வரும்போது சிறிது பால் தெளித்து உருண்டையாக்கித் தரலாம். அப்படி சிறிது மிகுதியாகிவிட்டால் பாயசம் செய்து விடலாம். 10 நாட்கள் வரை இந்த மிக்ஸர் கெடாது. (அ) பால் தெளித்து நேரம் இருந்தால்) ஆவியில் சுட்டு சிறிய ரவை கொழுக்கட்டைகளாக தரலாம்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

விடிகாலையிலேயே புறப்பட்டுப் போகும் நாராயணி, பகல் இரண்டு மணிக்கு வருவதும், புழக்கடையில் கிணற்று ஜகடை உருளும் சத்தமும், குடம் குடமாய் தண்ணீர் கொட்டும் சத்தமும்தான் தெரியுமே தவிர -

அவள், விடிகாலையிலேயே கணவர் எழுந்திருக்கும் முன்பே எழுந்து கண்ட வற்றல் குழம்பும், கத்திரிக்காய் எண்ணெய் கறியும் செய்து வைத்து, அப்பளம் சுட்ட குமட்டி அடுப்பின் அவிந்த தணலில் - ஒரு வெண்கல உருளியில் பாலையும், கலந்து குடிக்கும் பதத்தில் காபியும் வைத்து விட்டுப் போயிருப்பது தெரியாது...

சதாசிவம் பெருமூச்செறிந்தார்... ரத்தம் கசியும் கால் விரலைக் கழுவக்கூடச் செய்யாமல் தூணோடு சாய்ந்திருந்தார்.

நாராயணி மறைந்து ஐந்து வருடங்களுக்கு மேலாகியும்கூட, அவள் மீது அவருக்கிருந்த கோபம் தணியவில்லை...

இவரது தந்தை காலத்தில் - அக்கிரஹாரத்து மக்களிடையே மிக உன்னதமான ஸ்தானத்தில் வைத்துப் பேசப்பட்ட குடும்பம் நாராயணியின் செய்கையினால்தான் மதிப்பிழந்து போயிற்று என்கிற குமுறல் இன்னமும் அவருள் இருந்தது...

அந்தக் காலத்தில் அக்கம் பக்கத்தில் நடக்கும் நல்லது பொல்லாததுக்கெல்லாம் - இவரது முன்னிலை தேவையாக இருந்ததென்னவோ உண்மை.

சுந்தரபாண்டி வீட்டுக் கல்யாணத்துக்கு தலை காட்டி, வெற்றிலை பாக்குத் தட்டில் நூறோ, ஐம்பதோ வைத்து மணப்பெண்ணிடம் கொடுத்து கையை உயர்த்தி ஆசிர்வதித்தால் போதும்.

இதுவே சங்கரலிங்க நாடார் அல்லது சீனா தானா செவலை நாடார் வீட்டுத் திருமணமென்றால் - மணமக்கள் மாலை மாற்றும்வரை இருந்து, ஒரு குளிர்பானத்தைக் குடித்துவிட்டு, வெள்ளிக் குங்குமச் சிமிழோ, சந்தனக் கிண்ணமோ பரிசளித்து விட்டு வர வேண்டும்.

இந்தப் பாகுபாடு எதுவுமே இல்லாமல் எல்லா வீடுகளிலும் புகுந்து புறப்பட்டு வருவாள் நாராயணி.

இதனால் அக்கிரஹாரத்தில் நடக்கும் வைபவங்கள் என்றால் நாராயணியை அழைக்கத் தயங்கினார்கள். தங்களுக்குள் கிசுகிசுப்பாய் விமரிசித்தார்கள்.

அதுவும் பக்கத்து வீட்டு மணி பெண்டாட்டியும் எதிர் வீட்டு சேஷுப் பாட்டியும் முகத்துக்கு நேரேயே சொல்வார்கள்.

“நாராயணிய - பொண்டுகளா, சுமங்கலி பிரார்த்தனையில உட்கார வைக்கக்கூட யோசிக்க வேண்டியிருக்கு. மடிக்காரியங்களுக்கு சேர்த்துக்கவும் முடியலை... எப்பவும் தொப்புள் கொடிய அறுக்கற கத்திய இடுப்புல செருகின்டே அலையறா, என்னதான் குளிச்சு, தெளிச்சாலும் மனசுக்கு அசூசையாவே இருக்குடியம்மா...”

“அக்னி ஹோத்ரம் பண்ணின வீடு. இன்னிக்கு ஒரு வெங்கலப் பானை சாதம் சுத்த பத்தமா செய்ய நாதியில்லாமப் போயிடுத்து...”

“எல்லாம் வீட்டு ஆம்பிளை கொடுக்கற இடம்தான்... வெளியில போனா - மறுபடியும் உள்ளே வராதேயின்னு திட்டவட்டமாச் சொன்னா - அவ இப்படி ‘திடுதிடு’ன்னு கிளம்புவாளா... ஆயிரம்தான் சொல்லு... அக்னி ஹோத்ரம் ராமநாதய்யர் பெத்தெடுத்த புத்திர சிகாமணி அசடுதான்!”

வெளி மனிதர்களுக்குத் தெரியுமா... வீட்டுக்குள் நடக்கும் ருத்ரதாண்டவம்...

சதாசிவம் கோபத்தில் மனைவியை எத்தனையோ முறை கை நீட்டி அறைந்திருக்கிறார்... துணிமணிகளைச் சுருட்டி அவள் முகத்தின் மீதே எறிந்து ‘இந்தக் கணமே இடத்தைக் காலி பண்ணு’ என்று கத்தியிருக்கிறார். இலையில் பரிமாறிய அன்னத்தை கூடமெங்கும் விசிறியெறிந்திருக்கிறார்...

ஆனால்....

அவளது துணையின்றி மூன்று குழந்தைகளையும் வளர்த்து ஆளாக்கி இருக்கவே முடியாது தன்னால் என்பது அவர்

அறிந்த ஒன்றுதான்...

அதனாலேயே அந்தந்தக் கண வாக்கு வாதங்கள் அப்படியப்படியே கரைந்து போனது...

அத்தனை அடியுதைகளையும், வசவு களையும் சுமந்து கொண்டு நாராயணி என்னவோ சிரித்தபடிதான் வளைய வருவாள்.

அதுவும் மேல ரத வீதி, பாவாலி தெரு, கலோச்சன நாடார் தெரு, அல்லிப் பிள்ளை ராவுத்தர் தெரு, இவைகளிலிருந்து கல்யாணப் பத்திரிக்கை வந்தால், இவள்தான் முதலில் போய் ஆஜர் கொடுப்பாள்.

"இவளைப் பார்த்தேளா.... என்ன அப் படிப் பார்க்கறேள்... நம்ம ஆமத்தூர் ராம சாமியோட பிள்ளை.... எப்படி வளர்த் துட்டான்.... எட்டாம் மாசமே பொறந்த முந் திரிக் கொட்டை.... கையும் காலும் சப்பி சப்பியா... முற்றத்துல - பாய்லே போட்டா - காக்கா கொத்த வரும்... அப்படிக் கிடந்தவன்... இன்னிக்கு பம்பாய்லே இருக்கானாம்... லட்சம் லட்சமா அரிச்சுக் கொட்டறானாம்..."

"இந்தாடியம்மா... இப்படி வந்துட்டு போ... அய்யாவும் உன்னைப் பார்க்கட்டும்.... கொக் கலாஞ்சேரியில இருந்து பண்ணை வேலைக்கு வருவாளே கனியம்மா... அவ பொண்ணு ரோஜா.... ரோஜாதானேடி உன் பேரு... என்னது, ரோசாவா... உன் நாக்குல தர்ப்பையப் போட்டுப் பொசுக்க..."

"என்ன, உங்களுக்கு ஞாபகமிருக்கா... ஒரு நாள் ராத்திரி ஒரு மணிக்கு, கொட்டற மழையில போனேன்... சண்டி... லேசுல அம்மா வயித்தை விட்டு வரல்லையே... பொறந்ததும் கத்தின கத்தல்லே, அடை மழைகூட ஸ்தம்பிச்சிடுத்து... சிரிக்காதே... வாய் மேலேயே போடுவேன்... இன்னிக்கு இது பட்டணம் போய் காலேஜ்ல படிக்கறது..."

நாராயணிக்குத் தன் பிள்ளைகளின் பெயர்கள் நினைவிருந்ததோ இல்லையோ... தான் பிரசவம் பார்த்த குழந்தைகளின் பெயர் களும், அவர்களைப் பெற்றவர்களின் பெயர் களும்கூட மனப்பாடம்.

"இவன் பொறந்தப்ப, அர்ச்சுனா ஆறு உடைப்பெடுத்து, ஊரே வெள்ளக் காட்டுல மிதந்தது..."

"மீனாட்சிக்கு ரெண்டாவது பிரசவத்தும் போதுதானே - உங்க அப்பாவோட சதா பிஷேகம்... நீங்க ஒரு வாரம் முன்னாலேயே ஸ்ரீவில்லிப்புத்தூருக்கு போயிட்டேள்... நான், சதாபிஷேகத்துக்கு முதல் நாள்தானே வந்து சேர்ந்தேன்... உங்கம்மா வாசத் திண்ணை யிலேயே நிற்க வச்சு, மடி நிறைய மண் டகப்படி கொடுத்தாரே...

"யாரு....பொம்மாப்பட்டி சின்னையனா... பெண்டாட்டி பேச்சைக் கேட்டுட்டு தனிக் குடித்தனம் போயிட்டியாமேடா... எல்லாம் உங்க ஆத்தா சொன்னா... நீ பொறந்தப்பவே கழுத்துல கொடி சுத்திண்டு பொறந்தேடா... சித்த தாமசப்பட்டிருந்தாக்கூட - தொப்புள் கொடியே உனக்குத் தூக்குக் கயிறா ஆகி யிருக்கும்... 'சட்டு'னு உருவிப் போட்டேன். நீ இந்த ஆட்டம் ஆடறே... தொப்புள் கொடிய அறுக்கற சூரிக் கத்தி இன்னமும் என் இடுப்புலதான்டா இருக்கு... நெஞ்சைக் குத்தி, ஆவக்கா ஊறுகாய் உலுக்கற மாதிரி உலுக்கிடுவேன் உலுக்கி... ஜாக்கிரதை..."

அது என்னமோ அவளைச் சுற்றி இந்த மாதிரிப் பட்ட கும்பல்தான் அதிகம். எல் லாமே கை கட்டி, வாய் பொத்தி நிற்கும். 'அம்மா, அம்மா' என்று தாய் பசுவைத் துரத்தும் கன்றுகளாய் அவள் பின்னாலேயே ஓடி வரும்...

அக்கிரஹாரம் மட்டும் இவளிடம் எட்டி நின்று பேசும்... 'என்ன சௌக்கியமா' என்கிற ஒரு வார்த்தையுடன் நிறுத்திக் கொள்ளும். தங் கள் வீடுகளில் நிறை மாதக்காரி இருந்தால் மட்டும் - தினந்தோறும் ஒரு கிள்ளு நித்திய மல்லிகைச் சரமோ, திரட்டுப் பாலோ எடுத்துக் கொண்டு கரிசனமாய் இவள் வீட்டுப் படியேறி வந்து பேசும்...

அதுவும் பட்டண்ணா வீட்டில் இவள் போட்ட சண்டை - சதாசிவத்துக்கு மறக்கவே மறக்காது -

"இந்தாடீ... நாராயணீ.... கண்ட கண்ட

குளம் இல்லாத கொலுவா? அழகாய் குளம் வைத்ததும் தண்ணீரில் ஒரே ஒரு சொட்டு நீலம் விட்டு அந்த நீல நீரினுள் சிவப்பு, பச்சை, மஞ்சள் கலந்த பொடி சமிக்கிகளை மூழ்க விடுங்கள். மெல்லிய வெளிச்சத்தில் குட்டி பிருந்தாவனத்துக்கே வந்துவிட்டதை உணர்வீர்கள்.

— கி. மஞ்சு.



# … யுரோக்ளீனிங் செய்முறையை தோழமையான யுரேகா ஃபோர்ப்ஸ் நபர் விளக்கிய நாள்வரையில்."

தோழிகள் என்னை வேடிக்கையாக திருமதி ப்ரிம் 'n' ப்ராப்பர் என்று அழைப்பர்.

அதற்குக்காரணம் நான் எப்போதும் என் வீட்டை மிகவும் சுத்தமாக வைத்துக்கொள்வதனால்தான்.

தோழமையான யுரேகா ஃபோர்ப்ஸ் நபர் யுரோக்ளீன் XL வாக்யூம் க்ளீனரை பயன்படுத்தும் முறை பற்றி விளக்கிக் கூறியபோது நான் ஆச்சரியமுற்றேன்... அது என்னுடைய சோஃபாவில் மட்டுமிருந்தே நிறைய ஒளிந்து படிந்திருந்த தூசியை உறிஞ்சி எடுத்தது... என்னால் நம்பவே முடியவில்லை

யுரோக்ளீன் XL அதன் பல ஒப்பற்ற இணைப்புக் கருவிகளுடன் என்னுடைய வீட்டை சுத்தமாக வைத்துக் கொள்ளும் வேலைகளில் மிகவும் எளிதாகவும், சௌகரியமாகவும் இருக்குமென நான் அறிந்தேன்.

எல்லாவற்றிற்கும் மேலாக, யுரேகா ஃபோர்ப்ஸின் தோழமையான நபருக்கு ஒரு போன் செய்தால் வந்துவிடுவார். என்னுடைய யுரோக்ளீன் XL-லிருந்து அதிகப் பயனைப் பெற உதவி வழிகாட்டுவார்.

அவர் இரண்டு அருமையான உண்மைகளைக் கூறினார். ஐரோப்பாவில் லட்சோப லட்ச வீடுகளில் இதுபோன்ற அற்புதமான மெஷின் மாடல்களை உபயோகிக்கிறார்கள். லட்சோப லட்சத்துக்கும் மேற்பட்ட யுரோக்ளீன் வீடுகளில் என்னுடைய வீடும் ஒன்று என்பதுதான்.

இலவச யுரோக்ளீன் XL செய்முறை விளக்கத்திற்கு இப்போது என் தோழிகளும் அழைக்கும்படி ஊக்குவித்து வருகிறேன்.

ஆம், நீங்களும் ஏன் ஓர் இலவச செய்முறை விளக்கம் தர அழைக்கக்கூடாது?

சாதாரண க்ளீனிங்கிற்கும் யுரோக்ளீனிங்கிற்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டு நீங்களே ஆச்சரிய முறுவீர்கள்!

***பெருமையான யுரோக்ளீன் உரிமையாளர்களுக்கு பரபரப்பூட்டும் அதிசயிக்கும்படியான ...! எழுதுக: G.P.O. பெட்டி எண் 34, மும்பை-400 001, இன்றே!***



Euroclean XL




TRITON/97/EFL/TAM

BANGALORE : TEL: 5536362, 5536383. • TEL: 2224453, 2222314. • TEL: 2267746, 2260971, • TEL: 5263761, 5294234. COCHIN: TEL: 317556, 317555.

வங்களுக்குப் பிரசவம் பார்த்த அதே சூரிக் கத்தியாலே - என் பேரக் குழந்தைக்கும் கொடி யறுக்க வேண்டாம். உனக்குன்னு புதுக் கத்தி நான் வாங்கி வச்சிருக்கேன்.... இது பெரு மாளுக்கு சேவை செய்யற குடும்பம்.. இனிமே எங்களுக்குன்னு தனியா கத்தி வச்சுக்கோ..."

இடியிடியெனச் சிரித்தாள் நாராயணி.

"இது என்ன, ஆட்டையும் மாட்டையும் அறுக்கற கத்தியின்னா நினைச்சே... தாய்க்கும் சேய்க்கும் உசிர் கொடுக்கற கத்திடீ... மனுஷன் வளர்ந்ததுக்கு அப்புறம்தான் ஜாதியும் பேதமும். தொப்புள் கொடிக்கு ஜாதி கிடையாது. உன்னையும் என்னையும் - ஏன், இந்த பூலோகத்துல இருக்கற சகல ஜீவராசிகளுக்கும் ஒரே தொப்புள் கொடிதான்... எல்லாரும் தாயாரோட உதிரத்துல இருந்துதான் பொறக் கிறோம்.... தாயாரோட மடியிலதான் கடைசி மூச்சையும் விடறோம்... நான் சொல்றது பூமாதேவிய... கத்தி கொடுக்கறானாம் கத்தி... இந்தக் கத்தியாலே உன் பேரனை எடுத்துக் கொடுத்தா மட்டும், அப்படியே தூக்கி இடுப்புல வச்சுப்பியோ... அலம்பி, சுத்தம் பண்ணினதுக்கு அப்புறம்தானே கையாலேயே தொடுவே... ஏன் கேட்கறேன்னா, பெரு மாளுக்கு சேவை செய்யப் போற சிசுங் கறதுக்காக, உன் பேரன் சந்தனத்தைப் பூசிண்டு ஒண்ணும் பொறக்கப் போறதில்லே...."

---

வீட்டில் சிறு குழந்தைகள் இருந்தால் பால் பவுடர் வாங்குவோம் அல்லவா! டப்பாவின் உள்ளே இருக்கும் அலுமினியம் தகடு கொண்டு கொலு அலங்காரம் செய்யலாம்.

முதலில் தகடுகளை பஞ்ச்சிங் மெஷினை உபயோகித்து சிறு சிறு வட்டங்கள் செய்து கொள்ள வேண்டும். பிறகு நாம் ஏதாவது ஒரு டிசைனை டார்க்கு துணி (அ) பேப்பரில் 'டிரேஸ்' செய்து கொள்ள வேண்டும். பிறகு அந்த டிசைன் முழுவதும் பெவிகால் தடவி அதில் இந்த வட்டங்களைத் தூவ வேண்டும். மரத்திற்கு (⌣) இந்த வடிவிலும் இலைகளுக்கு (♠) திலகம் வடிவத்திலும் ஒட்ட வேண்டும். பார்ப்பதற்கு மிகவும் நன்றாக இருக்கும். முடித்த பின் ட்ரேன்ஸ்பரண்ட் பேப்பர் ஒட்டி அதிகமாக லைட் படும் இடத்தில் மாட்டினால் மிகவும் பளபளவென்று ஜொலிக்கும்.

— ஸ்வர்ணா கிருஷ்ணகுமார்



'நாராயணிக்கு வாய் அதிகம்' - என்று அக்கம் பக்கத்துப் பெண்கள் பேசினாலும் - அவளுடைய அநாயாச மறைவு கண்டு பிர மித்துதான் போனார்கள்...

ஐந்து வருடங்களுக்கு முன்பு - சொல்லி வைத்தாற் போல மூன்று பிள்ளைகளும் - தங்களது மனைவி, குழந்தைகளுடன் வெளி நாட்டிலிருந்து வந்து - இதோ, இந்த வீடு முழுக்க சுத்தமும், சிரிப்புமாக முகா மிட்டிருந்தனர்...

நாராயணி, விடிகாலையில் ஒரு பிரசவம் பார்த்து விட்டு வந்து, கிணற்றடியில் தலை முழுகி, அத்தனைப் பேருக்கும் சமைத்து, கண வரிலிருந்து, பிள்ளை, மருமகள், பேரன்கள் உட்பட அனைவரையும் உட்கார வைத்து சாப்பாடு பரிமாறி... கடைசியில் தான் சாப்பிடுவதற்காக இலை முன் உட்கார்ந்தவள் 'பொட்'டென உதிர்ந்து போனாள்... கடைசி நேரப் போராட்டம் எதுவுமே இல்லை... மணைப் பலகையில் ஒரு காலை குத்துக் காலிட்டு, முழங்காலில் இரு கரம் பதித்து, அவள் அமர்ந்திருந்த கோலம் - பல வருடங்களுக்கு முன் மணக் கோலத்தில் அவள் அமர்ந்திருந்ததை நினைவுறுத்துவது போல... அவளின் மரணத்தில்கூட ஓர் அழகிருந்தது.

விஷயம் கேள்விப்பட்டு ஊரே அந்த வீட் டின் உள்ளும் புறமும் கூடி விட்டது... சதா சிவம் விக்கித்துப் போய் - இதோ, இப்பொழுது சாய்ந்திருக்கிறாரே... அதே தூணில் சாய்ந்து உட்கார்ந்து விட்டார்...

யார் யாரோ வந்து, யாருடைய உத்திரவுக் கும் காத்திராமல் தாங்களே வேலைகளைப் பகிர்ந்து போட்டுக் கொண்டு செய்தார்கள்...

நாராயணியைக் குளிப்பாட்டிய பட்டண்ணா மனைவி - அவளது இடுப் பிலிருந்த சூரிக் கத்தியை எடுத்து வீசி எறிந்தாள்... யாரோ, அந்தக் கத்தியைக் கொண்டே நாராயணியின் புறாப் பாதங்களின் இரு கட்டை விரல்களுக்கும், வெள்ளைத் துணியைக் கிழித்துக் கட்டினார்கள்...

அவளது கடைசி பயணத்தின்போது பெற்ற பிள்ளைகளை விடவும் - அந்த வத்திராயிருப்பு கிராமமே பெரிசாய் ஓலமிட்டு அழுதது---

"அம்மா... போறீங்களே..."

அந்தக் கணத்தில் சதாசிவத்துக்கும் வாய் விட்டு அழ வேண்டும் போலத்தான் துக்கம் பொங்கிப் பொங்கி வந்தது. பாழாய்ப் போன கௌரவம் தடுத்தது.

'போறா பாரு... என்ன ஒரு அகங்காரமா திமிரா...'



தோட்டு அட்டையை அவரவர் கற்பனைத் திறனுக்கு ஏற்ப கிளி, குயில், மயில், யானை, முயல் என்று வரைந்து வெட்டிக் கொள்ளுங்கள். இரண்டு மூன்று கலரில் உல்லன் வாங்கி, கீரை நறுக்குவதுபோல் பொடியாக நறுக்குங்கள். அட்டையில் வெள்ளைத்தாள் ஒட்டி அதில் பெவிகால் தடவி நிரப்புங்கள் நெருக்கமாக.

கண்ணுக்கு மட்டும் ஒரு கறுப்பு பட்டன் வைத்து ஒட்டி விடுங்கள். ஒருநாள் காய விடுங்கள்.

கொலு படிக்குப் பின்புறம் சுவற்றில் இவற்றை செல்லோ டேப் கொண்டு ஒட்டுங்கள்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

'எப்பவும் சொல்லாமக் கொள்ளாமக் கொல்லைப் பக்கம் வழியா ஓடுவா... இப்ப வாசப் பக்கமா ஓடறா...'

'இப்ப என்ன... மூணு பிள்ளைகள் இருக்காளுங்க.... எப்படா நான் வருவேன்னு காத்துட்டு இருக்காளுங்க... இந்த இடத்தை விட்டு, நானும் கூடிய சீக்கிரம் அவன்களோடக் கிளம்பிடுவேன்...'

உண்மையில், நாராயணி இல்லாத வீட்டில் சதாசிவத்துக்கு இருக்கப் பிடிக்கவில்லை. ஆனாலும் ஒரு மனம் நினைப்பதை - இரண்டாவது மனம் மறுத்தது... செத்துப் போன மனைவியிடம் கூட சவலைக் குழந்தை மாதிரி முரண்டு பிடித்தது... விறைத்துக் கொண்டது...

ஆனால், மூன்று பிள்ளைகளில் எவனுமே உடனடியாக, தந்தை என்கிற சுமையைத் தன் தோளில் சுமக்கத் தயாராக இல்லை...

"அப்பா... பாஸ்போர்ட், விசா எல்லாம் எடுக்கறது அவ்வளவு சுலபமில்லே. அதுவும் உனக்கு ஏற்கனவே டயபடீஸ், பிளட் பிரஷர் எல்லாம் இருக்கு. மெடிகல் சர்டிபிகேட் அத்தனை சீக்கிரமாத் தர மாட்டாங்க. முன்னாலேயே மெடிகல் எக்ஸ்பென்ஸுக்காக ஆயிரக் கணக்குல பணம் கட்டியாகணும்... ஒரு வருஷம் போகட்டும்... பார்க்கலாம்..."

"ஆமாப்பா. எப்படியும் அம்மாவோட வருஷ திவசத்துக்கு வர்றப்ப இது பத்தி பேசி முடிவு செய்யலாம். எதுக்கும் உங்களுக்கு சமைச்சு வைக்க, ஒரு பேச்சுத் துணைக்கு, ரெண்டாங்கட்டை ஒழிச்சு நம்ம மனுஷா யாருக்காவது வாடகைக்கு விட்டுடலாம்..."

"நானே சொல்லணும்னு நினைச்சேன். அங்கே வந்தா - நானும் மீனாவும் ஆபீஸ் போயிடுவோம்... குழந்தைகள் ஸ்கூலுக்குப் போயிடும். இங்கே மாதிரி தெருவுல இறங்கி காலாற நடக்க முடியாது... பேச்சுத் துணைக்கு ஆளில்லாம நொந்து போயிடுவே..."

சதாசிவம் தலை குனிந்து உட்கார்ந்திருந்தார்... அன்றைக்கு நாராயணியின் கால் கட்டுக்கும், பின், வழிப் பயணத்துக்கான குருத்தோலைக் கட்டுக்கும் உதவிய சூரிக் கத்தி - அவரதுக் காலடியில்... மௌனச் சிரிப்புடன்...

மெள்ள எழுந்து அதை எடுத்து - தனது கட்டிலுக்கு மேலே - ஓடுகளைத் தாங்கும் உத்திரத்தின் இடுக்கில் செருகி வைத்தார்.

நாராயணியின் வருஷ திவசத்துக்கு ஒரு பிள்ளையும் வரவில்லை. மாறாக டாலர், டாலராக பணத்தை அனுப்பி வைத்தார்கள்.

'இதுக்காக இப்ப லீவு எடுக்கறதுங்கறது முடியாது போல இருக்குப்பா. இன்னும் நாலு மாசத்துல என் மாமனாருக்கு சதாபிஷேகம் நடக்கப் போறது... இருக்கறது இவ ஒருத் பொண்ணுதான்... அதனாலே அப்ப வந்தாலும் உபயோகமா இருக்கும்னு நினைக்கறேன்..."

- பெரியவன் சொல்லி விட்டான் போனில்.

இரண்டாமவனின் மனைவிக்கு கருப்பை ஆபரேஷனாம். இன்னும் ஆறு மாசத்துக்கு அசைய முடியாதாம். ஆனால், அம்மாவின் வருஷ திவசமும், ஒன்றில் ஒன்று குறையாமல் நடக்க வேண்டுமாம்.

'பணத்தை அனுப்பி வைக்கிறேன். எல்லா தானமும் செய்... நிறைய அன்னதானம் செய்...'

- இப்படி கட்டளையிட்டு விட்டான்.

மூனறாமவன் இது போல எதுவுமே பேசவில்லை.

"அங்கே என்ன இருக்குப்பா... நாங்க வர்றதுக்கு?"

"ஏண்டா... நானில்லையா..."

"நீ இருக்கேப்பா... அம்மா இருந்தா, அது ஒரு மாதிரி... தினமும் விதவிதமா சமைச்சுப் போட்டு, பேரக் குழந்தைகளோடு சளைக்காமப் பேசி... ப்ச்... இப்ப நாங்க வந்தா - உனக்கும் தொந்திரவு... எங்களுக்கும் சிரமம். இங்கே எல்லாமே எலக்ட்ரிக் ஹீட்டர், டிஷ் வாஷர்னு இப்படியே பழக்கப்பட்டுட்டா... அங்கே வந்து, கிணத்துல தண்ணி இறைச்சு, குமிட்டியில சமைக்க எல்லாம் அவளுக்குத் தெரியாது..."

அவ்வளவுதான்...



களி மண்ணை சற்று மணலுடன் கலந்து 1 அடி உயரத்திற்கு 1½ அடி அகலத்திற்கு சற்று நீர் பிசைந்து மலைபோல் உருவாக்கி ஆங்காங்கு ஒரு 10 (அ) 12 சிறிய குழி செய்யவும். அதனுள் பிளாஸ்டிக் சிறிய மிருகங்கள் சிலவற்றைப் பதித்து பின் கேழ்வரகை தெளிக்க, நான்கு நாட்களுக்குள் முளைத்து சிறிய பச்சை பசேல் மலை மிருகங்களுடன் கண்ணையும் கருத்தையும் கவரும். இதை ஒரு தாம்பளத்தில் 3 நாட்கள் முன்னதாக செய்து வைக்கவும்.

— லக்ஷ்மி ஸ்ரீநிவாஸன்

அடுத்த நாலு வருடங்களில் 'அப்பா' என்று கூப்பிட்டுக் கொண்டு எவனுமே, வத்திராயிருப்பு பக்கம் எட்டிப் பார்க்கவில்லை.

சின்னவன் பெண்டாட்டி, தம்பிக்குக் கல்யாணம் என்று சென்னை வரை வந்துவிட்டு, அங்கிருந்து ஒரு போன் செய்தான்.

"அப்பா, எப்படி இருக்கேள்? நான் இங்கே வந்து எட்டு நாளாறது... கல்யாண சமயத்துல எங்கம்மா பாத்ரூம்லே வழுக்கி விழுந்து காலை ஒடைச்சிட்டுப் படுத்துட்டா... அந்தண்டை இந்தண்டை நகர முடியலே.. பதினைஞ்சு நாள் லீவுல வந்திருக்கேன். வந்த இடத்துல உங்க பேத்தி ரம்யாவுக்கு விடாத ஃபீவர்... எத்தனைதான் ஜாக்கிரதையா இருந்தாலும் இந்தியாவுல பொல்யூஷன் ஜாஸ்தி... இன்பெக்ஷன் எங்கே எங்கேயின்னு தேடிண்டு வந்துடறது... நீங்க எப்படி இருக்கேள்... குடித்தனக்காரா நல்லா கவனிச்சுக்கறாளா... பணம் போதுமா... மருந்தெல்லாம் ஒழுங்காச் சாப்பிடுங்கோ... ஸ்வீட் கிட்டயே போகாதீங்கோ. உங்க பிள்ளைக்கு எப்பவும் உங்களைப் பத்தியேதான் கவலை. இப்படி அழைச்சுக் கொண்டு வந்து வச்சுக்க முடியாதபடி இருக்கேயின்னு..."

"..............."

"நான், நாளைக்குப் பம்பாய் போறேன். என் தங்கையோட... அங்கே ரெண்டு நாள்... எங்கே, ஒன்றரை நாள்தான்... அப்படியே ஏர்பிளைட் ஏறிடுவேன்... அடுத்த தடவை, வத்திராயிருப்புல தங்கறதுக்காகவே ரெண்டு மாச லீவுல, நானும், உங்க பிள்ளையும் வரப் போறோம். வச்சுடட்டுமா... உடம்பைப் பார்த்துக்கோங்கோ..."

அக்கிரகாரத்திலிருந்து தோப்புத் தெருவுக்குப் போகும் வழியில் தபாலாபீஸ்... வெளியூர், வெளிநாடு தொலைபேசித் தொடர்பெல்லாம் இன்னும் தெருவுக்குத் தெரு முளைக்காத ஊர்... போன் வந்தால் தகவல் சொல்லி அனுப்புவார்கள்...

பிள்ளைகளிடம் பேசும் ஆவலில் சதாசிவம் தன் வயசை மறந்து ஓடுவார்... உள்ளூர ஒரு சபலம் குரல் கொடுக்கும்.

'இந்த தடவை, 'புறப்பட்டு வா'ன்னு சொன்னாலும் சொல்லுவான் குழந்தை... எத்தனை நாளாச்சு...'

'அவன்களுக்கு மாத்திரம் பாசமில்லையா என்ன... பதினஞ்சு நாளைக்கு ஒருதரம் மறக்காம போன் போட்டு பேசிடறான்களே... என்னவோ சொல்ல முடியாத இக்கட்டு... நமக்கென்ன தெரியும்...'

'சின்னவன் பிள்ளைக்கு அஞ்சு வயசு இருக்குமா... இங்கேயிருந்து போறச்சே எட்டு மாசக் குழந்தை...'

எல்லாம் தபாலாபீசுக்குப் போகிற வரையில்தான். சம்பிரதாயமானப் பேச்சில் இதயம் வறண்டு போய், தேகம் பதற, அங்கேயே பெஞ்சில் சற்று உட்கார்ந்திருப்பார் அவர்.

"தாத்தா... முடியல்லியா... வர்றீங்களா... வீட்டுல கொண்டு விட்டுடறேன்...

நாராயணி அறுத்துப் போட்ட தொப்புள் கொடிகளில் சம்பந்தப்பட்ட ஏதாவது ஒன்று குரல் கொடுக்கும். எங்கிருந்தோ கிழவருக்கு மூக்கு நுனியில் துர்வாசர் வந்து உட்காருவார்... 'உதவட்டுமா' என்று கேட்டவனிடம் 'சள்'ளென எரிந்து விழுவார் அவர்.

"எனக்கு வீட்டுக்குப் போக வழி தெரியும். நீ போடா..."

எதிராளியின் முகம், சுட்ட கத்தரிக்காயாய் மாறி விடும்...

'எல்லாம் செத்துப் போன புண்யவதிக்காக கேட்டேன்... இல்லாட்டி இந்தக் கிழத்துகிட்ட என்ன விவகாரம் நமக்கு..."

போகிற போக்கில் அவன் முணுமுணுப்பதுகூட காதில் விழும் சதாசிவத்துக்கு. தலை குனிந்து, உதடு துடிக்க அப்படியே கல்லாய் சமைந்து உட்கார்ந்திருப்பார்...

"சௌக்கியம்தானே அப்பா.... ஒண்ணும்

## வேத சாஸ்திர ரக்ஷணத்திற்கு ஓர் வேண்டுகோள்.

அத்வைத வித்யாசார்ய மஹாராஜா ஸாஹேப்

ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்யஸ்மரண ஸமிதி (Regd)

42, காமாக்ஷி ஜோஸியர் தெரு, கும்பகோணம் - 612 001.

"வேதாத்யயனம் செய்யும் பாக்யமில்லாதவர்கள், வேதாத்யயனம் செய்துவரும் குழந்தைகளை போஷித்து ரக்ஷிப்பதன் மூலம் ஓரளவாவது தனது கடமையை நிறைவேற்ற முடியும். உயிருக்கு மேலாக தேடித்து பொருளை சம்பாதிக்கும் நாம், அதன் ஒரு பகுதியையாவது வேதாத்யயனம் செய்யும் குழந்தைகளை ரக்ஷிக்க அர்பணிக்க வேண்டும்" என்று காஞ்சி ஸ்ரீ மஹாஸ்வாமிகள் உபதேசித்துள்ளார்கள். அவரின் முதாதயர்களான ஸ்ரீ நாகமாம்பா ஸமேத பகவான் ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் அவர்களால் கி.பி. 1542-ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து 455 ஆண்டுகளாக நடந்து வரும் ராஜா வேத காவ்ய பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய்போல் இயங்கி காப்பாற்றி வருகிறது. தற்பொழுது 150 மாணவர்களுக்கு 15 வேத சாஸ்திர அத்யாபகர்கள் வேத சாஸ்திர வித்தைகளை புராதனமான குருகுல முறைப்படி போதித்து வருகிறார்கள். இப்புனித பாடசாலையை ரக்ஷிக்க கீழ்கண்ட திட்டங்களில் அனைவரும் பங்கு கொண்டு ஸ்ரீ வேத மாதாவின் அனுக்ரஹத்தால் ஸகல ஸ்ரேயஸ்களையும் அடைய வேண்டுகிறோம்.

| வ. எண். | திட்ட விவரங்கள் | ஒரு முறைக்கான நன்கொடை துகை (Adhoc donation) | நிரந்தர வைப்பு நிதி 'Corpus Fund' |
|---|---|---|---|
| 1. | ஒரு வேளை ஸமாராதனைக்கு (பகுதி துகை) | Rs. 500 | Rs. 5,000 |
| 2. | ஸுமங்கலி ப்ரார்தன : ஸுமங்கலி ப்ரார்தனைக்கு ரூ. 1000/- வித்யார்த்தி ஸமாராதனைக்கு ரூ. 500/- | Rs. 1,500 | Rs. 15,000 |
| 3. | அமாவாஸ்யை (அ) பௌர்ணமி (அ) த்வாதசி ஸமாராதனைக்கு | Rs. 1,500 | Rs. 15,000 |
| 4. | பௌர்ணமி ஆயுஷ்ய, நவக்ரஹ நக்ஷத்ர ஹோமம் | Rs. 1,000 | Rs. 10,000 |
| 5. | ஒரு வேதம் பயிலும் மாணவனின் பராமரிப்பு மாத செலவு ரூ. 1000/- | Rs. 12,000 P.A | Rs. 1 Lakhs |

Cross செய்யப்பட்ட D.D ஐ A.V.M.S.G.D.P.S. Samithi என்ற பெயரில் அனுப்புக் கோருகிறோம்.

**MAY VEDA MATHA BLESS US ALL**

# கதம்ப மாளிகை.

## ரெடிமேட்

36, பாண்டிபஜார், தி.நகர், சென்னை - 17.



**சிறுவர், சிறுமிகளுக்கும் பெண்களுக்கும்!**

- ★ லேட்டஸ்ட் டிசைன்கள் !
- ★ [illegible] !
- ★ வகைவகையான வண்ணக்களஞ்சியம் !
- ★ பார்க்கச் சென்றால் எண்ணம் சிலிர்க்கும் !
- ★ தேர்ந்தெடுக்க ஆயிரத்திற்கும் மேல் !
- ★ அணிந்தால், கண்டு மகிழ்வோர் ஆயிரத்திற்கும் மேல் !



| | | | |
|---|---|---|---|
| சுடிதார் | மிடி | டாப்ஸ் | பாபாசூட் |
| பேன்சிகவுன் | நைட்டீஸ் | ஜீன்ஸ் | சாட்ஸ் |

**அணிந்து மகிழ ஆயிரத்திற்கும் மேல்!**

பிராப்ளம இல்லையே... குடித்தனக்காரா நல்லா கவனிச்சுக்கறாளா..."

இப்படி கேட்கும் மகன்களிடம் என்ன சொல்வது.... எதைச் சொல்வது?

பணத்தை வீசினால் கொண்டு வந்து வைக்கிற காபியிலும், பலகாரத்திலும் அன்பு மணம் வீசவில்லை என்பதைச் சொல்வதா?

"சர்க்கரை உடம்பு... காலம்பற ரெண்டு இட்லி, சாப்பாட்டுக்கு நடுவுல ஒரு தம்ளர் தக்காளி ஜூஸ் இல்லையின்னா நீர் மோர், வெள்ளிரிப் பிஞ்சு சாலட்... சாப்பாட்டுல கீரை, கண்டல், பச்சை காய்கறி இதெல்லாம் சேர்த்துக்கணும்...'

- இப்படி டாக்டர் சொன்னாலும் - பணத்தையும் வாங்கிக் கொண்டு ஒரு நாளைப் போல தினமும் ஒரு பாத்திரம் நிறைய சாதமும், ஒரு கரண்டி வற்றல் குழம்பும், கூட்ட அப்பளமும் கொண்டு வைக்கும் குடித்தனக்கார அம்மாளை எதுவுமே சொல்ல முடியவில்லை என்பதா?

கண்களில் புரையோடி ஆபரேஷன் செய்ய வேண்டிய நிலையில் இருப்பதைச் சொல்வதா...

பிள்ளைகள் அனுப்பும் பணத்தை முழுசாக எடுத்து செலவழிக்க மனசில்லாமல், அஞ்சும், பத்துமாய் கண்ணாடிக் கூண்டில் வைத்துக் கொண்டு, தினமும் தாரை வார்த்துக் கொண்டிருக்கிறாரே... அதைச் சொல்வதா?

குடித்தனக்காரரின் பிள்ளைக்குக் கை நீளம் என்பது தெரியும். இருந்தாலும் அதை வெளியே சொல்ல முடியவில்லை.

எதையாவது சொல்லப் போய், எங்கே யாவது அவன், தன் குரல் வளையை நெறித்து விடுவானோ என்கிற பயம் வேறு உள்ளூர...

மருமகளின் போனுக்காக ஓடி விட்டு, காலையில் இடித்துக் கொண்ட கால் கட்டை விரல் 'விண் விண்'ணென்று தெறிக்க நடந்து வந்தவருக்கு, சொல்ல முடியாத துக்கத்தில், நெஞ்சு அடைத்தது... நடக்கும் போதே கால்கள் தடுமாறியது... இத்தனையையும் மீறி உள்ளம் அழுதது...

"அய்யோ... போயிடுவேன் போல இருக்கே... நாராயணீ... நீ கண்ணை மூடறச்சே பெத்த பிள்ளைகள் மூணு பேரும் குடும் பத்தோடப் பக்கத்துல இருந்தானுங்க. நான்.... அநாதைப் பொணமாத்தான் போகப் போறேன் போல.. சிரிக்காதேடி..."

காதுக்குள் மோட்டார் சைக்கிளின் 'டுபீடுப்' சத்தம்.

நிஜமா... பிரமையா...

சதாசிவம் அந்த ஓசையிலிருந்து தன்னை விடுவித்துக் கொள்ள, கால்களை எட்டிப் போட்டார்.

ஊம் ஹூம்... பின்னல் கோலாட்டத்து கயிறு போல கால்கள் பின்னவிட்டுக் கொள்ள-

'மடேர்' என்று தரையில் விழுந்தார்... கண்களுக்குள் ஒரே கணத்தில் ஆயிரம் மின்னல்கள் ஒரு சேர மின்ன... அடுத்த கணம் கும்மிருட்டு...

யாரோ தன் அருகில் வருவதும், தொட்டுத் தூக்குவதும் உணர முடிந்ததே தவிர... வேறொன்றும் பேசவோ, அறியவோ முடியவில்லை...

நாராயணியின் மஞ்சள் பூசிய முகம் மட்டும் வெகு சமீபத்தில் தெரிவது போல...

"பைய... பைய எழுந்திருங்க அய்யரே.. வேகம் வேண்டாம்..."

சதாசிவம் மெள்ள இமைகளை விரித்துப் பார்த்தார்.

இது... யார் வீடு...

எரவாணத்தில் செருகி இருந்த சூரிக் கத்தி, 'எல்லாம், உன் வீடுதான்' என்றது...

ஆனால், இது என்ன இத்தனைக் கூட்டம்...

'செத்துப் போயிட்டோமா...'

சாகவில்லை என்பதை பின் மண்டை வலி உணர்த்தியது.

விழிகளைச் சுற்றிப் பார்க்கிறார்...

பக்கத்தில், காதில் மாட்டிய

---

குழந்தை விளையாடிய கவுன் போட்ட கண் திறந்து மூடும் பாரின் பொம்மைக்கு சின்னதாய் பார்டர் வைத்த துணியால் பாவாடையோ, புடவையோ கட்டி விடவும். நெற்றியில் ஒரு ஸ்டிக்கர் பொட்டை வைத்து விட்டு நெஞ்சுக்குக் குறுக்காக ஒரு ரிப்பனை கட்டி விட்டு அதில் ஸ்கெட்ச் பென்னால், 'மிஸ் நவராத்திரி' என்று எழுதி விடுங்கள்.

— உஷா




ஸ்டெதஸ்கோப்புடன் டாக்டர்... ஏதோ மருந்தை ஊசியில் நிரப்பி, 'சுருக்'கெனக் குத்துகிறார்.

''என்ன டாக்டர்... அய்யருக்கு பயப் படும்படியா எதுவுமில்லையே...''

"சர்க்கரை எக்கச்சக்கமா ஏறியிருக்குப்பா.... பக்கத்துல இருந்து பார்த்துக்க யாரு மில்லையா..."

"ஏங்க... நாங்க எல்லாரும் இருக்கோம்க... நாங்க அம்புட்டு பேரும் அய்யரு வீட்டம்மா போட்ட பிச்சைதாங்க... என்ன செய்யணும்னு சொல்லுங்க..."

யாரது...

சதாசிவம் கண்களை சிரமப்பட்டு உயர்த் திப் பார்க்கிறார்.

காசி பிள்ளை சிவநேசன்தான்... கூடவே காசி மனைவி, மருமகள், பேரப்பிள்ளைகள்... இன்னும்... இன்னும்... மேல ரத வீதியும், பாவாலித் தெருவும், அல்லிப்பிள்ளை ராவுத்தர் தெருவுமாய் சேர்ந்து கூடமே நிரம்பி வழிந்தது...

"ஏய்... நகருங்கய்யா... மூச்சு விடக் கூட வழியில்லாம சுத்தி வளைச்சிட்டு... கொஞ்சம் காத்து வரட்டும்பா..."

"சாமி எப்படி இருக்காரு?"

''முழிச்சிட்டாரு... ஒண்ணும் கவலை யில்லே... போங்க... போங்கம்மா...''

யாரோ, யாரையோ விரட்டிக் கொண் டிருந்தார்கள்.

''பெரியவருக்கு வயசாயிடுச்சு. சர்க்கரை, ரத்தக் கொதிப்பு எல்லாம் ஏறியிருக்குது.... அவரோட பிள்ளைகளுக்கு சொல்லி... பயப்படும்படியா ஒண்ணுமில்லே... துணை வேணும்... வேளாவேளைக்கு மருந்து கொடுக்க சாப்பாடு போட...''

டாக்டர், சதாசிவத்தைப் பார்த்து, சத்தமாய் கேட்டார்:

"பிள்ளைகளை வரச் சொல்லட்டுமா?"

"வேண்டாம்...."

- இருக்கிற பலத்தை எல்லாம் ஒன்று திரட்டி தலையை அசைத்தார் சதாசிவம்.

சிவநேசனின் பெருத்த மோதிர விரல்கள், சதாசிவத்தின் கரத்தை ஆதரத்துடன் பிடித்துக் கொண்டன.

என்ன தோன்றியதோ... குப்பென சதா சிவத்துக்கு தொண்டை அடைத்தது... 'கரபுர'வென சிரமப்பட்டு பேசினார்...

"இவா... எல்லாரும்... என்... என்.. குழந் தைங்கதான்..."

காசியின் மனைவியும், மருமகளும் இதைக் கேட்டு துக்கம் தாளமாட்டாமல் 'ஓ'வென அழுதார்கள்.

"டாக்டர்... அய்யருக்கு எப்ப எப்ப என்ன கொடுக்கணும்னு எழுதிக் கொடுங்க... நாங்க பார்த்துக்கறோம்... சாப்பாடு மட்டும்..."

சதாசிவம், சிவநேசனின் கரத்தை நடுங்கும் கரங்களால் பிடித்துக் கொள்கிறார்...

"டாக்டர் என்ன... சொல்றாரோ... நீங்களே கொடுங்கப்பா..."

"சாமீ...!"

"அய்யா..."

சதாசிவம் நிறைவாகக் கண்களை மூடி, தனக்குள் இருக்கும் நாராயணியுடன் பேச...

வேளாவேளைக்கு... காபியும், தக்காளி சூப்பும் காசி வீட்டிலிருந்து... சிவநேசன்தான் தனது மோட்டார் சைக்கிளில் விருதுநகர் போய், தினமும் ஊசி போட டாக்டரை அழைத்து வருகிறான்.... சதாசிவம் படுக் கையினருகே கொலு பொம்மைகள் மாதிரி - சின்னதும் பெரிசுமாய் வத்திராயிருப்பு வாசிகளின் குலக் கொழுந்துகள்...

"தாத்தா... ஏதாச்சும் வேணுமா?"

"ஒண்ணும் வேணாம்பா..."

"நா இங்கிட்டுதான் இருக்கேன்... ஏதாச்சும் வேணுமானக் கூப்பிடுங்க..."

எட்டாத் தொலைவில் வளரும் தனது வம்சவாரிசுகளை விடவும்... இவைகள் மிக நெருக்கமானதாய் ஆதரவானதாய்...

அவர் தனது விரல்களை சிறுவர்களின் பக்கம் நீட்ட....

"அய்! தாத்தா விளையாடக் கூப்பிறாரு..."

குழந்தைகளோட உற்சாகக் கூவலில் - நாராயணி சிரிப்பது போல...

இல்லதரசிகளுக்கு புதிய துணை
சமையல் கலையில் திருப்புமுனை
மில்க் பாய்லர், இட்லி குக்கர்,
வாட்டர் ஃபில்டர், குழிகரண்டி
எல்லாம் தந்திடும்

# Murugan

முருகன் மெட்டல் என்றாலே
முகம் மலரும் தன்னாலே


















## முருகன் மெட்டல் இண்டஸ்ட்ரீஸ்

21, பொன்னப்ப செட்டி தெரு, சென்னை-3.
போன் : 5350182, 5343412

# டைனோசர் கொலு

இதற்குத் தேவையான பொருட்கள் நிறைய செய்தித்தாள் பேப்பர்கள், வடிகஞ்சி, சில கம்புகள் இவ்வளவே

முதலில் எத்தனை பாகங்கள்....

1) உடம்பு, 2) வால் 3) தலை, 4) கால்

### உடம்பு

உடம்பு பாகம் செய்வது எளிதுதான். சிறிது கம்புகளை (மூங்கிலாய் இருந்தால் நல்லது) எடுத்துக் கொள்ளவும். நடுவில் கல் வைத்து, (அதாவது உடம்பின் பருமனுக்கேற்ப கல் வைக்கவும்) கீழே உள்ளது போல் கட்டி விடவும். பின் இரு முனைகளையும் கட்டி விடவும்.

ஒட்டிவிட்டு வெயிலில் நன்றாகக் காய வையுங்கள்.

வயிறு பகுதியில் எவ்வளவுதான் பேப்பரை ஒட்டினாலும் அது அமுங்கியே காணப்படும். அதனால் வயிற்றை உப்பலாக்க தேங்காய் ஓடுகளை அல்லது இளநீர் குடித்த காய்களை எடுக்கவும். அதை நாம் தயாரித்த உடம்பின்(?!) மேல் வைத்துக் கட்டவும். கட்டி நிரம்பவும் பேப்பரை வைத்து ஒட்டி விடவும். இப்போது உடம்பு உப்பலாக தெரியும்.



படம்: 1 படம்: 2 படம்: 3



(இளநீர் காய்களாக இருந்தால்)

(தேங்காய் (அ) (கொட்டாங்குச்சி இருந்தால்)

(காட்டில் விறகு சேகரித்து கட்டிக் கொண்டு போவார்களே அதுபோல் ஆனால் நடுவில் கல் வைத்து சுற்றிலும் கட்டவும்) இரு முனைகளையும் வளைக்கும்போது குச்சிகள் உடைந்து விடாமல் இருக்க இள மூங்கில்களை உபயோகிக்கவும்.

எலும்புகள் ரெடியாகிவிட்டன. இப்போது சதைகள். பேப்பரை எடுக்கவும். வடி கஞ்சியை அதில் தடவவும். இப்போது பசை தடவிய பேப்பரை அப்படியே அந்த எலும்பின் (?!) மேல் ஒட்டவும், இப்படி நிறைய பேப்பர்களை ஒட்டவும்.

எல்லாவற்றையும் முடித்து உடம்பை தனியாக வைக்கவும்.

### வால்:

இப்போது வால் பகுதி. வால் வளைந்து வளைந்து வேண்டுமானால் சிறிய சிறிய.



படம்: 1

பகுதியாக செய்து அதாவது படம் - 1-ல் உள்ளது போல் செய்யவும். அல்லது போட்டோவில் உள்ளது போல் வால் வேண்டுமானால் படம் - 3ல் உள்ளது





# NATIONAL COUNCIL FOR LABOUR MANAGEMENT

## NOTIFICATION No. 21/97

**Offers the following Diploma Courses by Correspondence.**

| | |
|---|---|
| BUSINESS MANAGEMENT | (1 Year) |
| FINANCIAL MANAGEMENT | (1 Year) |
| MARKETING MANAGEMENT | (1 Year) |
| HUMAN RESOURCES DEVELOPMENT | (1 Year) |
| ADVERTISING & PUBLIC RELATIONS | (1 Year) |
| TOTAL QUALITY MANAGEMENT & ISO 9000 | (1 Year) |
| PORTFOLIO ANALYSIS & INVESTMENT MANAGEMENT | (1 Year) |
| BUSINESS ADMINISTRATION | (6 Months) |
| OFFICE ADMINISTRATION | (6 Months) |
| SALES & MARKETING | (6 Months) |
| INDUSTRIAL RELATIONS & PERSONNEL MGMT. | (6 Months) |
| LABOUR LAWS | (6 Months) |
| QUALITY ASSURANCE & ISO 9000 | (6 Months) |
| PRODUCTION MANAGEMENT | (6 Months) |
| INDUSTRIAL SAFETY | (6 Months) |
| ENVIRONMENTAL MANAGEMENT | (6 Months) |
| QUALITY CONTROL & ISO 9000 | (6 Months) |

No formal qualifications is required. Course Fee Rs. 1200/- (1 Year) & Rs. 600/- (6 Months). Examination centre at all major cities.

For registration form and prospectus, kindly send Rs. 6/- postal stamp to **NATIONAL COUNCIL FOR LABOUR MANAGEMENT**
23/13, Rameswaram Road, Narayana Apartments, Second Floor, T. Nagar, Madras - 600 017. Phone : 044-4851854 Fax : 044-4933259.

• பேப்பர் ஒட்டிய நிலையில் காயும் பொம்மைகள்





போல் செய்யவும்.

**படம் 1**

இதில் கல்லை வைக்க வேண்டாம். தேங்காய் துருவிய கொட்டாங்குச்சியை நடுவில் வைத்துச் சுற்றிலும் குச்சியை வைத்துக் கட்டவும். அதுபோல் மூன்று கட்டவும். மூன்றும் ஒரே சைஸில் இருக்கக் கூடாது, படிப்படியாக குறைந்து கொண்டே வர வேண்டும். மூன்றையும் செய்து வீட்டில் வைத்து இருக்கும் கம்பிகளை வைத்து ஒவ்வொன்றையும் இணைக்கவும். கொட்டாங்குச்சி மற்றும் கம்பை வைத்து செய்திருப்பதால் கனம் அதிகமிருக்காது. ஆதலால் மூன்றையும் கம்பியால் இணைத்து விட்ட பின்னர் வ்ளைக்கவும். வளைத்தால் அது படம் - 2ல் உள்ளது போல் வரும்.



படம் - 2,



படம்- 3.

பின்னர் பேப்பரையும், வழுகுஞ்சியையும் கொண்டு ஒட்டவும். இப்பொழுது வெயிலில் காய வைத்து எடுத்தால் வால் தயார்.

**தலை:**

டைனோசர்களுக்குக் கழுத்து நீண்டு இருக்கும். அதனால் கழுத்தோடு தலை செய்ய வேண்டும். இதுவும் உடம்பு செய்வது போல் கம்பையும் நடுவில் கொட்டாங்குச்சியோ அல்லது வெயிட்டில்லாத பொருள் களையோ வைத்துக் கட்டவும். இரு முனைகளையும் கட்ட வேண்டாம். ஒரே ஒரு குச்சி மட்டும் மற்ற எல்லாவற்றையும்விட உயரமாய் இருக்குமாறு படம்-1ல் உள்ளது போல் அமைத்துக் கொள்ளவும்.

* முழுமையான டைனோசர்கள்





படம்-1

இப்போது முகத்தை உருவாக்கலாம். வீட்டில் உடைந்து போய் கிடக்கும் ஏதாவது பழைய பிளாஸ்டிக் உருண்டை யான டப்பாவை படம் -2ல் உள்ளதுபோல் கவிழ்த்து விடவும்.

பின்னர் பேப்பரை ஒட்டி எல்லாவற்றையும் வெயிலில் காய வைக்கவும்.





பழைய சட்டி
(பிளாஸ்டிக்)



பேப்பர் ஒட்டுவதற்கு முன்



பேப்பர் ஒட்டிய பின்

இப்போது எல்லாவற்றையும்
இணைப்பது




நீங்கள் உருவாக்கிய
பகுதிகள் இவை.

இப்போது தலை பகுதியில் ஒரு குச்சி நீட்டிக் கொண்டிருக்கும் அதை உடம்பின் பாகத்தில் ஒரு ஓட்டை போட்டு செருகி விடவும். வாலை உடம்போடு இணைத்துக் கட்டி மீண்டும் பேப்பரைப் போட்டு எல்லாவற்றையும் ஒட்டி விடவும்.

இனி காலும் வாயும்தான் பாக்கி. வாய் பகுதி மிகவும் சுலபமாகும். ஒரு நல்ல மொத்தமான கம்பியை எடுத்து 'ப' வடிவத்தில் வளைக்கவும். இதுபோல் இரண்டு செய்யவும். அதை அப்படியே வாய் பக்கம் நிறுத்தி ஒட்டி விடவும். அல்லது சேர்த்துக் கட்டி ஒட்டி விடவும். வாய் தயார்.

காலும் சுலபம்தான். உடம்பின் கீழ் இரண்டு ஓட்டையை போட்டு ஒரு நல்ல மொத்தமான கம்பை உள்ளே சொருகி விடவும். பின்னர் அதை பேப்பர் கொண்டு ஒட்டி விடவும்.

இப்போது நீங்கள் செய்தது இப்படி இருக்கும்.



இப்போது பிரவுன் ஷீட்டோ, கலர் பேப்பரோ கொண்டு ஒட்டி அழகு படுத்தவும். கண் வரையவும்.

டைனோசர் மீது முன் போல் தோல் இருக்கும். அதற்கு ஒரு சார்ட் வாங்கி படத்தில் உள்ளது போல் கட் செய்து தலையிலிருந்து வால் வரை ஒட்டி விடவும். பல்லையும் அதுபோல் ஒட்டி விடவும்.






(பல்லுக்கு)

இந்த இடத்தில் மடக்கி ஒட்டவும்.

இப்போது முன்னால் இரு கைகளை உருவாக்கிக் கட்டி விடவும். காலுக்கு மூன்று விரல்கள் உள்ளதுபோல் செட் செய்யவும்.

அவ்வளவுதான். எடை குறைந்த, நீங்களே செய்த, பயமுறுத்தக்கூடிய உடையாத டைனோசர் தயார்.

இது செய்ய இரண்டு நாட்கள் ஆகும். ஏனென்றால் வெயிலில் நன்றாகக் காய வைத்து எடுத்து ஒட்ட வேண்டும். ஒட்டுவதற்கு எல்லாம் 1½ அல்லது 2 மணி நேரத்தில் முடித்து விடலாம்.

— தங்கம் சிவராஜ்

# நாங்கள் படும் பாடு

"அடடா, அடுத்த நவராத்திரி வந்தாச்சா?" என்று ஆண்களில் பலர் திடுக்கிடுவதுண்டு. இந்தத் திடுக்கிடலுக்கான காரணங்களை அடுக்குகிறார்கள் சில ஆண்கள்.



• கோவிந்தன்



• பாலசந்திரன்

### கோவிந்தன்

"ஆண்கள்தான் பலசாலியா யிற்றே! நவராத்திரி வந்தால் பரணி யிருந்து இமயமலையை ஒத்த எடை கொண்ட பெரிய பெரிய மர மற்றும் ட்ரங்க் பெட்டிகளை கீழே இறக்க வேண்டியது எங்கள் கடமை தான். அப்போது ஏதாவது பூச்சியோ தேளோ கடித் தாலோ அதை பெரிது படுத்தாமல் இருப்பதும் கடமை களில் ஒன்று. பெட்டிகளை தூசி தட்டுவதும், அதனால் அலர்ஜி மற்றும் ஆஸ்துமாவால் அவதிப்படுவதும்கூட எங்கள் விதி. திறந்து பார்க்கும்போது ஏதாவது பொம்மை உடைந்திருந்தால் "பழி ஓரிடம் பாவம் ஓரிடம்" என்கிற மாதிரி "பெட்டியை ஒழுங்காக இறக்க துப்பில்லாததால் பொம்மைக்கு இந்த கதி" என்ற இடி சொல் வேறு. மனைவியின் மிக நெருங்கிய தோழி பள்ளிக் கரணை போன்ற வெகு வெகு தொலைவான ஓரிடத்தில் சொந்த வீடு கட்டி அதில் வசித்துக் கொண்டிருப்பாள். இதற்காக வண்டியில் அவ்வளவு தூரம் மனைவியை அழைத்துக் கொண்டு சாரத்யம் செய்ய வேண்டும். அங்கே குடும்பத் தலைவர் அந்தர் தியானமாகியிருப்பார். நெருங்கிய ஸ்நேகிதிகள் மணிக்கணக்காக ஆனந்தமாக பேசிக் கொண்டிருக்க, கொட்டு கொட்டென்று விதியை நொந்தபடி உட்கார்ந்திருக்க வேண்டும். என்ன செய்ய, கொலு பொம்மைகளுக்கு வருடத்துக்கு ஒன்பது நாட்களுக்காவது சுதந்தரம் உண்டு."



• ஈஸ்வரன்



• ஜானகிராமன்

### பாலசந்திரன்

"முன்பு மாதிரி விசாலமான வீடுகள் இப்போது இல்லை. சின்ன ப்ளாட்டுகள்தான். ஒரு மூலையில் பேசினாலே மறுமூலையில் கேட்கும் எனும் போது, பாடினால்? அதுவும் "எனக்குப் பாட வராதே" என்கிற பெண் மணிகளைக்கூட, "ரொம்ப பிகு பண்ணாதீங்க. பாடியே ஆகணும்" என்று கட்டாயப்படுத்தி, அந்தக் குரலை ஒரு பாவமும் அறியாத நாங்களும் கேட்க வேண்டிய நிலை நவராத்திரியில் பாதி நாட்களாவது வந்து விடும். என்னை விடுங்கள். எனக்கு மிகவும் தெரிந்த ஒரு இளைஞன், அவனுக்கு நேர்ந்த ஒரு நவராத்திரி கொடுமையை ஜன்மத்துக்கும் மறக்க மாட்டான். மிகவும் தாமதமாக, பதினெட்டு வயதில் பூணூல் போட்டிருந்தார்கள் அவனுக்கு. சாஸ்திரத்துக்கு தலையின் முன் பகுதியில் உள்ள ஓரிரு ரோமங்களை அன்று வெட்டிவிடுவதுதான் இக்கால வழக்கம். ஆனாலும் அவனுக்குக் கொஞ்சம் தீவிரமாகவே நாவிதர் தலையை உழுதுவிட முன் தலையில் வடிவில் (மலையாளத்தில் 'ற' இந்த வடிவம்தான்) ஒரு வளைவுக் கோடு விழுந்திருந்தது. அன்று பார்த்து நவராத்திரிக்குப் பாட வந்த ஒரு மாமி "சலமேலரா சாகேத ராமா" என்ற பாட்டைப் பாட

பரந்து விரிந்திருக்கும் இந்திய தேச தலைநகரில் ஜனக்புரியில் அருள்மிகு தெய்வமாக வீற்றிருந்து அடியவர்களின் குறைகளை தீர்த்து வைக்கும் ஸ்ரீராஜராஜேஸ்வரி கோயில் புனருத்தாருண கும்பாபிஷேகம் சமீபத்தில் நடைபெற்றது. இதற்கென டில்லியின் கடைக் கோடியிலிருந்தும், ஏன் அயல் நாடுகளிலிருந்தும் பக்தர்கள் வந்து கலந்து கொண்டனர். கோலாலம்பூரிலிருந்தும் வந்திருந்த பக்தர்கள் கும்ப அபிஷேகத்திற்கென கைலாச மலையிலிருந்து மானஸரோவரிலிருந்து பக்தியுடன் புனித தீர்த்தத்தைக் கொண்டு வந்து நீராட்டினர்.

கங்கேச யமுனேசைவ என்ற ஸ்லோகங்களின் கீர்த்திக்கேற்ப ஸப்த நதிகளில் மட்டுமல்லாது இந்து மஹா சமுத்திர தீர்த்தமும் சேர்ந்து ஸ்ரீராஜராஜேஸ்வரியின் குட



முழுக்கில் அம்பிகையின் அருளில் பக்தர்கள் நனைந்தும் திருவருளை நினைந்தும் மெய் மறந்து நின்றனர்.

சிவாகம சாஸ்திரானுசாரம் அமைந்த ஹோம குண்டங்களிலிருந்து நிறைந்து நிற்கும் ஹோமப் புகையாலும் தென்னிந்தியாவிலிருந்து வந்திருந்த சிவாசார்களின் வேத மந்த்ர கோஷத்தாலும் மனித இனமே புனிதமடைந்தது போலாயிற்று. கஜ, துர, கோ பூஜா விதிகளால் ஆரம்பிக்கப் பெற்று நாதஸ்வர இசையோடு கூடிய ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியின் மஹா கும்பாபிஷேகம் மகோன்னதமாய் நடந்தேறியது.

தில்லியில் தமிழர்கள் பெருமைப்படும் விதமாக ராஜராஜேஸ்வரி கோயில் நாளொரு வண்ணமும், பொழுதொரு வடிவமுமாக வளர்ந்து வருகிறது.

— சரஸ்வதி, விஜயா வெங்கடாஜலம்

அவன் கோபத்துடன் அறைக்குள் சென்று கதவை சாத்திக் கொண்டு விட்டான். பிறகு தான் தெரிந்தது அந்த மாமி "தலைமேல 'ர'" என்று சொந்தமாகக் கிருதியை இயற்றி தன்னைக் கேலி செய்ததாக அவன் நினைத்துக் கொண்டான் என்பது."

**ஈஸ்வரன்:**

"பெண்களுக்கென்றே பண்டிகை இருப்பதில் தப்பில்லை. ஆனால் தொடர்ந்து ஒன்பது நாட்கள் என்பது ஆனாலும் கொஞ்சம் ஓவர். "வீட்டுக்கு வரும் சுமங்கலிகளுக்கு வச்சுக் கொடுக்க வேண்டாமா?" என்று ஒரு பட்டியலை தயார் செய்துவிட்டு, சந்தடி சாக்கில் "கறிவேப்பிலை மாதிரி ஒரே மகள் நவராத்திரியில் அவளுக்குப் பட்டுப்பாவாடை வாங்காமல் யாருக்கு வாங்குவதாம்?" என்பார்கள். கடைக்குப் போன பிறகு "அப்படியே எனக்கும் ஒரு புடவை எடுத்துக்கறேன்" எனும் போதுதான் சதியின் முழு பரிணாமமும் தெரியும். வீடு நவராத்திரியின்போது கஜகஜவென்று பெண்களால் நிறைந்திருக்க "கொஞ்ச நேரம் காத்தாட வெளியே நில்லுங்களேன்" என்று சகதர்மிணி ஆலோசனை கூறியதும் உண்டு! நம் வீட்டுக் குழந்தை புதுப்பாவாடையும், கொலுசுமாக நடந்து போகும் அழகைக் கண்டு மனது ஆனந்தப்பட்டாலும், நவராத்திரியின் போது நம்முடைய (அதாவது ஆண்களின்) முக்கியத்துவம் பூஜ்யமாகிவிடுகிறது என்ற எரிச்சல் கலந்த ஏக்கம் எழுகிறது."

**ஜானகிராமன்:**

"வேண்டிய மட்டும் பட்டாகி விட்டது. டீவியில் நல்லதொரு நிகழ்ச்சி. ஆர்வமாய் பார்க்க உட்கார்ந்தால், பட்டாளமாக நுழைவார்கள் பெண்கள். அசட்டு சிரிப்போடு வரவேற்றுவிட்டு (வருபவர்களில் பலர் யாரென்றே தெரியாதே) அறைக்குள் பதுங்க வேண்டும். டீ வி ஆஃப் செய்யப்பட்டு விடும். வருபவர்களில் யாராவது அரிதாக நன்றாகவே பாடி விடுவார்கள். இடையில் கவரப்பட்டு "சபாஷ்" என்று பாராட்டி விட்டால், எல்லோரும் போன பிறகு ஆபத்து காத்திருக்கும் "ஒரு நாளாவது இப்படி நான் பாடும்போது பாராட்டியிருக்கிறீர்களா?" என்று. மூன்று சக்திகளின் வழிபாடு என்பது பெருமையானதுதான். ஆனால் தேவி பூஜையைவிட மற்ற விஷயங்களில்தான் இந்தப் பெண்கள் கவனம் செலுத்துகிறார்கள். வெளி வீடுகளுக்குப் போகும்போது யாராவது வந்தால் உட்காரச் சொல்லுங்க. தையெல்லாம் கொடுங்க" என்றபடி சென்றுவிட அதற்குப் பிறகு வீட்டுக்கு வரும் பெண்களும் சரி, நானும் சரி ஏதோ முள் மேல் இருப்பதுபோல் இருப்பதும்... என்னவோ போங்க"

பேட்டி — ஜி.எஸ்.எஸ்.



# நவராத்திரி

"இந்த வருஷ நவராத்திரிக்கு என்ன வைச்சுக் கொடுக்கிறதா இருக்கே" என்று என் கணவர் இன்கம்டாக்ஸ் விளம்பர வினா பாணியில் கேட்டார்.

இன்னும் முடிவு செய்யவில்லை. எல்லோரையும் அசத்துவது போல ஒரு ஐட்டத்தை வாங்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன்.

**முதல் நாள்**

திடுதிப்பென்று வத்சலா வந்து நின்றாள். பீரோவைக் குடாய்ந்து பார்த்ததில் ஒரு அழகான டிசைன் போட்ட 'பிளாஸ்டிக் பவுல்' கிடைத்தது. வைத்துக் கொடுத்தேன்.

"பிளாஸ்டிக் பவுலா? ரொம்ப நல்ல செலக்‌ஷன் ஜானகி. எங்க வீட்டுக்காரர் 'ஷேவிங் செட்'டை வைச்சுக்க யூஸ்ஃபுல்லா இருக்கும்" என்று கொழுப்பெடுத்தவளாய் சொல்லிவிட்டுப் போனாள். இவள் வீட்டுக்குப் போய் இவள் வைத்துக் கொடுப்பதை 'டாய்லெட்'டில் உபயோகப் படுத்தப் போவதாய் நான் சொல்லிவிட்டு வந்தால்தான் இவள் திமிர் அடங்கும்.

**இரண்டாம் நாள்**

ஏற்கனவே கிண்டலும் கேலியுமாக இருக்கிறது; இதில் இவர் வேறு என்னை கேட்காமல் கொள்ளாமல் குடுகுடுவென்று எதை எடுத்தாலும் மூன்று ரூபாய் ரகத்தில் எவர்



## அகிலா கார்த்திகேயன்

சில்வர் கிண்ணங்களை வாங்கி வந்து நிற்கிறார். சரி போகிறதென்று பார்த்தால் ஒவ்வொரு கிண்ணத்திலும் 'இது ஜானகி மாமி வீட்டில் கொலுவிற்கு வைத்துக் கொடுத்தது' என்று நாலு ரூபாய் கூலி கொடுத்து பெயரை அடித்துத் தொலைத்துக் கொண்டு வந்திருக்கிறார். தலையில் அடித்துக் கொண்டேன்.

வேறு வழியில்லாமல் தனபாக்யத்திற்கு வைத்துக் கொடுத்தேன்.

"என்னடி இது.... நவராத்திரிக்கு வரவங்களை ஹோட்டல் டம்ளர் திருடிகள் லிஸ்ட்டிலே சேர்த்துட்டாயா என்ன' என்றவள் வெற்றிலை பாக்கை மட்டும் எடுத்துக் கொண்டு கிண்ணத்தைத் தட்டிலேயே விட்டு விட்டுச் சென்றது என் பொட்டில் அறைந்தாற்போல் இருந்தது. அத்தனை கிண்ணத்தையும் பரண்மேல் தூக்கி போட்டேன்.

பணத் திமிர் நல்ல ஓசத்தியான பிளவுஸ் பிட்டை வைத்துக் கொடுத்ததோடு நிற்காமல் "ஜானகி இது ரொம்ப காஸ்ட்லியான பிட்.... இதுக்கு மாட்சிங்கா புடவை வாங்கணும்னா அறுநூறு எழுநூறு ஆகும்.... உம் உன்னாலே முடியுமோ என்னமோ" என்று பீற்றிக் கொண்டாள்.

வீட்டிற்கு வந்தால் இவர் வேறு அர்த்தம் கெட்டத்தனமாய் சண்டைக்கு வந்தார் "ஏண்டி தனபாக்யம் கிண்ணத்திலே பெயர் அடிச்சதைக் கிண்டல் பண்ணினான்னு அத்தனையையும் பரண் மேலே தூக்கிப் போட்டுட்டயே. இப்ப பாரு அவங்க வீட்டுலே வைச்சுக் கொடுத்த 'பிளவுஸ் பிட்'டிலேகூடத்தான் அவ வீட்டுக்காரரோட பேரு பெருசா பிரிண்ட் ஆயிருக்கு" என்கிறார்.

**மூன்றாம் நாள்**

நான் தனபாக்யம் வீட்டுக்குப் போய்விட்டுத் திரும்பினேன்.



''என்ன உளறல்?'' என்றேன்.

''அவங்க வீட்டுக்காரர் பேரு 'அரவிந்த்'தானே?. பிரிண்ட் ஆயிருக்கு பார்'' என்கிறார்.

''ஐயோ.... அது 'மில்'லோட பேரு.... ரொம்ப ஒசத்தியான ஜாக்கெட் பிட் ஒவ்வொன்றும் எழுபது, எண்பது ரூபாய் இருக்கும்.... ஆனாலும் தனபாக்யம் இத்தனை அலட்டிக்கக் கூடாது'' என்றேன் ஆதங்கத்துடன்.

''சரி ஜானகி இந்த வருஷம் நாமளும் இதையே வாங்கி வைச்சுக் கொடுத்துடுவோம்'' என்றார். எனக்கு ஆச்சர்யமாக இருந்தது.

ஆனாலும் நான் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. அத்தனை காசைக் கொட்டி எதற்கு வாங்குவதாம்... (இந்த வருஷம் என் அம்மா, அக்கா தங்கைகளென்று யாரும் வரப் போவதில்லையே). மேலும் என் நண்பிகள் ஒவ்வொருத்திக்கும் சினிமாஸ்கோப் உடம்பு. ஒரு மீட்டர் ஒன்றரை மீட்டர் என்று வாங்க வேண்டும். கட்டுப்படி ஆகாது!

**நான்காம் நாள்**

பெரம்பூர் வரை போய்விட்டு வந்தேன். லொங்கு லொங்கென்று ஒவ்வொரு வருஷமும் அத்தனை தூரம் போய்த் தொலைய வேண்டியிருக்கிறது. இல்லையென்றால் நாத்தனார் நாக்கில் விழுந்து எழ வேண்டும்.

'விசேஷம்' என்று சொல்லி ரெண்டு மட்டை தேங்காய்களை என் தலையில் கட்டி விட்டாள். அவருக்கென்ன வீட்டைச் சுற்றி நாலைந்து தென்னை காய்த்துக் கொட்டுகிறது. அங்கிருந்து வேகாத வெயிலில் மண்டை மண்டையாக அந்த ரெண்டையும் தூக்கிக் கொண்டு நடக்க முடியாமல் பஸ் ஸ்டாப் வரை ஆட்டோவிற்கு அழுததில் ஆறேழு தேங்காய்களை வாங்கியிருப்பேன்.

சரி, வீட்டிற்கு வந்து என் பையன் ராம்ஜியை கெஞ்சிக் கூத்தாடி இரண்டையும் உரிக்கச் சொல்லிப் பார்த்தால் அவை மட்டை தேங்காய்களல்ல, மகா மட்டத் தேங்காய்களென்று தெரிந்தது.

**ஐந்தாம் நாள்**

உள்ளூர் ஓர்ப்படி வீட்டிற்கு விஸிட்! பளபளவென பாலிதின் பையில் ஒரு பிளவுஸ் பிட் வைத்துக் கொடுத்தாள். சரி பரவாயில்லையே என்று நினைத்துக் கொண்டேன். அதன் சமாசாரம் பிறகுதான் புரிந்தது.

வீட்டிற்கு வந்து பிரித்துப் பார்த்தபோது சாயம் வெளுத்தது. அதே சாயம் வெளுத்துப் போன அதே ஜாக்கெட் பிட்! நான் போன நவராத்திரியின்போது அவளுக்கு வைத்துக் கொடுத்தது! 'அடிப்பாவி' என்று நினைத்துக் கொண்டேன்.

சரி, எப்படி கண்டுபிடித்தேன் என்பீர்கள். கிட்டே வாருங்கள். மைக் டைசன் செய்கிறேன். அதற்கும் போன நவராத்திரியின்போது அந்த பிளவுஸ் பிட்டை சுவாமி படத்தின்மேல் சார்த்தி பூஜை செய்தபோது, ஊதுபத்தி பட்டு மூலையில் ஒரு சின்ன ஓட்டை இருக்கும். அதை வைத்துத்தான் அடையாளம் கண்டு கொண்டேன்.

**ஆறாம் நாள்**

புவனா பொல்லாதவள்.

நவராத்திரிக்கு வீட்டிற்குக் கூப்பிட்டவள் ''ஜானகி பாடி கேட்கணும்.... ஜானகி பாடி கேட்கணும்'' என்று நச்சரித்தாளே என்று ஒரு கீர்த்தனையை உச்சத்தில் ஆரம்பித்து எக்கச்சக்கமாக திக்கித் திணறிக் கொண்டிருந்தேன். என்னைப் பாடச் சொல்லிவிட்டு வந்த மற்ற மாமிகளுடன் அரட்டை ஆரம்பித்து










கொலு என்றாலே பொம்மைகள்தான். சிறிதளவே பொம்மைகள் வைத்திருப்பவர்களும் சரி, நிறைய வைத்திருப்பவர்களும் சரி, படிகளின் பக்கவாட்டில் நீங்கள் விரும்பும் போட்டோக்களை நேர்த்தியாக வையுங்கள். தினமும் மாற்றி வையுங்கள். வித்தியாசமாக அனைவரும் ஆவலோடு பார்க்கும்படியாக இருக்கும்.

— கே. ஐஸ்வர்யா










விட்டாள். எனக்குப் பொத்துக் கொண்டு வந்தது. பொசுக்கென்று நிறுத்தி விட்டேன்.

"ஏன் பாட்டை நிறுத்தி விட்டீர்கள் மாமி" என்று கொஞ்சம் சலங்கை பாணியில் கெஞ்சினால் நாலு போடு போட வேண்டுமென்று நினைத்துக் கொண்டிருந்தேன்.

"மாமி என்னமோ சொல்லிண்டிருந்தேளே பாவம். நான் காது கொடுத்துக் கேட்கலே... ஜானகி பாடின பக்திப் பாடல் காஸட் கேட்டீங்களோ... இந்த வருஷ நவராத்திரிக்குப் புதுசா இருக்கட்டுமேன்னு இதை வைச்சுக் கொடுக்கலாம்னு" என்று என்னை வெறுப்பேற்றினாள்.

எனக்கு நாக்கைப் பிடுங்கிக் கொள்ளலாமென்று இருந்தது.

### ஏழாம்நாள்

அந்த வெறுப்பில் அவள் வைத்துக் கொடுத்த காஸட்டையும் சீண்டவில்லை. அதோடு இருந்த பொட்டலத்தையும் தொடவில்லை. அடுத்தநாள் காலை.

"என்ன ஜானகி.... டிடர்ஜெண்ட் பவுடரை பொட்டலம் கட்டி வைச்சிருக்கே... இன்னிக்கு சுண்டலுக்கு பதில் இதுதானா? நல்ல ஐடியா" என்று என் கணவர் அதைப் பிரித்துச் சொன்னதும் எனக்கும் பழிக்குப் பழி வாங்க ஒரு வழி கிடைத்து விட்டது.

உடனே புவனாவிற்கு போன் செய்தேன். "புவனா யார் யாரோ எதை எதையோ வைத்துக் கொடுக்கறா ஆனா நீ வைச்சுக் கொடுத்த..." என்று ஆரம்பித்தவுடன் எதிர்முனையிலிருந்து

"ஓகோ ஜானகி பக்தி பட காஸட் ஜோராய் இருக்குன்னு சொல்லு" என்று அவசரப்பட்டாள்.

"அது ஜோர்தான்... அதைவிட ஒரு ஸ்னான பவுடரை வைச்சுக் கொடுத்தயே... அதைத்தான் இன்னிக்கு உடம்புக்கு தேய்ச்சிக் குளித்தேன். நல்ல மொரமொரன்னு அழுக்கு போச்சு... எந்தக் கம்பெனி பிராடெக்ட்னு கேட்கலாம்னுதான் குளிச்ச உடம்போட வந்து போன் பண்றேன்" என்று ஒரு போடு போட்டேன். 'ணங்' கென்று சப்தம் மட்டும் வந்தது. பதில் இல்லை. இனிமேல் இவள் பொட்டுக் கடலை மாவை யாருக்கும் வைத்துக் கொடுக்க மாட்டாள்.

### எட்டாம்நாள்

எல்லோரையும் இன்றுதான் அழைத்திருந்தேன். அறுபது ரூபாய் கொட்டி ஆளுக்கு ஒரு ஹேண்ட் பேக் வாங்கியிருந்தேன். நல்ல நெய்யைக் கொட்டி மைசூர் பாகு வேறு கிளறி இருந்தேன். என் கணவர் மூக்கால் முனகினார். என்ன செய்வது? அவளவள் பீற்றிக் கொள்ளும்போது நான் மட்டும் பிக்காரியாய் காட்டிக் கொள்வதாக்கும்.

காத்திருந்தேன். யாரும் வர ஆரம்பிக்கவில்லை. பலமாக மழைதான் வந்தது. ஓய்வேனா என்றது.... நல்லவேளையாக நிர்மலாவும் வனஜாவும் வந்தனர். நிர்மலாவின் காரில் வனஜாவும் வந்திருக்கிறாள்.

"ஜானகி... உன்கிட்டே வர்றேன்னு சொல்லிட்டேன்னு இவரை ஆபிஸிலிருந்து காரை அனுப்பச் சொல்லி, வர வழியிலே வனஜா வீட்டுக்குப் போயிட்டு வர்றேன். புது கார்... ஏ.ஸி. நேத்துதான் டெலிவரி எடுத்தது. மழையில நனைஞ்சுண்டு இருக்கு... எங்களை சீக்கிரமா அனுப்பினா தேவலை" என்று வரும்போதே ஒரு வண்டி அலட்டலுடன் நிர்மலா நுழைந்தாள்.

இருவருக்கும் மைசூர்பாகை சாப்பிடக் கொடுத்துவிட்டு வெற்றிலை, பாக்கு, தட்டில் ஹேண்ட் பேகை எடுத்து வைத்து

ஸ்ரீ துர்க்கை அம்மன் துணை

# தனலக்ஷ்மி  சாரீஸ்

## தேவேந்திரா சுங்குடி தயாரிப்பாளர்

20 வருடமாக தரமான தேவேந்திர சேலைகள் தயாரித்து புகழ் பெற்ற நாங்கள், இப்பொழுது 8 வருடமாக மதுரை சுங்குடி சேலைகள் சொந்தமாக தயாரித்து வருகிறோம்.

எங்களிடம் 100's special, 120 superior (Combed Cotton) அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்கிறோம். இந்த இரண்டு quality சேலைகளையும் அதிக கெட்டி சாயத்துடன் தயார் செய்வதால், குறைந்த விலையுள்ள புடவையும் நீடித்து உழைப்பதற்கு உத்தரவாதம் தருகிறோம்.

நாங்கள் 9½ கெஜம் (8.70 m), 10¾ கெஜம் (9.70 m) மற்றும் 6 கெஜம் (5.50 m) அதிக அளவில் தயார் செய்வதால் அதிக Varaitys கிடைக்கும். நாங்கள் Latest Bathik designs, Banthini prints, Gold prints மற்றும் Latest Computer Screen Printing designs தயார் செய்கிறோம். மற்றும் பட்டுப்புடவை போன்று Grand Look கொண்ட உயர்தர காட்டன் புடவைகள் கிடைக்கும். உயர்ரக காட்டன் நூலால் நெய்யப்படுவதால் அதிக Maintanance தேவையில்லை. நீங்கள் குறிப்பிட்டு சொல்லும் designகளையும் செய்து தருகிறோம்.

சேலைகள் அதிக நாள் நீடித்து உழைக்க வேண்டுமென்ற குறிக்கோளுடன் தயார் செய்கிறோம். மற்றும் எங்கள் கம்பெனியில் ஏற்படும் Small defects Sarees குறைந்த விலைக்கு தருகிறோம்.

நாங்கள் மொத்தமாகவும் சில்லறை விலையிலும் விற்பனை செய்து வருகிறோம். மற்றும் எங்களிடம் மங்களகிரி காட்டன் (No Maintanance), பெங்கால் காட்டன் (120 Counts) கோவை Veeco Sarees (Pure Cotton and Silk Cotton) பாலிகாட்டன், குண்டூர் காட்டன், வெங்கடகிரி காட்டன், பாலியஸ்டர், பெல்காம் சாரதா சேலைகள், பெங்களூர் Printed Silks, கரிஷ்மா காட்டன் மற்றும் சூரத் சிந்தெடிக் சேலைகள், ஃபேன்ஸி Printed Silk சேலைகள், சேலம் வேஷ்டிகள், டவல்கள், மேட்சிங் ப்ளவுஸ்கள், உயர்ரக ஈரோடு காட்டன் கிடைக்கும்.

அமைதியான சூழலில் Car Parking வசதியுடன் தரமான காட்டன் சேலைகள் வாங்க சிறந்த இடம்.

ஞாயிறு விற்பனை உண்டு.

எங்கள் கடை விலாசம்:

14.11.96 முதல் எமது இந்த தனலஷ்மி சாரீஸ் நிறுவனம் இடம் மாற்றப்பட்டுள்ளது. புதிய முகவரி

நெ. 1, கோபாலகிருஷ்ண ரோடு (டாக்டர் நாயர் ரோடு, Second left from Pondy Bazzar turning) தி.நகர், சென்னை -17.

எங்கள் தயாரிப்பு சேலைகள் அனைத்தும் கோயம்புத்தூரில் கீழ்கண்ட விலாசத்தில் கிடைக்கும்.

**P.R. Shanthi, No.15, Siva Sakthi Colony, Vadavalli, Coimbatore 641 041.**



கண்டலை பொட்டலமாகவோ, பிளாஸ்டிக் கவரிலோ கொடுப்பதைவிட, சிறிய ஐஸ்கிரீம் அல்லது காப்பி அருந்தும் பிளாஸ்டிக் கப்பில் கொடுக்கலாம். மேலே மெல்லிய பிளாஸ்டிக் பேப்பரால் மூடி, செலோ டேப் போட்டு ஒட்டி விடுங்கள். 'கப்'கள் டிபார்ட்மெண்ட் ஸ்டோரில் கிடைக்கும்.

— மஹிமா

விட்டு, காப்பி கலக்கலாமென்று உள்ளே போனேன்.

கலந்து கொண்டு திரும்பவும் வரும் போது இருவரும் இடிஇடி என்று சிரித்தபடி ஏதோ பேசுவது ஒட்டு கேட்டது.

"மைசூர் பாகை கடிக்கணும்னா புதுசா பல்செட்டை மாட்டிக்கணும் போலிருக்கு... ரொம்ப ஸ்ட்ராங்கா பண்ணியிருக்கா. ஆனா ஸ்ட்ராங்கா இருக்க வேண்டிய பேக்கை, வெயிலிலே எடுத்துண்டு போனா பாகாய் உருகிப் போற மாதிரி ரெண்டாந்தர பிளாஸ்டிக்கிலே வாங்கியிருக்கா..." என்று வனஜா சொல்ல,

"ஓகோ அதைத்தான் மைசூர் 'பேக்', ஹேண்ட் 'பாகு'ன்னு மாத்தி சொன்னாயா... ஹக்... ஹக்" என்று மற்றவள் சிரிக்க....

"சரி சரி மெதுவா பேசு... வந்துடப் போறா" என்று வனஜா அடக்கினாள்.

எனக்கு அடக்க முடியாத ஆத்திரம் வந்தது. திரும்பவும் சமையலறைக்குப் போய் வனஜாவிற்குக் கலந்த காப்பியில் ஒரு கை சர்க்கரையை அள்ளிப் போட்டு எடுத்து வந்தேன். ஷுகர் வியாதிக்காரி... கிடந்து தவிக்கட்டும்!

**ஒன்பதாம் நாள்!**

காலை பத்து மணி இருக்கும். சரஸ்வதி பூஜை முடித்துவிட்டு உட்கார்ந்திருந்தேன். வாசலில் 'சளசள'வென்று சப்தம் கேட்க போய் பார்த்தேன்.

ஒரு மூத்த பெண்மணி தலைமையில் ஏழெட்டு சேல்ஸ் பெண்மணிகள் வாசலில் கூடியிருந்தனர். ஒட்டிய கன்னங்கள், ஒடுங்கிய உடல்வாகு, ஏறலும் தாழலுமாகக் கட்டியிருந்த தரமில்லாத சேலைகள் என்று ஏழ்மையின் இலக்கணமாக அவர்களைப் பார்க்க மனம் சங்கடப்பட்டது.

தலைமை வகித்த பெண்மணி ஒரு பெரிய அட்டைப் பெட்டியிலிருந்து சோப்பு, ஷாம்பு வகையறாக்களைப் பிரித்துக் கொடுத்தபடி அவரவர் எந்தெந்த தெருவிற்குப் போய் விற்க வேண்டுமென்பதை விளக்கிக் கொண்டிருந்தாள்.

நான் அவர்களிடம் பேச்சுக் கொடுக்கலாமென்று நினைத்து "பண்டிகையாச்சே... இன்னிக்குமா வேலை பண்ணணும்?" என்றேன்.

"என்ன மாமி பண்றது... பண்டிகைன்னு நாங்க வீட்டிலே இருந்துட்டா வயத்துப் பொழப்பு கெட்டுடுமே" என்றாள் அந்த ஹெட் சேல்ஸ் உமன். எனக்குப் பரிதாபமாக இருந்தது.

புரட்டாசி பொன் உருகும் வெயிலில் நாயாய் நாலு வீடு ஏறி இறங்கினால்தான் இவர்களுக்கு இன்றைய வருமானம் என்ற நினைப்பு என்னை என்னவோ செய்தது.

"மாமி எல்லோருக்கும் குடிக்க கொஞ்சம் தண்ணி தர்றீங்களா" என்று ஒருத்தி கேட்க எனக்கு ஒரு எண்ணம் பளிச்சிட்டது.

"எல்லோரும் உள்ளே வாங்க" என்று அழைத்தேன். வைத்திருந்த பாயசத்தை பாலை விட்டுப் பெருக்கினேன். வடையையும் பாயசத்தையும் எல்லோருக் கும் கொடுத்தேன்.

"அடடே ஏன் மாமி வீண் சிரமம்?" என்று அவர்கள் சொன்னாலும் வயிறு ஆவலோடு ஏற்றுக் கொண்டதை முகம் காண்பித்தது. நானும் ஆத்மார்த்தமாக எல்லோருக்கும் வெற்றிலை பாக்கோடு நேற்று வாங்கி வைத்திருந்த 'ஹேண்ட் பேக்'குகளை கொடுத்தேன். வியப்போடு பெற்றுக் கொண்டபோது அவர்களின் மனம் வாழ்த்துவது முகத்தில் பளிச்சிட்டது.

"எங்களுக்கு என்ன சொல்றதுன்னே தெரியலே மாமி" என்று அவர்கள் மனநிறைவோடு வெளியேறினர். எனக்குப் பரம சந்தோஷம்.

"துர்கா நீ முதல் தெரு, லட்சுமி நீ கடைசி ரெண்டு தெரு, சரஸ்வதி நாலாவது தெரு உன் ஏரியா..." என்று ஹெட் லீடர் பெண்மணி வாசலில் சொல்லிக் கொண்டிருப்பது காதில் விழுந்தது.

அட, வீண் ஆடம்பரமில்லாமல் உள்ளன்போடு கொடுக்க நினைக்கையில் துர்கா, லட்சுமி, சரஸ்வதி ரூபங்களில் அல்லவா ஒன்பது மகளிர் பெற்றுக் கொண்டு போயிருக்கிறார்கள்! உண்மையில் இந்த வருட நவராத்திரி நிறைவைத் தந்திருக்கிறது.

# காரண காரியங்கள் நிறைந்தது நம் கலாச்சாரம்



சாரதா நவராத்திரி, வஸந்த நவராத்திரி, வாராஹி நவராத்திரி மற்றும் மாதங்கி நவராத்திரி என்று வருடத்தில் பல நவராத்திரிகள் தெய்வங்களை ப்ரீதிக்க இருந்தாலும் இலையுதிர் காலத்தில் வரும் இந்த நவராத்திரி போதுதான் தேவர்களே, வரம் வேண்டி அம்பாளை வழி படுகிறார்கள் என்கிறது தேவிமகாத்மியம். புராணங்கள், உட்புராணங்கள் மற்றும் ஸ்மிருதியிலும் இந் நவராத்திரி பலன்களைப் பற்றி மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளன. சக்திக்கு முக்கியத்துவம் கொடுத்து, ஆவாஹனம் பண்ணி மனதார வேண்டி வரம் பெறும் இந் நவராத்திரி இப் பாரதமெங்கும் இன்றளவும் கொண்டாடும் மிகப் பழமையான பண்டிகையாகும். இந்த நவதினங்களில் பூஜை, ஸ்லோகம் என்கிற தீவிர ஈடுபாட்டால் நம்மை நாமே 'சார்ஜ்' செய்து கொள்ள இப்பண்டிகை ஒரு காரணமாகிறது. 'சார்ஜ்' என்று இங்கே நாம் குறிப்பிடுவது - இக வாழ்வில் எதிர்படும் துன்பங்களை தாங்க எதிர்கொள்ள வெற்றியடைய, கொண்ட கொள்கையில் உறுதியாய் இருந்து இலட்சியத்தை நிறைவேற்ற நமக்குத் தேவைப்படும் சக்தியைத்தான். வடக்கே துர்கா பூஜை தென்னகத்தே நவராத்திரி.

இப் பண்டிகை பற்றி அதன் பூஜை பலன்களைப் பற்றி நம் புராணங்களும், உட்புராணங்களும் என்ன சொல்கின்றன:-

நவராத்திரி திருவிழாவின்போது அம்பிகையை உளமாற அர்ச்சித்து பூஜிப்பவர்கள் இம்மண்ணில் அனைத்து வகை செல்வங்களையும் பெறுவர் என்கிறது தேவி புராணம். கலிகா புராணத்தில் எவனொருவன் சோம்பேறியாய், விருப்பமின்றி அல்லது மதியீனத்தால் துர்கா நவராத்திரிகளை கொண்டாடாமல் போவானோ அவன் தேவியின் கோபத்திற்கு ஆளாகிறான் என்று ஒரு இடம் வருகிறது. எப்படி ஆதியில் ராஜா சுரதாவும், அவனது வியாபாரி சமிதியும் அவர்களது குரு சுமேதாஸ் அறிவுரைப்படி ஆற்று மணலால் தேவி உருவத்தைப் பிடித்து வைத்து வணங்கி விரதமிருந்து விரோதிகளை வெற்றி கொண்டார்களோ அதே பாணி இன்றளவும் வழி வந்து. நம் இகபுற விரோதிகளை எதிர்க்கும் வல்லமை பெற நாம் நவராத்திரியை கடைபிடித்து வரலாம். பவிஷ்ய புராணம் ஒரு படி மேலே போய் வேதங்களில் சொல்லப்பட்ட தியானங்களும் சாஸ்திரங்களும் நூற்றில் ஒரு பங்குகூட இந்த நவராத்திரி பூஜைக்கு ஈடாகாது என்று கூறுவதால் நவராத்திரி பூஜையின் மகிமையை நாம் உணர முடியும்.

பூஜை: ஆஷாட மாதத்திலிருந்து கார்த்திகா மாதம் வரை அனைத்து தெய்வங்களும் பொதுவாக உறங்கச் சென்றுவிடும் என்பது ஐதீகம். எனவே அஷ்வின மாதத்தில் உறங்கிக் கொண்டிருக்கும் தேவியை எழுப்புவதாக இருக்கும் இப் பூஜை மிகவும் விசேஷமானது. முதல் திதியில் மாவிலை கொண்டு அலங்கரிக்கப்பட்ட பாத்திரத்தில் தேங்காய் வைத்து அதை தேவியாகப் பாவித்து 16 வகை உபசரணைகளுடன் பூஜிக்க வேண்டும். நேரம் இருப்பவர்கள் இதை ஒன்பது நாட்களும் நியமத்தோடு கடை பிடிக்க உரிய பலனைப் பெறலாம்



• அபிராமசுந்தரம்

என்கிறது லிங்க புராணம். இந்த நவ நாட்களில் குங்குமத்தால், லலிதாசஹஸ்ர நாமத்தோடு ஜபித்து அம்பிகையை பூஜித்தால் சகல சௌ பாக்கியங்களும் கைவரப் பெறும் என்கிறது தேவி மகாத்மியம்.

தேவியின் மகாத்மியத்தை சஹஸ்ர நாமத்தை செவிகளால் கேட்டாலே போதும். உரிய பலனைப் பெறலாம் என்கிறது தேவி பாகவதம். ஒவ்வொரு நாளும் சஹஸ்ர நாமத்தைச் சொல்லவோ அல்லது கேட்கவோ அவகாசமில்லாதவர்கள் எட்டாவது நாளன்று 2 லிருந்து 10 வயதிற்குள் இருக்கும் கன்னிகா குழந்தைகளை குமாரிகா, திருமூர்த்தி, கல் யாணி, ரோஹிணி, கலிகா, சண்டிகா, ஷாம்பவி, துர்கா, சமுத்திரா- வாக பாவித்து அவர்களுக்குப் புது வஸ்திரம், பூ, தாம்பூலம் வளையல் கொடுத்து வழிபட்டால் உலக இன்பங்கள் அனைத்தையும் பெறுவர்.

ஆனால் சங்கரர் அருளிய 1008 ஸ்தோத்திரங்களைச் சொல்லி பூஜிக்க குறைந்தது 40 நிமிடங்கள் தேவைப்படும். காலைக் கடனை முடித்துக் கடமைகளை அவதியென்று செய்துவிட்டு வேலைக்குப் புறப்படும் வீட்டுப் பெண்களுக்கு இது சாத்தியப்படுமா? இல்லை 40 நிமிடங்களையும் ஒருமனதாக தேவி பாதத்தில் செலுத்தத்தான் முடியுமா? நிற்கும் ஊர்தியிலே ஓடிப் போய் ஏறும் இன்றைய காலத்தில் ஆர அமர காரியங்களை கவனிக்க நேரமிருக்கா? இத்தகைய பெண்மணிகளின் நலனை மனதிற் கொண்டோ என்னவோ சிருங்கேரி சாரதா பீடாதிபதி ஸ்ரீ பாரதி தீர்த்த சுவாமிகள் அவர்கள் துர்கா சந்திர கலா ஸ்துதி ஒன்றை அருளியிருக்கிறார். இந்த மந்த்ர - மாத்ருகஸ்துவா - தேர்ந்தெடுக்கப்பட்ட லலிதா 108 திருநாமங்கள் அடங்கியவை. இதை ஆத்மார்த்தமாக முனைப்போடு கூற 10 நிமிடங்கள் போதுமானது. தேவி சகஸ்ர நாமத்தில் உள்ள வீர்யம் அனைத்தும் இந்த 108 நாமங்களில் அடக்கம். மனப்பூர்வமாக இந்த நாமாவளியை சகோதரிகள் உச்சரித்து சகல செல்வங்களையும் நலமும் பெற அம்பிகையை வேண்டுகின்றோம்.

சகோதிரிகளின் நலம் வேண்டி, பம்பாயிலிருந்து வெளிவரும் தத்வலோக பத்திரிகை வெளியிட்ட இந்த துர்கா சந்திர கலா ஸ்துதி இங்கு கொடுக்கப்பட்டுள்ளது.

— கீதா மோஹன்

தகவல் தந்தவர் திரு. டாக்டர் அபிராம சுந்தரம், சமஸ்கிருத விரிவுரையாளர், விவேகானந்தா கல்லூரி.

## ஸ்ரீ பாரதி தீர்த்த ஸ்வாமிகளால் தொகுக்கப்பட்ட நாமாவளிகள்-

1. ஓம் ஸ்ரீ மாத்ரே நம:
2. ஓம் தேவ கார்ய - ஸமுத்யதாயை நம:
3. ஓம் தேவர்ஷி கணஸங்காத ஸ்தூயமானாத்ம - வைப்வாயை நம:
4. ஓம் பக்தஸௌபாக்யதாயின்யை நம:
5. ஓம் பக்திப்ரியாயை நம:
6. ஓம் பயாபஹாயை நம:
7. ஓம் ராகமதன்யை நம:
8. ஓம் மதநாசின்யை நம:
9. ஓம் மோஹநாசின்யை நம:
10. ஓம் மமதாஹந்த்ர்யை நம:
11. ஓம் பாபநாசின்யை நம:
12. ஓம் க்ரோதசமன்யை நம:
13. ஓம் லோபநாசின்யை நம:
14. ஓம் ஸம்சயக்ன்யை நம:
15. ஓம் பவநாசின்யை நம:
16. ஓம் ம்ருத்யுமதன்யை நம:
17. ஓம் துர்காயை நம:
18. ஓம் துக்கஹந்த்ர்யை நம:
19. ஓம் ஸுகப்ரதாயை நம:
20. ஓம் துஷ்டதூராயை நம:
21. ஓம் துராசாரசமன்யை நம:
22. ஓம் தோஷவர்ஜிதாயை நம:
23. ஓம் ஸர்வக்ஞாயை நம:
24. ஓம் ஸமானாதிகவர்ஜிதாயை நம:
25. ஓம் ஸர்வமந்த்ரஸ்வரூபிண்யை நம:





தாம்பாளத்தில் நீர் நிரப்பி பிரெஞ்ச் சாக் **(French Chalk)** பொடியை மேலாகத் தூவவும். (தேவையான வடிவில்). ஒரு மணி நேரத்திற்குப் பிறகு அதன் மேல் கலர்ப்பொடியால் கோலம் போடவும். முடிந்த பின் நகர்த்தக் கூடாது.

— உஷா





ரங்கோலி போடும்போது கையால் சீராகக் கலர்ப் பொடியைத் தூவ முடியாதவர்கள் சிறிய டீ வடிகட்டியால் பொடியை சலித்த வாறு தூவினால் 'நீட்'டாக வரும்.

— உஷா

26. ஓம் ஸர்வயந்த்ராத்மிகாயை நம:
27. ஓம் ஸர்வதந்த்ர ரூபாயை நம:
28. ஓம் மஹாலக்ஷ்ம்யை நம:
29. ஓம் மஹாபாதகநாசின்யை நம:
30. ஓம் மஹாத்ரிபுரஸுந்தர்யை நம:
31. ஓம் சராசர ஜகந்நாதாயை நம:
32. ஓம் பார்வத்யை நம:
33. ஓம் ஸ்ருஷ்டிகர்த்ர்யை நம:
34. ஓம் கோப்த்ர்யை நம:
35. ஓம் சம்ஹாரிண்யை நம:
36. ஓம் திரோதானகர்யை நம:
37. ஓம் அனுக்ரஹதாயை நம:
38. ஓம் ஆப்ரம்மகீடஜனன்யை நம:
39. ஓம் வர்ணாச்ரமவிதாயின்யை நம:
40. ஓம் நிஜாக்ஞாரூபநிகமாயை நம:
41. ஓம் புண்யாபுண்ய பலப்ரதாயை நம:
42. ஓம் ராக்ஷஸக்ன்யை நம:
43. ஓம் கருணாரஸ ஸாகராயை நம:
44. ஓம் வேதவேத்யாயை நம:
45. ஓம் ஸதாசாரப்ரவர்த்திகாயை நம:
46. ஓம் ஸத்யப்ரஸாதின்யை நம:
47. ஓம் சிவங்கர்யை நம:
48. ஓம் சிஷ்டேஷ்டாயை நம:
49. ஓம் சிஷ்டபூஜிதாயை நம:
50. ஓம் காயத்ர்யை நம:
51. ஓம் நிஸ்ஸீம மஹிம்னே நம:
52. ஓம் ஸமஸ்தபக்த ஸுகதாயை நம:
53. ஓம் புண்யலப்யாயை நம:
54. ஓம் பந்தமோசன்யை நம:
55. ஓம் ஸர்வ வ்யாதிப்ரசமன்யை நம:
56. ஓம் ஸர்வம்ருத்யு நிவாரிண்யை நம:
57. ஓம் கலிகல்மஷநாசின்யை நம:
58. ஓம் நித்யத்ருப்தாயை நம:
59. ஓம் மைத்ர்யாதி வாஸனாலப்யாயை நம:
60. ஓம் ஹ்ருதயஹஸ்தாயை நம:
61. ஓம் தைத்யஹந்த்ர்யை நம:
62. ஓம் குருமூர்த்யை நம:
63. ஓம் கோமாத்ரே நம:
64. ஓம் கைவல்யபததாயின்யை நம:
65. ஓம் த்ரிஜகத்வந்த்யாயை நம:
66. ஓம் வாகீச்வர்யை நம:
67. ஓம் ஞானதாயை நம:
68. ஓம் ஸர்வவேதாந்தஸம்வேத்யாயை நம:
69. ஓம் யோகதாயை நம:
70. ஓம் நிர்த்வைதாயை நம:
71. ஓம் த்வைதவர்ஜிதாயை நம:
72. ஓம் அன்னதாயை நம:
73. ஓம் வஸுதாயை நம:
74. ஓம் பாஷாரூபாயை நம:
75. ஓம் ஸுகாராத்யாயை நம:
76. ஓம் ராஜராஜேச்வர்யை நம:
77. ஓம் ஸாம்ராஜ்யதாயின்யை நம:
78. ஓம் ஸர்வார்த்த தாத்ர்யை நம:
79. ஓம் ஸச்சிதானந்த ரூபிண்யை நம:
80. ஓம் ஸரஸ்வத்யை நம:
81. ஓம் தக்ஷிணாமூர்த்தி ரூபிண்யை நம:
82. ஓம் ஸநகாதி ஸமாராத்யாயை நம:
83. ஓம் நாம பாராயணப்ரீதாயை நம:
84. ஓம் மித்யாஜகததிஷ்டானாயை நம:
85. ஓம் ஸ்வர்கா பவர்க்கதாயை நம:
86. ஓம் பரமந்த்ர விபேதின்யை நம:
87. ஓம் ஸர்வாந்தர்யாமின்யை நம:
88. ஓம் ஜன்ம ம்ருத்யு ஜராதப்த
ஜனவிச் ராந்திதாயின்யை நம:
89. ஓம் ஸர்வோபநிஷத் உத்குஷ்டாயை நம:
90. ஓம் லீலாவிக்ரஹதாயின்யை நம:
91. ஓம் அஜாயை நம:
92. ஓம் க்ஷயவிநிர்முக்தாயை நம:
93. ஓம் க்ஷிப்ரப்ரஸா தின்யை நம:
94. ஓம் ஸம்ஸாரபங்க நிர்மக்ந -
ஸமுத்தரண - பண்டிதாயை நம:
95. ஓம் தனதான்ய விவர்தின்யை நம:
96. ஓம் தத்வமர்த்த ஸ்வரூபிண்யை நம:
97. ஓம் ஸர்வாபத்விநிவாரிண்யை நம:
98. ஓம் ஸ்வபாவமதுராயை நம:
99. ஓம் ஸதாதுஷ்டாயை நம:
100. ஓம் தர்மவர்தின்யை நம:
101. ஓம் ஸுவாஸின்யை நம:
102. ஓம் ஸுவாஸின்யர்ச்சன ப்ரீதாயை நம:
103. ஓம் வாஞ்சிதார்த்த ப்ரதாயின்யை நம:
104. ஓம் அவ்யாஜ கருணா மூர்த்தயே நம:
105. ஓம் அக்ஞானத்வாந்ததீபிகாயை நம:
106. ஓம் ஆபாலகோபவிதிதாயை நம:
107. ஓம் ஸர்வானுல்லங்க்யசாஸனாயை நம:
108. ஓம் லலிதாம்பிகாயை நம:

# முதல் குழந்தையைக் கவனியுங்கள்!



டும்பத்தில் பிறக்கப் போகும் இரண்டாவது குழந்தைக்காக, முதல் குழந்தையைத் தயார்ப் படுத்துவது மனோ ரீதியாக மிக முக்கியத்துவம் வாய்ந்தது. ஏனென்றால், இத்தனை நாட்கள், பெற்றோரின் கவனம், அன்பு போன்றவை முழுமையாக முதல் குழந்தை மீது செலுத்தப்பட்டிருக்கும். இரண்டாவது குழந்தை பிறந்தவுடன், முதல் குழந்தை மீது பெற்றோர் செலுத்தும் அன்பு, பாசம் குறைந்து விடுகிறது என்றல்ல. அவர்களின் கவனம் இரண்டாவது குழந்தைக்கும் தேவைப்படுவதால், முதல் குழந்தையின் மீதான கவனம் சற்றே சிதறுகிறது. அவ்வளவு தான்.

முதல் குழந்தையைத் தயார்ப் படுத்துவது, இரண்டாவது குழந்தை பிறக்க 2 (அ) 3 மாதங்கள் இருக்கும்போதே ஆரம்பிக்கப்பட வேண்டும். இரண்டாவது குழந்தை பிறந்தவுடன், முதல் குழந்தை தானாகவே சூழ்நிலைக்கேற்ப அட்ஜஸ்ட் செய்து கொண்டுவிடும் என்று ஒரு பொதுவான கருத்து நிலவி வருகிறது. இது தவறு. சில சமயங்களில், இரண்டாவது குழந்தை பிறந்தவுடன், முதல் குழந்தை நடந்து கொள்ளும் விதத்தில் இலேசான மாறுதல்கள் ஏற்படலாம். இம்மாறுதல்களைப் பற்றிப் பீதியடைய வேண்டியதில்லை.



தனக்குத் தம்பியோ (அ) தங்கையோ பிறக்கப் போகிறது என்று தெரிந்தவுடன் சில குழந்தைகள் யாரிடமும் பேசாமல் உம்மணா மூஞ்சியாக ஆகி, 'மூட்' அவுட் ஆகிவிடுவதும் உண்டு. இந்த இரண்டு நிலைகளும், குழந்தை, தம்பி/தங்கை பிறக்கப் போகும் செய்திக்கு, தன்னை, இயற்கையாக, சாதாரணமாக அட்ஜஸ்ட் செய்து கொள்ளத் துவங்குவதின் அறிகுறி என்று மனோதத்துவ நிபுணர்கள் கூறுகிறார்கள்.

இரண்டாவது குழந்தை பிறக்கும்போது, முதல் குழந்தைகளில் 90% சதவீதத்தினர் 'மூட்' மாறுதல்கள், மன உளைச்சல் காரணங்களால் அலைக்கழிக்கப்படுகின்றன என்று மனோதத்துவ நிபுணரும், உடன்பிறப்புகளின் நடந்து கொள்ளும் விதங்களையும் பற்றிய ஆராய்ச்சியில் தனித் தேர்ச்சி பெற்றவருமான டாக்டர் ஸ்டீஃபன் பேங்க் என்பவர் கூறுகிறார். எடுத்துக்காட்டாக டாய்லெட்டில் மாத்திரமே, மலம் மூத்திரம் கழிக்கப் பயிற்சி பெற்று அதைப் பின்பற்றி வந்த குழந்தை, இரண்டாவது குழந்தையின் வரவால், தன் உடைகளையோ (அ) படுக்கையையோ நனைத்துவிட ஆரம்பிப்பார்கள். (அ) கட்டை விரல் சூப்புவதை நிறுத்திவிட்ட குழந்தை மறுபடியும் விரல் சூப்பத் தொடங்கும்.



இரண்டாவது குழந்தை பிறந்தவுடன், முதல் குழந்தை, ஒருசில நாட்கள் எதிலும் ஈடுபடாமல், ஒரு மாதிரியாக இருப்பதும் நல்ல அறிகுறியே. ஏனென்றால், குழந்தையின் இந்தப் போக்கு, குழந்தை குடும்பத்தில் ஏதோ மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்பதைப் புரிந்து கொண்டுள்ளது என்பதை உணர்த்துகிறது.

முதல் குழந்தைக்கும் இரண்டாவது குழந்தைக் குமிடையே ஒன்றிலிருந்து நான்கு ஆண்டுகள் வித்தியாசம், சில சமயங்களில் அதிகமாகவே இருக்கலாம். இரண்டாவதாகப் பிறந்த குழந் தைக்கு ஐந்து (அ) ஆறு மாதங்கள் ஆகும் போது, மூத்த குழந்தை, தான் பெரியவன்/ பெரியவள் என்ற ஒருவிதப் பெருமையுடன் நடந்து கொள்ளத் தொடங்குகிறார்கள்.

மூத்த குழந்தையின் போக்கு எந்த அள வுக்கு மாறுபடுகிறது என்பதை இரண்டு குழந் தைகளுக்குமிடையே உள்ள வயது வேறுபாடு நிர்ணயிக்கிறது. மூத்த குழந்தை வயதில் மிகச் சிறியதாக இருந்தாலோ (அ) எல்.கே.ஜி.,/ யு.கே.ஜி. படிக்கும் குழந்தையாக இருந்தாலோ, தங்கள் பெற்றோர் தங்களிடமிருந்து வெகு நாட்கள் விலகியிருப்பதைப் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள். பெற்றோர் தன்னிடம் அதிக நேரம் கழிக்காமல், புதிய குழந்தைக்கே அதிக கவனம் செலுத்துவதைப் பொறுக்காமல் – "குழந்தையை எப்போது திருப்பி அனுப்பப் போகிறீர்கள்?" என்று கூடக் கேட்கலாம் முதல் குழந்தை. இரண்டாவதைத் திருப்ப அனுப்ப முடியாது, அது நிரந்தரமாகத் தன் குடும்பத்தில் தான் இருக்கும் என்பதைப் புரிந்து கொள்ள முடியாத வயது. பெற்றோர் தன் மீது செலுத்தி வந்த முழு கவனத்தையும், அன்பையும், இப் போது இன்னொரு ஜீவனோடு பகிர்ந்து கொள்ள வேண்டியிருக்கிறதே என்ற எண் ணத்தால் மூத்த குழந்தைக்குக் கோபம் வரு கிறது. கூடவே பயமும் உண்டாகிறது.



பெற்றோர், முதல் குழந்தையிடம் "இதோ பார், நீ இப்போ அண்ணா (அ) அக்கா, பெரி யவன் (அ) பெரியவள், சின்னப் பாப்பாவோடு விளையாடலாமே" என்றெல்லாம் சொல்வ தால் ஏந்தப் பயனுமில்லை. சில சமயங்களில், மூத்த குழந்தை (இரண்டாவது குழந்தை பிறந்த பிறகு) தாய், தன் பார்வையிலிருந்து விலகவே கூடாது என்று அடம்பிடிப்பதும் உண்டு.

இரண்டாவது குழந்தை கொஞ்சம் வளர்ந்த வுடன், அக்குழந்தையிடம், மூத்த குழந்தைக்குக் கேட்பதுபோல், "இதோ பார்; கண்ணா, இனிமேல் நான் அண்ணாவோடு (அ) அக்கா வோடு, கொஞ்சம் அதிக நேரம் இருப்பேன், நீ எனக்காகக் காத்திருக்க வேண்டும்," என்று கூறுவது, மூத்த குழந்தைக்குக் கொஞ்சம் ஆறுதலாக இருக்கும்.

இரண்டாவது குழந்தை பிறக்கும்போது, முதல் குழந்தையால் ஏற்படும் பிரச்னைகளைப் போக்க, மனோதத்துவ நிபுணர்களும், அனுபவ முள்ள தாய்மார்களும், சில வழிமுறைகளைக் கூறுகிறார்கள். அவைகளில் சில –

இரண்டாவது குழந்தை பிறப்பதற்கு முன்பேயே முதல் குழந்தையைத் தயார்ப் படுத்த முயற்சி செய்வது நல்லது. முதல் குழந் தைக்காக ஒரு ஆல்பம் தயாரியுங்களேன். தற்போது 'பர்த்டே' (பிறந்த நாள்) கொண்டாடு வது எல்லாக் குடும்பங்களிலும் ஃபாஷன் ஆகியுள்ளது. இம்மாதிரியான விசேஷங்களில் எடுக்கப்பட்ட போட்டோக்கள், முதல் குழந்தையுடன் நீங்கள் வெளியூர் சென்ற போது, உறவினர், நண்பர்களுடன் எடுத்துக் கொண்ட போட்டோக்கள் ஆகியவற்றை இந்த ஆல்பத்தில் சேர்க்கவும். இந்தப் போட்டோக் களை முதல் குழந்தை பார்க்கும் போது, தான் தன் பெற்றோருக்குச் செல்லம், தன் இடத்தை, புதிதாக வரப்போகும் குழந்தை பிடித்துக் கொள்ள முடியாது என்ற எண்ணம் குழந் தைக்கு வரும்.

இந்த ஆல்பம், முதல் குழந்தைக்கும், தாய்க்கும், இருவருக்குமே நன்மை புரிகிறது. இந்த ஆல்பத்தை முதல் குழந்தையிடம் காட்டி அவன்/அவள், குழந்தைப் பருவத்தில் எப்படி இருந்தான்/ இருந்தாள், அவன்/அவள் ஆஸ்பத்திரியில் பிறந்தபோது, யார் இருந் தார்கள், எப்போது அவன்/அவள் வீட்டுக்கு



என் இரண்டு வயது மகனுக்கு முகம் முழுதும் பால் பருக்கள் என்னும் புள்ளிகள் நிறைய கட்டிகளாக வந்து இருந்தன. டாக்டரிடம் காட்டியும் சரிவரவில்லை. விரதங்களும் நோன்புகளும் இருக்கும்படி பலர் கூறினர். ஆனால் ஒரு வயதான பெரியவர் சொன்ன மருந்து கைமேல் பலன் தந்தது.

தாயம் விளையாடும் சோழிகள் 3 அல்லது 4 எடுத்து எலுமிச்சை சாறில் மூழ்குமாறு பிளாஸ்டிக் கிண்ணத்தில் போட்டு அதனை தினந்தோறும் தடவி வந்தோம். தற்போது பூரண குணமாகி விட்டது.

- சாந்தி நீலமேகம்



அழைத்துச் செல்லப்பட்டான், அவள்/அவன் பிறந்தவுடன் யார், யார் பார்க்க வந்தார்கள், அவள்/அவன் சதா அழுதுகொண்டே இருந்தது, சாப்பிட, தூங்க எல்லாவற்றுக்கும், இது போன்றவற்றைக் கதை போல, முதல் குழந்தையிடம் கூறுங்களேன். இது, குழந்தைக்கு, தன் தாய் தன் மீது எத்தனை அன்பு வைத்திருக்கிறாள், தான் பிறந்தது முதல் வீட்டுக்கு வரும் வரை, நடந்த நிகழ்ச்சிகள் இவை எல்லாவற்றையும் நினைவில் வைத்திருக்கிறாள் என்று நினைத்துப் பார்க்க, ஒரு வாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கும்.

மூத்த குழந்தைக்குப் புரியாத வயதில், தம்பியோ/தங்கையோ பிறந்து தாய் தன் இரண்டாவது குழந்தை மீது அதிக கவனம் செலுத்தும்போது (குறிப்பாக பகல் நேரத்தில், வீட்டில் தந்தையும் இல்லாதிருக்கும்போது), தாய் தன்னை அலட்சியப்படுத்துவதாக நினைத்து முரண்டு பிடிக்கலாம். அடம்பிடிப்பது இயற்கையே. முடிந்தவரை, தந்தை முதல் குழந்தையோடு இருக்க முயற்சித்தால், தன்னை யாரும் மறந்து விடவில்லை என்று குழந்தை சமாதானமாக இருக்கும்.

புதுக்குழந்தையைப் பார்க்க வருபவர்கள் ஏதாவது பரிசு கொண்டு வருவது வழக்கம். அப்படி அவர்கள் கொண்டு வரும்போதெல்லாம், முதல் குழந்தைக்காக, நீங்கள் ஏதாவது பரிசு வாங்கிக் கொடுக்கவும். இது, குழந்தையைப் பெருமை கொள்ளச் செய்யும். இம்மாதிரி, முதல் குழந்தைக்கும் பரிசுப் பொருள் கொடுப்பது, அக்குழந்தை, புதுக் குழந்தை மீது பொறாமை கொள்வதைத் தடுக்கிறது.

மேலும், புதுக்குழந்தைக்குத் தேவைப்படும், சிறுசிறு பொருள்களை, முதல் குழந்தையை விட்டே, தாய் பெற்றுக் கொள்ள முயற்சி செய்ய வேண்டும். புதுக்குழந்தையைக் குளிப்பாட்டி விட்டு, பவுடர் போடும் போது, முதல் குழந்தையையும், சிறுகுழந்தைக்குப் பவுடர் போடச் செய்யலாம். தாய் தாலாட்டுப் பாடும்போது, முதல் குழந்தையையும் பாடச் செய்து, புதுக்குழந்தையைத் தூங்க வைக்கலாம்.

இவ்வாறு செய்வதனால், புதுக்குழந்தை அம்மாவுடையது மட்டுமல்ல, தன்னுடையதும் தான் என்ற உணர்வு குழந்தைக்கு ஏற்பட்டு, புதுக்குழந்தையை, மிக அதிக அன்புடன் நேசிக்கத் தொடங்கும். மேலும் குழந்தை யைப் பாதுகாக்கவும் முயற்சி எடுத்துக் கொள்ளும்.

- ராஜி

பிரட் ஸ்லைஸ் நடுவில் காய்கறிகளை வைத்து 'சேண்ட்விச்' செய்து சாப்பிடுவது போல் நூடுல்ஸ், மேகிநூடுல்ஸை நாம் எப்போதும் போல் தயாரித்துக் கொண்டு 'பிரட் ஸ்லைஸ்' நடுவில் வைத்துச் சாப்பிட நன்றாக இருக்கும்.

- சுசீலா நந்தகுமார்.



# நாத்தனார்களே! நான்கு வார்த்தை

**நா**த்தனார்களே! நான்கு வார்த்தை கூற எண்ணினேன். ஆனால் அது நாற்பது வார்த்தைகளாக வளர்ந்து விட்டது. மன்னிக்கவும்.

அண்ணன் மனைவியாக இருந்தாலும், தம்பி மனைவியாக இருந்தாலும், நாத்தனார் ஊரிலிருந்து வருகிறார் என்றாலே ஒரு எதிர்பார்ப்பு இருக்க வேண்டும். அதை விடுத்து ஐயோ தலைவலி ஆரம்பமா நாளையிலிருந்து என எண்ணும்படி இருக்கக் கூடாது.

கிரிஜாவின் குழந்தைக்குப் பிறந்த நாள் என்று உமா ஊரிலிருந்து வந்திருந்தாள். உமா கிரிஜாவின் நாத்தனார். அண்ணன் தன் மனைவியுடன் குழந்தைக்குப் புதுத்துணி வாங்க புறப்பட்டான். உமாவும் உடன் கிளம்பினாள். கடையில் கிரிஜா தனக்குப் பிடித்ததைத் தேர்ந்தெடுக்க, உமா அதை நன்றாக இல்லை என மறுத்துக் கூறி, வேறு ஒன்றைத் தேர்ந்தெடுக்க கிரிஜாவும் மறுக்கத் தோன்றாமல், உமா தேர்ந்தெடுத்த உடையுடன் கடையை விட்டுக் கிளம்பினாள். இன்றும் கிரிஜாவிற்கு ஒரு மனக்குறை தன் குழந்தையின் முதல் பிறந்த நாளுக்கு தனக்குப் பிடித்த உடை தேர்ந்தெடுக்க முடியவில்லையே என்று. இங்கு உமா அவர்களுடன் உடை தேர்ந்தெடுக்கச் சென்றாலும், அவர்கள் போக்கில் விட்டு விட்டுத் தனது அபிப்பிராயத்தைக் கூறுவதோடு நிறுத்தியிருக்க வேண்டும். தானே முனைந்து உடை தேர்ந்தெடுப்பதில் தீவிரம் காட்டி இருக்க வேண்டாம்.




அடுத்து நாத்தனார் ராதா வருடம் தவறாது விடுமுறையைக் கழிக்க பிறந்தகம் செல்பவள். தம்பியின் மனைவி குழந்தை பிறந்து மூன்றே மாதங்களில் மாமியார் வீட்டிற்குக் குழந்தையுடன் வந்து விட்டாள். தம்பி மனைவி குழந்தையுடன் வந்த அந்த வருடம் மட்டும் ராதா பிறந்தகம் செல்லவில்லை. காரணம் வேலை பளு தன் உடல்நிலையைப் பாதித்து விடக்கூடாதே என்ற காரணம்தான். இதுவரை விடுமுறை தவறாது வருபவள் இம்முறை வரவில்லை என்றதுமே தம்பியும், தம்பி மனைவியும் புரிந்து கொண்டனர்.

"ஏம்மா, நீயே முழு வேலையும் செய்து உடம்பைக் கெடுத்துக் கொள்கிறாய்? நீ ஓய்வு எடுத்துக் கொள். நானெல்லாம் சீக்கிரம் எழுந்து மாமியாரை தொந்தரவு செய்யாமல் எல்லாம் நானே செய்து விடுவேன்" - சொல்பவள் ஒரு வித்யா.

இங்கு இந்த மருமகள் வேலைக்குச் செல்பவள். சிறிது தாமதமாக எழுந்தாலும், முகம் சுளிக்காமல் வீட்டு வேலைகளை கவனிப்பவளே! குட்டையைக் குழப்ப நாத்தனார் வித்யா வந்து விட்டாளே! ஒழுங்காக மருமகளுடன் வேலையைப் பகிர்ந்து செய்து வந்த மாமியார் மகளின் பேச்சால் மனம் மாறினாள். விளைவு விட, குழந்தைகள் கலாட்டாவை சமாதானப்படுத்தும் வேலையும் சேர, அண்ணன் மனைவி சாரதாவிற்கு ஓய்வு இல்லாது உடல்நலமும் கெட்டது. மோகனாவோ, சாப்பிடுவது, புத்தகங்கள் படிப்பது, டி.வி. தூக்கம் என நன்றாக பொழுதை போக்கினாள். எப்படி இருக்கிறது இந்த நாத்தனாரின் பிறந்தக விஜயம்!



நாத்தனார்கள் பிறந்தகம் வருகிறார்கள் என்றாலே, பிறந்தகத்தில் இருக்கும் அனைவருக்கும் ஒரு மகிழ்ச்சி கலந்த எதிர்பார்ப்பு இருந்தால்தான் நாத்தனார் நல்ல நாத்தனார் என அர்த்தம். அதைத் தவிர்த்து நாத்தனார் வருகிறாள். என்றாலே பிறந்தகத்தில் பூகம்பம் ஏற்பட்டால்? மேலே குறிப்பிட்ட குடும்பம் இரண்டாகப் பிரிந்தது. இது நாத்தனார் வித்யாவின் கைங்கர்யமே அன்றி வேறென்ன?



பல வருடங்களாக உபயோகத்தில் இருந்து வந்த கிரைண்டர் ரத்னா திருமணமாகி வந்த இரு மாதங்களில் சீர்கெட, 'இத்தனை வருடங்கள் நன்றாகத்தானே இருந்தது. யார் வந்தவேளையோ' இது நாத்தனார் கீதா.

'என்னம்மா நீ, நானே ரெஸ்ட் எடுக்க வந்திருக்கிறேன்' என்று மழலைப் பட்டாளங்களுடன் வந்த மோகனா ஒரு வேலையும் செய்யாமல் இருந்ததோடல்லாமல், குழந்தைகளையும் பாட்டி வீடுதானே என்று கண்டிக்காமல் நாத்தனார்களில் ஒருவராக நீங்கள் இல்லாமல் இருக்க சகோதரிகளே உங்களுக்கு என்னுடைய வாழ்த்துக்கள்.

— விசாலாட்சி

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / MS (S) 231/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS / (S) 9 * Registered as a Newspaper in Srilanka
Supplement to the Mangayar Malar Oct '97 issue

பிரமிக்க வைக்கும் வகைகள்



**தனலக்ஷ்மி ஜுவெல்லர்ஸ்**

தங்கமான கடை

59, உஸ்மான் ரோடு, தி. நகர்,
(பனகல் பார்க் அருகில்),சென்னை 600 017.
போன்: 434 5242, 434 5293

Registered with the Registrar of Newspaper of India under No. 30309/75 * Registered No. TN / MS (S) 231/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS / (S) 9 * Registered as a Newspaper in Srilanka